இலக்கிய வரிசை-5

# பதினெண் கீழ்க்கணக்கும் தமிழர் வாழ்வும்

ஆசிரியர்

தமிழறிஞர் சாமி. சிதம்பரனார்

வெளியிடுபவர் :
திருமதி சிவகாமி சிதம்பரனார்




சிவகாமி சிதம்பரனார்
இலக்கிய நிலையம்
19, சவுராஷ்டிர நகர் 7 - வது தெரு
சென்னை - 600 094

# முன்னுரை

சங்க நூல்கள் பெரும்பாலும், காதலைப் பற்றியும் அரசியலைப் பற்றியுமே வலியுறுத்திக் கூறுகின்றன. இவ்விரண்டைப் பற்றிக் கூறும் பாடல்களிலும் நூல்களிலும், அறநெறியைப் பற்றிய செய்திகளும் ஆங்காங்கே கலந்து காணப்படுகின்றன; நல்லொழுக்கத்தை வலியுறுத்தும் நீதி மொழிகளும் அமைந்திருக்கின்றன. ஆயினும் நீதிகளைப் பற்றி மட்டும்—ஒழுக்கத்தைப் பற்றி மட்டும் தனியாகக் கூறப்படும் சங்க நூல்கள் இல்லை.

முதல் முதலில் ஒழுக்கத்தைப் பற்றித் தனித்தனியாக எழுதப்பட்ட நூல்கள், பதினெண் கீழ்க்கணக்கு நூல்களின் தொகுதியிலேதான் காணப்படுகின்றன. பதினெண் கீழ்க்கணக்கில் உள்ள பதினெட்டு நூல்களிலே நீதி நூல்கள் பதினொன்று; இது குறிப்பிடத் தக்கது.

இச்சமயத்தில் ஒரு உண்மையை நாம் மறந்துவிடக் கூடாது. சைன—பௌத்த மதங்கள் தமிழ் நாட்டில் மிகுதியாகப் பரவிய பிறகுதான் ஒழுக்கத்தைப் பற்றித் தனியாகத் தமிழ் நூல்கள் எழுதப்பட்டன. சமணமும் பௌத்தமும் ஒழுக்க நெறியையே அடிப்படையாகக் கொண்டவைகள். அவைகள் கடவுள் நெறியைப் பற்றியோ பக்தி நெறியைப் பற்றியோ கவலைப்படுவதில்லை; ஆதலால் அக்காலத்தில அற நூல்கள் பல பிறந்தன.

சமண — பௌத்த மதங்களுக்குத் தமிழகத்திலே எதிர்ப்புத் தோன்றிய காலத்தில் பக்தி மார்க்கத்தை வலி யுறுத்தும் நூல்களே மிகுதியாகத் தோன்றின. பக்தி மார்க்கத்தைப் 'பரப்பியதன் மூலமே சமண பௌத்த மதங்களைத் தமிழகத்தில் முறியடித்தனர்.

நாயன்மார்களின் பாடல்களும் ஆழ்வார்களின் பாசுரங்களும் சமண பௌத்த மத எதிர்ப்புக் காலத்தில் எழுந்தவைகள். அவைகள், பத்தி நெறியையே சிறப்பாக வற்புறுத்துகின்றன. இவைகளுக்குப் பின் பிறந்த இராமாயணம், பெரியபுராணம், கந்தபுராணம் போன்ற காவியங்களும் பக்தி மார்க்கத்தைப் பரப்பும் காவியங் களாகவே காணப்படுகின்றன.

ஆகவே, பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் பிறந்து சில நூற்றாண்டுகள் வரையிலும் தமிழகத்தில் புதிய நீதி நூல்கள் தனியாக எழுதப்படவில்லை; தொகுக்கப்பட வில்லை. பக்தி நூல்கள் மட்டுமே பெருகி வளர்ந்து வந்தன.

பக்தி மார்க்கம் பரவி, சமண—பௌத்த நெறிகளின் வேகம் குறைந்தபின் மீண்டும் சில நீதி நூல்கள் தோன் றின. அவைகள் அவ்வையாரால் இயற்றப்பட்ட **ஆத்தி சூடி**, **கொன்றை வேந்தன்**, **மூதுரை**, **நல்வழி** உலக நாத னார் இயற்றிய **உலகநீதி** போன்ற நூல்களே யாகும்.

இந்நூல்களுக்குப் பின்னே தோன்றிய நூல்கள் சில. அவைகளுள் அதிவீரராம பாண்டியனால் இயற்றப்பட்ட **வெற்றி வேற்கை**, குமர குருபர சுவாமிகளால் இயற்றப் பட்ட **நீதிநெறி விளக்கம்**, சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய **நன்னெறி** - இவைகள் குறிப்பிடத் தக்கவை. இவற்றுள் நீதி நெறி விளக்கம் நூறு வெண்பாக்களைக் கொண்டது. இதைத் திருக்குறளின் சாரம் என்று சொல்ல லாம்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுக்குப் பின்னே தோன்றிய நீதி நூல்கள் எல்லாம், பெரும்பாலும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களைப் பின்பற்றி எழுதப்பட்டவைகள்தாம். இவைகள் பொதுவான நீதிகளையே கூறுகின்றன. அனைவர்க்கும் பொதுவான அறங்களை உரைப்பதே தமிழ்நூல் மரபாகும்.

இவற்றுள் வெற்றிவேற்கை, உலகநீதி போன்ற சிலவற்றில் வருணாசிரம தரும வாசனையும் வீசுகின்றது; காரணம் அந்நூல்கள் பிறந்த காலத்துச் சூழ்நிலையாக இருக்கலாம்.

அதிவீர ராம பாண்டியன், குமரகுருபரர், சிவப்பிரகாசர் முதலியவர்களும் பக்தி நெறியை வலியுறுத்தும் பாடல்களைத்தான் மிகுதியாக இயற்றியிருக்கின்றனர். ஆயினும் அவர்கள் ஒழுக்கத்தை வலியுறுத்தும் நூல்களையும் இயற்றியிருப்பது குறிப்பிடத்தக்கது.

பக்தி மார்க்கம் பரவிய பின் அவ்வையார் நீதி நூல்கள், குமரகுருபரர், சிவப்பிரகாசர், அதிவீர ராம பாண்டியன் நூல்கள் பிறந்தன. இந்நிலையை எண்ணிப்பார்த்தால், சமண—பௌத்தர்களின் அறநெறியும், வைதீகத்தின் பக்தியும் கலந்த நெறியே வைதீக சமயமாகப் பரவியது என்று கொள்ளலாம்.

தமிழ்ப் புலவர்கள் இடைக் காலத்திலே பக்தியும் ஒழுக்கமும் கலந்த நூல்களைத்தான் மிகுதியாக எழுதிக் குவித்தார்கள். இவைகள் புராணங்கள், அந்தாதிகள், கலம்பகங்கள், மாலைகள். பிள்ளைத்தமிழ்கள் என்ற பல பெயர்களிலே குவிந்து கிடக்கின்றன.

பிற்காலத்திலே சதகங்கள் என்ற பெயரிலே பல நூல்கள் தோன்றின. அவைகள் பலவும் நீதிகளையே வலி

யுறுத்துகின்றன. ஆனால் இச்சதகங்கள் பெரும்பாலும் வடமொழியில் உள்ள ஸ்மிருதிகளைப் பின்பற்றி எழுதப் பட்டவை. அறப்பளீசுர சதகம், குமரேச சதகம், தண் டலையார் சதகம் முதலிய நூல்களைப் படித்துப் பார்ப் போர்க்கு இவ்வுண்மை விளங்கும்.

சதகங்கள் நூறு பாட்டுக்கள் கொண்டவை; ஏதேனும் ஒரு தெய்வப் பெயரை இறுதியிலே வைத்துப் பாடப்பட் டவை. இதற்கு மாறாகப் பாடுவதும் உண்டு. இன்று தமிழில் உள்ள சதக நூல்கள் பெரும்பாலும் பொது அறங் களையும் வருணாசிரம தரும நீதிகளையும் கூறுகின்றவை. பழைய தமிழ்நூல் மரபுக்கு மாறுபட்டவை. ஆயினும் சிறந்த பல நீதிகளை இச் சதகங்களிலே காணலாம்.

ஆகவே, தமிழிலே பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், இவைகளுக்குப் பின்னே தோன்றிய அவ்வையாரின் நூல்கள், அதன்பின் தோன்றிய அதிவீர ராம பாண்டியன் நூல், அதன்பின் பிறந்த குமரகுருபரர் நூல், சிவப் பிரகாசர் நூல், அண்மையிலே பிறந்த சதகங்கள், இவை களே அறநூல்களாக விளங்குகின்றன.

பின்னே பிறந்த அறநூல்களுக்கெல்லாம் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களே வழிகாட்டியவை. இந்நூல்களிலே கொல்லாமை, கள்ளுண்ணாமை, பொய்யாமை, காமம், இன்மை, கள்ளாமை என்னும் சீலங்கள் வலியுறுத்தப்படு கின்றன. சமணர்களும் பௌத்தர்களும் இவற்றை ஐவகைச் சீலம் என்பர். இவைகளே பஞ்சசீலம். இன்னும் பல சிறந்த அறநெறிகளும் அந்நூல்களிலே காணப்படு கின்றன.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலே கூறப்படும் அறங்கள் எல்லாம் தமிழர் அறமா? வேறிடத்திலிருந்து தமிழகத்தில் புகுந்த அறமா என்று வழக்கிட வேண்டிய

தில்லை. அவைகள் நெடுங்காலமாகத் தமிழ் மக்களால் போற்றப்பட்டு வருகின்றன; ஆகையால் அவைகள் தமிழர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட அறங்கள் என்று தான் கொள்ளவேண்டும்.

இத்தகைய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களைப் பற்றித் தனித்தனியாகக் கூறுவதே இந்நூல்; இதைப் படிப்பதன் மூலம் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களின் சிறப்பையும் கொள்கையையும் உணர்ந்துகொள்ளலாம். பத்துப்பாட்டு, எட்டுத் தொகைபற்றிய நூல்களை வெளியிட்டது போலவே இந்நூலையும் வெளியிட்ட ஸ்டார் பிரசுரத்தார்க்கு எனது நன்றி.

சௌராஷ்டிர நகர்
சென்னை-24
*1—5—1957*

# பொருள் அடக்கம்


| பக்கம் | | எண் |
|---|---|---|
| 1. | நூல் விளக்கம் | 9 |
| 2. | திணைமொழி ஐம்பது | 20 |
| 3. | ஐந்திணை ஐம்பது | 27 |
| 4. | ஐந்திணை அறுபது | 33 |
| 5. | ஐந்திணை எழுபது | 39 |
| 6. | திணைமாலை நூற்றைம்பது | 46 |
| 7. | கார் நாற்பது | 54 |
| 8. | களவழி நாற்பது | 59 |
| 9. | முதுமொழிக் காஞ்சி | 66 |
| 10. | திரிகடுகம் | 71 |
| 11. | இன்னா நாற்பது | 81 |
| 12. | இனியவை நாற்பது | 87 |
| 13. | நான்மணிக் கடிகை | 94 |
| 14. | சிறு பஞ்சமூலம் | 102 |
| 15. | ஏலாதி | 113 |
| 16. | ஆசாரக் கோவை | 120 |
| 17. | பழமொழி | 130 |
| 18. | நாலடியார் | 150 |
| 19. | திருக்குறள் | 173 |

# பதினெண் கீழ்க்கணக்கும் தமிழர் வாழ்வும்

## நூல் விளக்கம்

பழந்தமிழ் இலக்கியங்கள் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்று வரிசையாக வழங்கப்படுகின்றன. இவை தொகை நூல்கள் என்று கூறப் படும். பல நூல்களின் தொகுப்பே தொகை நூல்கள். பத்து நூல்களைக் கொண்டது பத்துப் பாட்டு; எட்டு நூல்களைக் கொண்டது எட்டுத் தொகை; பதினெட்டு நூல்களைக் கொண்டது பதினெண் கீழ்க் கணக்கு.

**சங்க நூல்களா?**

இத்தொகை நூல்களிலே பத்துப் பாட்டும் எட்டுத் தொகையும் சங்ககால இலக்கியங்கள்; பதினெண் கீழ்க் கணக்கு சங்க காலத்திற்குப் பின்தோன்றிய நூல்கள். சங்க காலம் என்பது ஏறக்குறைய ஆயிரத்தெண்ணூறு ஆண்டு களுக்கு முன்பாகும். கி. பி. இரண்டாம் நூற்றாண்டு வரை யிலும் சங்ககாலம் என்று கருதப்படுகின்றது. கி. பி.

இரண்டாம் நூற்றாண்டுக்கு முன் தோன்றிய நூல்களே சங்க இலக்கியங்களாகும். பதினெண் கீழ்க்கணக்கு நூல் களையும் சங்க இலக்கியங்கள் என்று கூறுவோர் உண்டு.

1. பத்துப்பாட்டு, எட்டுத் தொகை என்னும் தொகை நூல்களின் வரிசையிலே பதினெண் கீழ்க் கணக்கும் ஒன்று.

2. இறையனார் அகப் பொருளிலே காணப்படும் சங்க நூல்களின் வரிசையிலே பத்துப்பாட்டுக் காணப்படவில்லை. ''அவர்களால். (கடைச் சங்கப் புலவர்களால்) பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும், குறுந்தொகை நானூறும், நற்றிணை நானூறும், புறநானூறும் ஐங்குறுநூறும், பதிற்றுப் பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாட லும், கூத்தும், வரியும், சிற்றிசையும், பேரிசையும் என்ற இத் தொடக்கத்தன.'' இது இறையனார் அகப்பொருள் உரை. இது கடைச் சங்க காலத்து நூல்களைக் குறித்தது. இதனுள் வரும் இத் தொடக்கத்தன என்ற சொற்றொடரைக் கொண்டே பத்துப் பாட்டும் சங்கநூல் என்று கொள்ளு கின்றனர். பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும் சங்க நூல்களே யென்பதையும் அச் சொற்றொடராலேயே கொள்ளலாம்.

3. கீழ்க்கணக்கு நூல்களின் ஆசிரியர்களிலே, கபிலர், கூடலூர் கிழார், பொய்கையார் முதலியவர்களும் காணப் படுகின்றனர். இவர்கள் சங்ககாலப் புலவர்கள். ஆகையால் இவர்களால் இயற்றப்பட்ட நூல்கள் சங்ககால நூல்களாகத் தான் இருக்க வேண்டும்.

4. பதினெண் கீழ்க்கணக்கு நூல் பாடல்கள் எல்லாம் வெண்பாக்களே. சங்க காலத்தில் ஆசிரியப்பா, வஞ்சிப்பா, கலிப்பா, வெண்பா ஆகிய நால்வகைப் பாடல்களிலேதான் நூல்கள் இயற்றப்பட்டன. ஆதலால் பதினெண் கீழ்க் கணக்கும் சங்க நூல்கள்தாம்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் எல்லாம் சங்ககால இலக்கியங்கள்தாம் என்பதற்கு இவ்வாறு காரணங் காட்டு கின்றனர்.

சங்கத் தொகை நூல்களோடு சேர்த்து எண்ணப்படுவத னால் மட்டும் சங்க நூல்கள் என்று தீர்மானித்து விட முடியாது. பிற்காலத்தினர், தங்கள் காலத்திற்கு முன்னிருந்த நூல்களைக் குறிக்கவே, பத்துப்பாட்டு எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்று வரிசையாக வழங்கினர்.

**சங்க நூல்களுக்குப் பிற்பட்டவை**

பத்துப் பாட்டிலே காணப்படும் பழக்க வழக்கங்களும், எட்டுத்தொகை நூல்களிலே காணப்படும் பழக்க வழக்கங் களும் ஒத்திருக்கின்றன. ஆதலால், அத் தொகுதி சங்ககால நூல் என்பதில் ஐயம் இல்லை. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலே சங்ககாலத் தமிழர்களின் பழக்கவழக்கங்களை ஏற்றுக் கொள்ளாத சில பகுதிகள் காணப்படுகின்றன. ஆதலால் இத் தொடக்கத்தன என்பதனால் பத்துப் பாட்டைச் சங்க இலக்கியம் என்று ஏற்றுக்கொள்ளுவது பொருந்தும்; பதினெண் கீழ்க்கணக்கையும் ஏற்றுக் கொள்ளுவது பொருந்தாது.

பத்துப்பாட்டு எட்டுத் தொகை நூல்களிலே மது பான மும், புலால் உணவும் கண்டிக்கப்படவில்லை. பண்டைத் தமிழர்கள் இவற்றைச் சிறந்த உணவாகவே உண்டனர். ஆண்கள் பரத்தையர்களை விரும்பித் திரியும் வழக்கத்தைச் சங்க இலக்கியங்கள் கடிந்து கூறவில்லை. பதினெண் கீழ்க் கணக்கு நூல்களிலே கள், புலால் உணவு, வேசையர் நட்பு இவைகள் வன்மையாகக் கண்டிக்கப் படுகின்றன. கொல்லா விரதம் போற்றப்படுகின்றது. இவை போன்ற பல செய்தி களைக் கொண்டு பதினெண் கீழ்க்கணக்கின் காலம் சங்க காலத்திற்குப் பிற்பட்டதுதான் என்று முடிவு கட்டுகின்றனர்.

இதைப்பற்றிப் பின்னால் திருக்குறளைப்பற்றி எழுதுமிடத்திலும் விளக்கப்பட்டிருக்கின்றது.

ஒரே பெயருள்ள புலவர்கள் பல காலங்களில் இருந்திருக்கின்றனர். ஆதலால் பெயர் ஒற்றுமையைக் கொண்டு ஒரு நூலின் காலத்தைத் தீர்மானிக்க முடியாது. ஔவையார் என்ற பெயர் படைத்த புலவர்கள் மூவர்கள் இருந்ததாகக் கருதப்படுகின்றனர். கபிலர் என்ற பெயருள்ளவர் பலர் உண்டு. பொய்கையார் என்ற பெயர் படைத்தவர் பலர் உண்டு. ஆகையால் சங்ககாலத்துப் புலவர்களின் பெயர்கள் சில பதினெண் கீழ்க்கணக்கு நூல்களின் ஆசிரியர்களாகக் காணப்படுவதனால் பதினெண் கீழ்க்கணக்கைச் சங்க நூல்கள் வரிசையிலே சேர்த்துவிட முடியாது.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் அனைத்தும் ஒரே காலத்தில் தோன்றிய நூல்கள் அல்ல. அவைகள் சங்க காலத்திற்குப் பின்னும் காவிய காலத்திற்கு முன்னும் தோன்றிய நூல்களாக இருக்கலாம்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் எல்லாம் வெண்பாவினாலேயே பாடப்பட்டிருக்கின்றன. காவியங்கள் தோன்றிய காலத்திலே விருத்தப்பாக்கள் பிறந்துவிட்டன. சிலப்பதிகாரத்திலே விருத்தப்பாக்கள் உண்டு. சிந்தாமணி விருத்தப்பாக்களாலேயே ஆனது. வெண்பாவை விட விருத்தப்பாக்களினால் எடுத்துக்கொண்ட பொருளை விளக்கமாகக் கூறமுடியும். பதினெண் கீழ்க்கணக்கு நூலாசிரியர்கள் காலத்திலே, விருத்தப்பாக்கள் தமிழிலே பெருவழக்காக வழங்கவில்லை. வழங்கி யிருக்குமானால், அவர்கள் விருத்தப்பாக்களிலும் நூல்கள் இயற்றியிருப்பார்கள். ஆதலால் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் தோன்றிய காலத்தைக் கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்குப் பின்னும் ஆறாம் நூற்றாண்டுக்கு முன்னும் என்று தீர்மானிக்கலாம். இந்த இடைக்காலமாகிய நானூறு

ஆண்டுகளிலே பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் தோன்றி யிருக்கலாம்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலே முன்னே தோன்றிய நூல் ஏது? பின்னே எழுந்த நூல் எது? என்று முடிவு கட்டுவது அவ்வளவு எளிதன்று.

## மேற்கணக்கு—கீழ்க்கணக்கு

பிற்காலத்தினர் தொகை நூல்களை மேல்வரிசை நூல்கள் என்றும், கீழ்வரிசை நூல்கள் என்றும் பிரிந்தனர். பத்துப் பாட்டும் எட்டுத்தொகையும் மேல்வரிசை நூல்கள், பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் கீழ்வரிசை நூல்கள்.

குறைந்த அடிகளைக் கொண்ட பாடல்களையுடைய நூல்களுக்குக் கீழ்க்கணக்கு நூல்கள் என்று பெயர்வைத்தனர். நிறைந்த அடிகள் அமைந்த பாடல்களைக் கொண்ட நூல்களை மேற்கணக்கு நூல்கள் என்று கூறினர்.

மேற்கணக்கு நூல்கள் பத்துப்பாட்டும் எட்டுத்தொகை யும்; அவைகளின் எண்ணிக்கையும் பதினெட்டு. கீழ்க்கணக்கு நூல்களும் பதினெட்டு. மேற்கணக்கு நூல்கள் எல்லாம், பெரும்பாலும் மூன்றடி முதல் ஆயிரம் அடி வரையிலும் எழுதப்படும் ஆசிரியப் பாக்களால் ஆனவை. கலிப்பா, பரிபாட்டு, வஞ்சிப்பா ஆகிய பாடல்கள் கொண்ட நூல்களும் மேற்கணக்கில் உள்ளன. கீழ்க்கணக்கு நூல்கள் எல்லாம் இரண்டடி முதல் எட்டு அடி வரையிலும் உள்ள வெண்பாக் களால் ஆனவைகளே.

பாட்டின் பெருக்கம், சுருக்கம் கருதியே கீழ்க் கணக்கு, மேற்கணக்கு என்று நூல்களைப் பிரித்தனர். நூல்களில் உள்ள பொருட்சிறப்பைக் கருதிக் கீழ், மேல் என்று பிரிக்கப் படவில்லை. இது குறிப்பிடத் தக்கது.

**நூல்கள் யாவை?**

கீழ்க்கணக்கு நூல்கள் இன்னின்னவை என்பதைக் குறிக்கும் வெண்பா ஒன்று உண்டு.

> நாலடி, நான்மணி, நால் நாற்பது, ஐந்திணை, முப்
> பால், கடுகம், கோவை, பழமொழி, மாமூலம்,
> இன்னிலைசொல் காஞ்சியுடன், ஏலாதி, என்பவனே
> கைந்நிலைய ஆம்கீழ்க் கணக்கு

இதுவே அப்பாடல். ''நாலடியார், நான்மணிக்கடிகை, கார் நாற்பது, களவழி நாற்பது, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, திணை ஐம்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை அறுபது, ஐந்திணை எழுபது, திணைமாலை நூற்றைம்பது, முப்பால், திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறு பஞ்ச மூலம், இனிய நிலையை எடுத்துக் கூறுகின்ற முது மொழிக் காஞ்சி, ஏலாதி என்பவைகளே ஒழுக்க நிலையைக் கூறுகின் றனவாகிய கீழ்க் கணக்கு நூல்களாகும்.''

இச் செய்யுளில் உள்ள ஐந்திணை என்பதற்கு ஐந்து திணை நூல்கள் என்பதே பொருள். இவ்வாறு பொருள் பண்ணாமல் ஐந்து திணைகளைப் பற்றிக்கூறுகின்ற நூல்கள்; அவை திணைமொழி ஐம்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமாலை நூற்றைம்பது என்று பொருள் பண்ணுவர். இவர்கள் இன்னிலை என்பது மற்றொரு நூல் என்றும், கைந்நிலை என்பது மற்றொரு நூல் என்றும் கூறுவர். இதனால் இந்நிலை பதினெண் கீழ்க்கணக்கைச் சேர்ந்ததா, கைந்நிலை பதினென் கீழ்க்கணக்கைச் சேர்ந்ததா என்ற ஐயம் எழுகின்றது.

இன்னிலை என்றொரு நூல் உண்டு; அது அறம் பொருள் இன்பங்களைப் பற்றிக் கூறுவது. அதுவே பதினெண் கீழ்ன்கணக்கு வகையைச் சேர்ந்தது என்று எண்ணினர். கைந் நிலை என்ற பெயருடன் ஐந்திணை அறுபது வெளியிடப்

பட்டிருக்கின்றது. இந்நூல் வெளிவந்தபின், கைந்நிலை தான் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகும் என்பது பெரும்பாலோரின் முடிவு. இதுவே சரியான முடிவுமாகும். இதைக் கைந்நிலையென்று கூறுவதைவிட ஐந்திணை அறுபது என்று அழைத்துவிட்டால் பதினெண் கீழ்க்கணக்கைச் சேர்ந்த நூல் இன்னிலையா? கைந்நிலையா? என்ற ஐயத் திற்கே இடமில்லை. ஆதலால் ஐந்திணை என்பதற்கு ஐந்து திணை நூல்கள் என்று பொருள் கொள்வதே பொருத்தமான தாகும்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களைக் குறிக்கும் இந்த வெண்பா, நூல்களின் பெயர்களைக் குறிப்பதற்காகவே பாடப் பட்டதாகும். பதினெட்டு நூல்களையும் எளிதில் நினைவில் வைத்துக் கொள்ளுவதற்காகவே எழுதப்பட்டதாகும். நூல் களின் சிறப்பைக் கருதி அவைகளை வரிசைபடுத்திப் பாட வில்லை. நூல்களின் ஏற்றத் தாழ்வு கருதி ஒன்றன்பின் ஒன்றாக வரிசையாக வைத்துப் பாடப்பட்டிருக்குமானால் முப்பால் என்பதையே முதலில் வைத்துப்பாடியிருப்பர். முப்பால் திருக்குறள். இதைவிடச் சிறந்த நூல் வேறில்லை. இது பதினொரு நூல்களுக்குப் பின் பன்னிரண்டாவதாக வைக்கப் பட்டிருக்கின்றது. ஆதலால் இப்பாட்டில் உள்ள வரிசையைக் கொண்டு நூலின் ஏற்றத்தாழ்வுகளை மதிப்பிடுதல் தவறாகும்.

**இருவகை நூல்கள்**

இப்பதினெட்டு நூல்களிலே ஆறு நூல்கள் அகப் பொருள் பற்றியவை. ஏனைய பன்னிரண்டு நூல்களும் புறப் பொருள் பற்றியவை. இப்பன்னிரண்டு நூல்களிலே முப்பாலி லும், நாலடியிலும் அகப்பொருள் பற்றியும் கூறப்பட்டிருக் கின்றன. ஆயினும் இவைகளிலே புறப்பொருள் பற்றிய செய்திகளே மிகுதியாகச் சொல்லப்படுகின்றன. ஆதலால் இவற்றைப் புறப்பொருள் நூல்களின் தொகுதியிலே சேர்ப்பது தான் சிறந்ததாகும்.

1. திணைமொழி ஐம்பது 2. ஐந்திணை ஐம்பது; 3. ஐந்திணை அறுபது (கைந்நிலை) 4. ஐந்திணை எழுபது; 5. திணைமாலை நூற்றைம்பது; 6. கார் நாற்பது. இவ் ஆறுநூல்களும் அகப்பொருள் பற்றியவை. 'இவைகள் குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம்' என்ற ஐந்து நிலத்தின் இயல்புகளைக்கூறுவன; அந்நிலத்திலே நடைபெறும் காதலன் காதலிகளின் ஒழுக்கங்களைப்பற்ற உரைப்பன. இன்பப் பகுதி ஒன்றைப் பற்றியே இவைகள் உரைக்கின்றன.

மற்றைய பன்னிரண்டு நூல்களிலே பதினோரு நூல்கள் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பொருள்களைப் பற்றியும் உரைப்பன. இப்பதினோரு நூல்களிலே தலை சிறந்தது முப்பால்; அதாவது திருக்குறள். இதற்கு அடுத்த படியாக நாலடியும், பழமொழியும் ஆகும். இவைகள் உயர்ந்த அறங்களை எடுத்துரைக்கின்றன. ஒவ்வொரு தனிப்பட்ட மனிதனும், மனித சமுதாயமும் பின்பற்றவேண்டிய ஒழுக்க முறைகளை விரிவாகக் கூறுகின்றன. இவைகளே அற நூல்கள், நீதிநூல்கள், ஒழுக்க நூல்கள் ஆகும்.

இந்நூல்களைப் படிப்பதன் மூலம் பண்டைத் தமிழர்களின் சிறந்த ஒழுக்கங்களைக் காணலாம். அவர்களுடைய சமுதாய அமைப்பை அறியலாம்; அவர்களுடைய அரசியல் முறை, பழக்க வழக்கங்கள் இவற்றைத் தெரிந்து கொள்ளலாம். தமிழர்களின் உயர்ந்த நாகரிகத்தையும் பண்பாட்டையும் அறிவதற்கு இந்தப் பதினோரு நூல்களும் துணை செய்கின்றன.

1. முதுமொழிக் காஞ்சி 2. திரிகடுகம் 3. இன்னா நாற்பது 4. இனியவை நாற்பது 5. நான்மணிக் கடிகை 6. சிறுபஞ்சமூலம் 7. ஏலாதி 8. ஆசாரக் கோவை 9. நாலடியார் 10. பழமொழி நானூறு 11. முப்பால் என்னும் திருக்குறள். இவைகளே அந்நூல்கள்.

களவழி நாற்பது என்பது போர்க்களத்தைப்பற்றி மட்டும் பாடப்பட்டிருப்பது. சோழ மன்னன் ஒருவன் போரிலே பெற்ற வெற்றியைப் புகழ்வது. இந்நூலைப் படிக்கும்போது போர்க் களத்தின் பயங்கரமான காட்சியைக் காணலாம்; வளர்ந்து வரும் மனித சமுதாயத்திலே போர் என்பது ஒரு அநாகரிகம் என்ற உணர்ச்சியை இந்நூல் ஊட்டாமல் போகாது.

## முப்பால்-திருக்குறள்

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலே ஒன்றாகக் குறிப் பிட்டிருக்கும் முப்பால் என்பது திருக்குறள் அன்று என்று கூறுவோர் சிலர். முப்பால் என்பது திருக்குறள் அன்று, வேறு ஏதோ சிறு நூலாக இருக்க வேண்டும் என்பது இவர்கள் கருத்து.

திருக்குறள் தமிழ் நூல்களிலே மிகப் பழமையான நூல். சங்க காலத்து நூல்; மிகச் சிறந்த நூல்; ஒப்புயர்வற்ற நூல்; ஆதலால் அதைப் பதினெண் கீழ்க்கணக்கு நூல் வரிசையிலே சேர்ப்பது தவறு; இது திருக்குறளுக்குப் பெருமையளிப்ப தாகாது என்பதே இவர்கள் கருத்து. இக்கருத்துத் தவறானது என்பதைத் திருக்குறளைப்பற்றிக் கூறும் இடத்திலே விளக்கப் பட்டிருக்கின்றது. முப்பால் என்பது திருக்குறள்தான் என்ப திலே ஐயம் இல்லை. பண்டைப் புலவர்கள் பலரும் திருக்குறளை முப்பால் என்ற பெயராலேயே குறிப்பிட்டிருக் கின்றனர். இதற்குத் திருவள்ளுவமாலை ஒன்றே போது மான சான்றாகும்.

**வள்ளுவனார், முப்பால் மொழிந்த மொழி** *(மாமூலனார்)*
**பாமுறைதேர் வள்ளுவர் முப்பால்** *(சீத்தலைச் சாத்தனார்)*
**வள்ளுவர் முப்பால்** *(மருத்துவன் தாமோதரனார்)*
**வள்ளுவனார் முப்பால் மொழி** *(நாகன்தேவனார்)*
**வள்ளுவனார் முப்பாலை** *(கோதமனார்)*

**வள்ளுவனார் முப்பாலின்**
*(முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்)*
**முப்பால் மொழிந்த முதற்பாவலர்** *(ஆசிரியர் நல்லந்துவனார்)*
**முப்பாலின் நாற்பால் மொழிந்தவர்** *(கீரந்தையார்)*
**வள்ளுவர்தாம் செப்பவரு முப்பாற்கு**
*(பாரதம் பாடிய பெருந்தேவனார்)*
**பிணக்கிலா வள்ளுவர் வாய்மொழி முப்பால்**
*(உருத்திரசன்ம கண்ணர்)*
**திருவள்ளுவர், குறள் வெண்பாவில் சிறந்திடு முப்பால்**
*(உறையூர் முதுகூத்தனார்)*
**முப்பாலின் ஓதும், தருமம் முதல் நான்கும்**
*(களத்தூர் கிழார்)*
**வள்ளுவர் முப்பால்** *(அக்காரக்கனி நச்சுமனார்)*
**முப்பாலில் தெய்வத் திருவள்ளுவர் செப்பிய குறள்**
*(தேனீக்குடிக் கீரனார்)*
**வண்தமிழின் முப்பால்** *(ஆலங்குடி வங்கனார்)*

இவைகள் திருவள்ளுவ மாலையில் காண்பவை. இவ்வாறு பதினைந்து புலவர்கள் திருக்குறளை முப்பால் என்று குறிப்பிட்டுள்ளனர். ஆதலால் முப்பால் என்பது திருக்குறளே என்பது உறுதி. திருக்குறள் சங்க காலத்திற்குப் பின் பிறந்தது என்பதனால் அதன் பெருமை குன்றி விடாது.

### நூல்களின் சிறப்பு

பத்துப் பாட்டு, எட்டுத்தொகை நூல்களைப் போலவே தமிழர்களின் பண்டை வரலாற்றைக் காணப் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும் துணை செய்கின்றன. தமிழர்களின் படிப்படியாக வளர்ந்து வந்த உயர்ந்த பண்பாட்டை இந் நூல்களிலே காணலாம். தமிழர்கள் தனித்தனிக் குடும்ப வாழ்விலே எவ்வளவு சிறந்திருந்தனர் என்பதற்கு அகப்

பொருள் நூல்கள் சாட்சிகளாகும். அவர்கள் ஆத்மீகத் துறையிலும், அரசியல் முதலிய புறத் துறைகளிலும் எவ்வளவு உயர்ந்த முறையைப் பின்பற்றி வாழ்ந்தனர் எனபதற்குப் புறப்பொருள் பற்றிய நூல்கள் சாட்சிக ளாகும்.

சுருங்கக் கூறினால் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் மக்கள் வாழ்க்கைக்கு வழி காட்டும் உயர்ந்த நூல்கள் என்று உரைக்கலாம். தமிழர்களின் பண்டைப் பண்பாட்டை அறிவதற்கு இவைகளை விடச் சிறந்த சாதனங்கள் வேறு எவையும் இல்லை. ஆதலால் தமிழர்களின் பண்டைப் பண்பாட்டைத் தெரிந்துகொள்ள விரும்புவோர் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களை யெல்லாம் படிக்க வேண்டும். அவைகளைப் படிப்பதன் மூலம் பல உண்மைகளை நாம் காணலாம். இனி அந் நூல்கள் ஒவ்வொன்றைப் பற்றியும் தனித்தனியே சுருக்கமாகத் தெரிந்து கொள்ளு வோம்.

# 2. திணைமொழி ஐம்பது

ஐந்து திணைகளைப்பற்றிக் கூறும் ஐம்பது பாடல்கள் அடங்கிய நூல் இது. இதற்கே திணைமொழி ஐம்பது என்று பெயர்.

இந்நூலை இயற்றியவர் கண்ணன் சேந்தனார் என்பவர். இவர் தந்தையார் பெயர் சாத்தந்தையார். இதைத் தவிர இவருடைய வரலாறு வேறு எதுவும் தெரியவில்லை.

ஐந்திணைகளைப் பற்றிக் கூறும் மற்ற நூல்களைக் காட்டிலும் இதற்கொரு தனிச் சிறப்பு உண்டு. இந் நூலிலே ஐந்திணைகளையும் வரிசையாக அமைத்திருக்கும் முறை சிறந்ததாகும்.

முதலில் குறிஞ்சித்திணை: குறிஞ்சி நிலத்தில் தான் காதலனும் காதலியும் முதல் முதலாகச் சந்திப்பார்கள். அவர்களிடம் காதல் பிறக்கும்; மணமக்களாவதென்று உறுதி செய்து கொள்ளுவார்கள்.

இரண்டாவது பாலைத்திணை: இது காதலன் காதலியை விட்டுப் பிரிவதைப்பற்றிப் பேசுவது. காதலன், மணம் புரிவதற்கு முன்போ மணம் புரிந்துகொண்ட பிறகோ பொருள் தேடப் பிரிவான். அவளை அவன் மணம் புரிவதற்கு முன்பே அவள் பெற்றோர் அறியாமல் தன்னுடன் அழைத்துச் செல்வான். இவ்வாறு பிரிவை உணர்த்துவதே பாலைத் திணையாகும்.

மூன்றாவது முல்லைத்திணை: காதலன் பிரிந்ததனால் வரும் துன்பத்தைப் பொறுத்துக் கொண்டிருத்தல். தன் உள்ளத்திலே எவ்வளவு துயரம் பெருகினாலும் அதை அடக்கிக்கொண்டு காதலன் வருகையை எதிர்பார்த்திருப்பாள் கற்புள்ள காதலி. இந்த நிகழ்ச்சியை உரைப்பதே முல்லைத்திணை.

நான்காவது மருதத்திணை: இத்திணையிலே இல்லறம் நடத்தும் காதலன் காதலிகளுக்குள் நிகழும் ஊடல் கூறப்படும். எந்தெந்தக் காரணங்களினால் அவர்களுக்குள் ஊடல் தோன்றுகிறது என்றெல்லாம் சொல்லப்படும்.

ஐந்தாவது நெய்தல் திணை: காதலன் பிரிவுக்காகக் காதலி வருந்துதல். தன் துன்பத்தைக் காதலி வெளிப்படையாகக் கூறுவாள்.

இவைகளே ஐந்திணை ஒழுக்கங்கள். இவற்றைச் சுருக்கமாகக் கூறினால், கூடல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல் என்று கூறிவிடலாம்.

மேலே காட்டிய வரிசைப்படியே இந்நூலில் ஐந்திணைகளும் அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு திணையைப் பற்றியும் பத்துப்பத்து வெண்பாக்கள் பாடப்பட்டிருக்கின்றன. இவ்வெண்பாக்கள் படிப்பதற்கு இனிமையானவை; எளிமையானவை; அழகிய கற்பனைகள் அமைந்தவை. அகப்பொருளைப் பற்றிச் சொல்லும் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களிலே இது ஒரு சிறந்த நூல்.

### பாட்டின் சிறப்பு

இந்நூற் செய்யுள்களின் சிறப்புக்குச் சில உதாரணங்களைக் காண்போம்.

ஒரு காதலனும், காதலியும் கள்ள நட்புக்கொண்டு வாழ்கின்றனர். இதற்குக் களவு மணம் என்று பெயர்,

கள்ள நட்புக்குப் பிறகுதான் அவர்கள் ஊரார் அறிய மணம் புரிந்துகொண்டு இல்லறம் நடத்துவார்கள். அப்பொழுது கற்பு மணம் என்று பெயர்.

இவர்கள் களவு மணத் தம்பதிகளாய் வாழும்போது, காதலன் இரவு நேரத்திலே வருவான்; ஒரு குறிப் பிட்ட இடத்திலே தலைவியைக் கண்டு அளவளாவிச் செல்லு வான். இப்படிப் பல நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. இந்தக் களவு மணத்திலிருந்து மாறிக் கற்பு மணம்புரிந்து கொள்ள வேண்டும் என்பது தலைவியின் ஆவல்; அவளுடைய தோழி யின் எண்ணமும் இதுதான். இந்த எண்ணத்தை ஒருநாள் தலைவனிடம் தெரிவிக்கின்றாள் தோழி. இந்த நிகழ்ச்சியைக் கூறும் செய்யுள் ஒன்று. அச்செய்யுள் மிகவும் சிறந்த கருத் துடன் அமைந்திருக்கின்றது.

''நன்மணம் கமழும் மலைச்சாரலிலே தினைப்புனங் காப்பவர்கள் திரிந்து கொண்டிருப்பார்கள்; அந்த மலைப் பாதையிலே நீங்கள் இனிமேல் வரவேண்டாம்; ஏனென்றால் அவர்களுக்கு இனிய மொழிகள் பேசத் தெரியாது; அவர்கள் கொல்லுதற்கு உதவும் வில்லைக் கையிலே பிடித்திருப்பார்கள்; நெருங்குகிறவர்களைக் குத்திக் கொல்லும் வேலும் வைத் திருப்பார்கள்; விரைந்து பாயக்கூடிய கணைகளையும் வைத் திருப்பார்கள். அவர்கள் கல்லிலே (மலையிலே) வாழ்கின்ற வர்கள்; ஆதலால் அவர்கள் நெஞ்சமும் கல்லாகத்தான் இருக்கும்; அவர்கள் எங்களைச் சேர்ந்தவர்கள்தாம்; ஆயினும் கொடியவர்கள்.

> விரைகமழ் சாரல் விளைபுனம் காப்பார்;
> வரையிடை வாரன்மின், ஐயா!—உரைகடியர்;
> வில்லினர்; வேலர்; விரைந்துசெல் அம்பினர்;
> கல்லிடை வாழ்நர் எமர்.
>
> (பா.5)

இச்செய்யுள் தலைவியின் கருத்தைத் தலைவனுக்குக் குறிப்பாக எடுத்துக் காட்டுகின்றது. ''இரவில் வந்து போவது

ஆபத்து; வெளிப்படையாகக் கற்பு மணம் புரிந்து கொண்டு வாழ்வதே சிறந்தது'' என்று குறிப்பிடுகின்றது. அன்றியும், தலைவி தலைவன்மீது கொண்டுள்ள அன்பையும் அறிவிக்கின்றது. கற்புள்ள மனைவி தன் காதலனுக்கு எவ்விதத் துன்பமும் உண்டாகக் கூடாது என்பதிலே எவ்வளவு கவலை கொண்டிருப்பாள் என்பதற்கும் இச்செய்யுள் ஒரு எடுத்துக் காட்டு.

களவு மணம் தமிழர் பரம்பரை வழக்கம்; களவு இல்லாமல் கற்பு நிகழாது; இதுவே தமிழர் கொள்கை. ஆயினும், நாளடைவில் கற்பு மணத்தையே சிறப்பாக மதித்தனர். களவு மணத்தைப் பழிக்கவும் தொடங்கினர். ஆதலால் கள்ள நட்புள்ள காதலர்கள் விரைவில் கற்பு மணத் தம்பதிகளாகிப் பழிப்பின்றி வாழவே விரும்பினர். இந்த நிலை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழகத்தில் தோன்றிவிட்டது. இவ்வுண்மையை விளக்கும் செய்யுட்களை அகத்திணை நூல்களிலே காணலாம்.

யாழும், குழலும், முழவும் இயைந்தென
வீழும் அருவி விறன்மலை நன்னாட!
மாழைமான் நோக்கியும் ஆற்றாள் இரவரின்;
ஊர்அறி கௌவைதரும். (பா. 7)

யாழும், புல்லாங்குழலும், மத்தளமும் தம்முள் ஒத்து இசைப்பன போல அருவி நீர் ஒலித்துக்கொண்டு விழுகின்றது. இத்தகைய சிறந்த மலைநாட்டை யுடையவனே! அழகிய கண்களையுடைய தலைவியும் நீ இரவு நேரத்திலே வருவதற்குப் பொறுக்கமாட்டாள்; நானும் சம்மதியேன்; உன் செய்கை ஊரார் அறியும் பழிப்பையும் உண்டாக்கும்''

''உனக்கும் தலைவிக்கும் உள்ள கள்ள நட்பு வெளிப்பட்டால் ஊரார் பழிப்பர். ஆதலால் விரைவில் தலைவியைப் பலரும் அறிய மணம் புரிந்துகொள்'' என்ற கருத்தையே தோழி இவ்விதம் தலைவனிடம் உரைத்தாள்.

கற்புள்ள பெண்ணுக்குக் கணவனே தெய்வம்; அவனை விட்டால் அவளுக்கு வேறு கதியில்லை; இதுவே பழந்தமிழர் கொள்கை. இக்கொள்கையை வற்புறுத்துகிறது இந்நூல்.

மனைவி ஊடியிருக்கின்றாள். அவள் ஊடலைத் தணிக்கும்படி, காதலன் தோழியிடம் வேண்டிக் கொள்ளு கின்றான். அப்பொழுது அவனுக்குத் தோழி விடையளிக் கின்றாள்; அவ் விடையிலே இக்கருத்து அடங்கி யிருக் கின்றது.

''செந்தாமரைகள் பூத்திருக்கின்ற வயல்களை யுடைய மருதநிலத் தலைவனே! நாங்கள் உன்மேல் வருத்தப்பட்டு என்ன செய்ய முடியும்? என்னுடைய தலைவிக்கு நல்ல அழகைத் தந்தவனும் நீதான்! அந்த அழகைத் திருப்பி எடுத்துக் கொண்டவனும் நீயேதான்! ஆதலால் எங்களால் ஆவது ஒன்றும் இல்லை; உன் விருப்பத்தின்படியே செய்.

செந்தாமரை மலரும் செவ்வயல் நல்ஊர,
நொந்தால் மற்றுஉன்னைச் செயப்படுவதுஎன் உண்டாம்?
தந்தாயும் நீயே! தரவல்ல நல்நலம்
கொண்டாயும் நீ ஆயக் கால் [பா. 36]

இவ்வாறு காதலன் காதலிகளின் அன்பு நிறைந்த வாழ்க்கை முறையை எடுத்துக்காட்டுவதே இந் நூலாகும். ஆணும், பெண்ணும் இணைந்து ஒன்றுபட்ட உள்ளமுடன் வாழும் நிலை ஏற்பட்ட பிறகுதான் மக்களிடையிலே நாகரிகம் தழைததது; அறம், பொருள் வீடு பற்றிய எண்ணங்கள் எல்லாம் தோன்றி வளர்ந்தன. இவ்வெண்ணங்கள் தோன்றி வளர்வதற்கு அடிப்படை ஆண்பெண்களின் அன்பிலே தோன்றிய குடும்ப வாழ்வுதான்.

### தெய்வ வணக்கம்

''தேவர்கள் வானுலகிலே வாழ்கின்றவர்கள். அவர்கள் எல்லா வல்லமையும் படைத்தவர்கள்; அவர்களை வணங்கி

வழிபாடு செய்தால் நாம் விரும்புவதைப் பெறலாம்.'' இந்த நம்பிக்கை தமிழர்களிடம் குடி கொண்டிருந்தது.

தேவர்களைப் பல வகையிலே மக்கள் வணங்கி வந்தனர். அவைகளில் நறுமணப் புகையிட்டு வணங்கும் வழக்கம் ஒன்று. இதைத்தான் தூபமிட்டு வணங்குதல் என்று கூறுவர். இன்றும் சாம்பிராணி, தசாங்கம், குங்கிலியம், ஊதுவத்தி முதலிய தூபங்களால் தெய்வங்களை வணங்குவதைக் காண் கிறோம். இது பழந்தமிழர் பண்பாடுதான்.

புகழ் மிகு சாந்துஎரித்து, புல் எரி ஊட்டிப்
புகை கொடுக்கப் பெற்ற புலவோர்,—துகள் பொழியும்
வான் உயிர் வெற்ப இரவின் வரல்வேண்டா
யானை உடைய சுரம் (பா. 1)

''நீ வரும் வழியிலே யானை உண்டு. ஆதலால் நீ இனி இரவிலே வரவேண்டாம்'' என்று தலைவனுக்குக் கூறு கின்றாள் தோழி. அப்பொழுது அவனுடைய மலையிலே நடைபெறும் தெய்வ வழிபாட்டை எடுத்துரைக்கின்றாள். ''சந்தனக் கட்டையை வெட்டிக் குவித்து நெருப்பூட்டி அப் புகையால் தேவர்களை வணங்குகின்றனர். இப்புகையைப் பெற்ற தேவர்கள், மழையைப் பெய்யச் செய்கின்றனர்'' என்ற கருத்துள்ளதே இச்செய்யுள். இதனால் மழைவேண்டித் தெய்வத்தை வணங்கும் வழக்கம் பண்டைக்காலத்தில் இருந் ததைக் காணலாம்.

**நீதி மொழி**

அகத்திணை நூல்களிலும் நீதிகளை அமைத்துக் காட்டும் வழக்கம் உண்டு. நீதிகளை உவமானங்களாக உரைப் பார்கள்.

கடைஆயார் நட்பே போல் காஞ்சிநல் ஊர!
உடைய இள நலம் உண்டாய்! (பா. 31)

பரத்தையர் வீடு சென்று திரும்பிய தலைவனிடம் தோழி சொல்லியது இப்பாட்டு. அவன் தலைவியின் பெண்மை நலத்தை நுகர்ந்தான். அவளுடைய அழகை யெல்லாம் கவர்ந்து விட்டான். அதன் பின் அவன் பரத்தையர்களின் அழகிலே மயங்கி அவர்களிடம் சென்று இன்பம் நுகர்ந்து திரும்பினான். அப்பொழுது தான் தோழி அவனைப் பார்த்து இப்படிப் பேசினாள்.

''காஞ்சி மரங்கள் நிறைந்த நல்ல ஊரை யுடையவனே, தலையாயாரிடம் நட்புக்கொண்டால் அவர்கள் நமக்கு வேண்டுவனவற்றை உதவுவார்கள்; நமக்கு உதவுவதே அவர்கள் நோக்கமாக இருக்கும்; நம்மிடம் சுரண்டமாட்டார் கள். கடைப்பட்டவர்களின் நட்போ இதற்கு எதிரானது. அவர்கள் நமக்கு உதவ மாட்டார்கள். நம்மை மொட்டை யடிப்பதே அவர்கள் கருத்து. நம்மிடம் உள்ள எல்லாவற்றை யும் சுரண்டிக் கொள்ளுவார்கள். இதைப் போல நீயும் என் தலைவியின் இளமைப் பருவ அழகு முழுவதையும் கொள்ளை கொண்டு விட்டாய்!'' என்பதே இந்த அடிகளின் பொருள்.

தலைவன், தலைவியின் அழகைக் கவர்ந்ததற்கு எடுத் துக் காட்டியிருக்கும் இவ்வுதாரணம் மிகவும் பொருத்த மானது. கடைப்பட்டவர்களிடம் நட்புக் கொள்ளுவதனால் பயனில்லை; அது ஆபத்தானது; என்ற அறிவையும் நாம் பெறுகின்றோம்.

திணைமொழி ஐம்பதில் உள்ள பாடல்கள் அனைத்தும் மிகவும் சுவையுள்ளவை. எல்லா வெண்பாக்களும், மோனை யும் எதுகையும் அமைந்த இனிய வெண்பாக்கள்.

# 5. ஐந்திணை ஐம்பது

இது ஐம்பது பாடல்கள் கொண்டது. ஐந்துதிணை யொழுக்கங்களைப் பற்றிக் கூறுவது. முதலில் முல்லைத் திணை, இரண்டாவது குறிஞ்சித்திணை, மூன்றாது மருதத் திணை, நாலாவது பாலைத்திணை, ஐந்தாவது நெய்தல் திணை என்ற வரிசையில் அமைந்திருக்கின்றது. ஒவ்வொரு திணையைப் பற்றியும் பத்துப் பத்து வெண்பாக்கள் பாடப் பட்டிருக்கின்றன.

> ஐந்திணை ஐம்பதும் ஆர்வத்தின் ஓதாதார்
> செந்தமிழ் சேராதவர்

என்பது இந்நூலின் சிறப்புப் பாயிரம். ''செந்தமிழின் பயனைப் பெற வேண்டுவோர் இந்த ஐந்திணையில் உள்ள ஐம்பது பாடல்களையும் படித்தறிய வேண்டும். அப்பொழுது தான் செந்தமிழின் சிறந்த பயனடையலாம்; இன்பத்தை நுகரலாம்.'' இதுவே இதில் அடங்கிய பொருள்.

இந்நூலாசிரியர் பெயர் மாறன் பொறையனார் என்பது. மாறன்-பாண்டியன்; பொறையன்—சேரன். பாண்டியன் பெயரையும் சேரன் பெயரையும் சேர்த்து வைத்துக் கொண்ட பெயர் இது. பொறை என்பதற்குப் பொறுமை என்ற பொருளும் உண்டு. பொறையனார் என்றால் பொறுமையை உடையவர். மாறன் என்னும் பொறையனார் என்றும் பொருள் கூறலாம். இவரைப் பற்றிய வரலாறுகள் ஒன்றும் தெரியவில்லை. இவர் பாடிய வேறு நூல்களும் இல்லை.

இந்நூலின் செய்யுட்கள் அவ்வளவு கடினமானவையும் அல்ல; மிக எளிமையானவையும் அல்ல; நடுத்தரமானவை. படிக்கப் படிக்கச் சுவை பயப்பனவே. இவைகள் கற்பனையிலும், கருத்திலும் சிறந்த செய்யுட்கள். இந்நூலின் பாடல்களைக் கொண்டு பண்டைத் தமிழர் பழக்க வழக்கங்கள் சிலவற்றையும் காணலாம்.

## பாட்டுச் சிறப்பு

'மலைநாளில் திரும்பி வந்துவிடுவேன்' என்று காதலியிடம் உறுதிமொழி உரைத்துவிட்டுப் பொருள் தேடப் போயிருந்தான் காதலன். மழைக்காலம் வந்துவிட்டது. அதைக் கண்டான் அவன். ''நான் சொல்லிய கார்காலம் வந்துவிட்டது; காதலி என்னைக் காணாமல் நெஞ்சங் கலங்குவாள்; விரைந்து செல்ல வேண்டும்'' என்று எண்ணினான். உடனே தேர்ப்பாகனிடம் கீழ் வருமாறு உரைத்தான்.

''தேர்ப்பாகனே, தேர் விரைவாகப் போகட்டும். அவள் மழையால் செழித்திருக்கும் காட்டின் அழகைக் காண்பாள். கற்பின் சிறப்பால் தன் துக்கத்தை அடக்கிக் கொள்ளுவாள். கன்னத்திலே கையை ஊன்றிக்கொண்டு கவலைபடிந்த முகத்துடன் என்னை எதிர்பார்த்து நிற்பாள். ஆகையால் தேரை விரைவாய் ஓட்டுக'' என்றான்.

நூல்நவின்ற பாக! தேர் நொவ்விதாச் சென்றீக!
தேன்நவின்ற கானத்து எழில் நோக்கித்-தான்நவின்ற
கற்புத்தாள் வீழ்த்துக, கவுண்மிசைக் கைஊன்றி,
நிற்பாள், நிலை உணர்கம் யாம். (பா. 10)

நூல்களைக் கற்றறிந்த பாகனே! தேரை விரைவாகச் செல்லும்படி செய்க. மலர்களிலிருந்து தேன் சிந்துகின்ற காட்டின் அழகைக் கண்டு, தான் இளமை முதல் பழகிய கற்பென்னும் தாளைப் போட்டுக் கொண்டு, கன்னத்தின்மேல்

கையை ஊன்றிக்கொண்டு நிற்பாள். அவள் நிலைமையை நாம் சென்று காண்போம்.''

தாம் கூறிய உறுதி மொழியைக் காப்பாற்ற வேண்டும் என்ற கவலை அக்கால மக்களுக்கு உண்டு. காதலன் எங்கு சென்றாலும் தன் காதலியை மறப்பதில்லை. இக்கருத்தை இப்பாடலிலே காண்கின்றோம்.

மற்றொரு சிறந்த கருத்தமைந்த பாடலைக்காண்போம். காதலிக்கு வயதேறிவிட்டது. அவள் தலைமயிர்கள் நரைத்து விட்டன; காதலனுக்கு மட்டும் இளமைப் பருவம் குறைய வில்லை. ஆதலால் அவன் தன் ஆசையை நிறைவேற்றிக் கொள்ள வேசையர் சேரிக்குச் சென்றான். சில நாட்கள் அங்கே தங்கியிருந்து திரும்பினான். காதலி தன்மீது கோபங் கொண்டிருப்பாள் என்பது அவனுக்குத் தெரியும். ஆதலால் அவள் ஊடலைத் தணிப்பதற்காக அவளிடம் தூதனுப் பினான். அந்தத் தூதுவனிடம் தலைவி கூறுகின்றதாக அமைந்துள்ளது அச் செய்யுள்.

''தலைவனிடம் கோபித்துக் கொள்ளுவதற்கு எனக் கென்ன தகுதியிருக்கின்றது? ஒரு காலத்திலே எனது கூந்தல் மெல்லிய கருமணலைப்போல அசைந்து தொங்கிக் கொண் டிருந்தது. கண்ணுக்கு அழகாகவும் இருந்தது. இன்றோ அக்கூந்தல் வெண்மணலைப் போல நிறம் மாறிவிட்டது. ஆகவே நான் கிழவியாகிவிட்டேன். இனி எனக்கென்ன கோபம்; நான் ஏன் தான் கோபிக்கப் போகின்றேன்?

தண்வய லூரான் புலக்கும் தகையமோ!
நுண் அறல் போல நுணங்கிய ஐம்கூந்தல்,
வெண்மணல் போல நிறந்திரிந்து வேறு ஆய
வண்ணம் உடையேம், மற்று யாம். (பா. 27)

இப் பாடல் பண்டைக்காலப் பெண்ணின் இயல்பை உணர்த்து வது. தன் கணவன் செய்தது தவறு என்று தெரிந்தும்,

அவனைத் தவறு செய்யாமல் தடுக்கும் இயல்பு தன்னிடம் இல்லையே என்று வருந்தினாள் தலைவி.

ஒவ்வொருவரும் தமது இரகசியம் வெளிப்படாமல் காப்பாற்றிக் கொள்வதிலே கவலையுள்ளவர்கள். தமது இரகசியத்தை மற்றவர்கள் கண்டு கொள்ளக்கூடிய ஒரு வாய்ப்பு நேர்ந்துவிட்டால் அப்பொழுதுகூட விட்டுக் கொடுக்க மாட்டார்கள். எதையாவது பொருத்தமாகச் சொல்லித் தப்பித்துக் கொள்ளுவார்கள். இது மனித இயல்பு. இப்படிச் செய்வதிலே ஆண்களைக் காட்டிலும் பெண்கள் மிகவும் திறமைசாலிகள். இவ் வுண்மையை இந் நூலின் செய்யுள் ஒன்றால் காணலாம்.

ஒரு நாள் நடந்த நிகழ்ச்சி ஒன்றைத் தலைவி, தன் தோழியிடம் உரைப்பதாக அமைந்திருப்பது அச் செய்யுள். அத் தலைவி தன் காதலனோடு கள்ள நட்புக் கொண்டிருப்பவள். இன்னும் அவளுக்குக் கற்பு மணம் நடைபெறவில்லை.

கணவன் பிரிந்து சென்ற குளிர்ந்த மலர்ச் சோலையைப் பார்த்து அழுது கொண்டிருந்தேன். அதனால் என் கண்கள் சிவந்து விட்டன. அப்பொழுது என் தாய் வந்தாள். எனது முகத்தைப் பார்த்தாள். ஒளியுடன் இருந்த என் முகம் வாடியிருப்பதைக் கண்டாள். உடனே, உனக்குண்டான துன்பம் யாது? ஏன் அழுதிருக்கின்றாய்? என்றாள். கடல் அலை வந்து எனது விளையாட்டு மணல் வீட்டை கலைத்து விட்டது என்றேன்.

> கொண்கன் பிரிந்த குளிர்பூம் பொழில் நோக்கி
> உண்கண்சிவப்ப அழுதேன், ஒளிமுகம்
> கண்டு அன்னை எவ்வம் யாது என்னக்' கடல்வந்து என்
> வண்டல் சிதைத்தது என்றேன். (பா. 44)

இது பெண்களின் திறமையைக் காட்டும் சிறந்த பாடல். இது போன்ற இனிய பாடல்கள் இந் நூலிலே இன்னும் பல உண்டு.

**பழக்க வழக்கங்கள்**

பண்டைக்காலப் பழக்க வழக்கங்கள் சிலவற்றையும் இந் நூலிலே காணலாம்.

கருமேகம் கண்ணனுடைய நிறத்தைக் கொண்டிருந்தது, மின்னல் முருகனுடைய வேற்படையின் ஒளியைப் போலிருந்தது என்று கூறுகின்றது ஒரு செய்யுள்.

மல்லர்க் கடந்தான் நிறம்போன்று இருண்டு எழுந்து,
செல்வக் கடம்பு அமர்ந்தான் வேல் மின்னி.

''மல்லர்களை வென்ற கண்ணனுடைய நிறத்தைப் போலக் கருத்து எழுந்து சிறந்த கடம்ப மலரை விரும்பிய முருகனுடைய வேலைப்போல மின்னி'' என்பதே அச்செய்யுள்.

முருகனுக்கு ஆடு வெட்டி, இரத்தத்தைச் சிந்திப் பூசை போடுவது பண்டைக்கால வழக்கம்.

மறியீர்த்து உதிரம்தூய் வேலன் தரீஇ
வெறியோடு அலம் வரும் யாய். (பா. 20)

''வேலைக் கையிலேந்தி ஆடுகின்ற பூசாரியை அழைத்து ஆட்டுக் குட்டியை அறுத்து, அதன் இரத்தத்தை நாற்றிசைகளிலும் சிந்தி, இவ்வாறு முருகனுக்குப் பூசை போடுவதாகிய தொழிலில் ஈடுபட்டு வருந்துகின்றாள் எனது தாய்.''

இறந்த வீரர்களுக்கு அவர்களின் நினைவாகக் கல் நடுவார்கள். இது பண்டை வழக்கம். இதனை ''நடுகல்—விரிநிழல் கண்படுக்கும் வெம்கானம்'' என்பதனால் காணலாம். வீரர்களுக்காக நடப்பட்டிருக்கும் கல்லின் விரிந்த

நிழலிலே பேய் படுத்துறங்கும் கொடிய கானகம்'' (பா. 35) என்பதே இதன் பொருள்.

காரமான மருந்தைப் போட்டுப் புண்ணை ஆற்றும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது. இதனை இந் நூலின் 24-வது பாட்டிலே பார்க்கலாம்.

புகழுடன் வாழ்வது மக்கள் கடமை. பிறர் துன்பத்தைக் களைந்து உதவி செய்வதே நல்லறம். அந்த நல்லறமே புகழைத் தரும். இந் நீதியையும் இந்நூல் உணர்த்து கின்றது.

மிக்க மிகுபுகழ் தாங்குபவோ தற்சேர்ந்தார்,
ஒற்கம் கடைப்பிடி யாதார்? (பா. 48)

''தன்னை அடைந்தவர்களின் தளர்ச்சியைத் தன்னுடைய தாகக் கொண்டு அதைக் களைய முன்வராதவர் மிகுந்த புகழைப் பெற முடியுமா?''

இதனால் ஒரு சிறந்த நீதியைக் காணலாம். இந் நூல் தமிழர்களின் தனிப்பட்ட வாழ்க்கைச் சிறப்பை—காதலன் காதலிகளின் அன்பு வாழ்க்கையை எடுத்துரைக்கின்றது.

# 4. ஐந்திணை அறுபது

ஐந்து திணை ஒழுக்கங்களைப் பற்றிக் கூறும் அறுபது பாடல்கள் அடங்கியது. இதற்கே ஐந்திணை அறுபது என்று பெயர். இந் நூலைக் கைந்நிலை என்னும் பெயருடன் வெளியிட்டிருக்கின்றனர்.

குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ற வரிசையிலே ஐந்து திணை ஒழுக்கங்களைப் பற்றியும் இந் நூலில் கூறப்படுகின்றன.

இந் நூலிலே இப்பொழுது சிதையாமல் முழு உருவில் 43 வெண்பாக்கள் இருக்கின்றன. ஒவ்வொரு திணையைப் பற்றியும் பன்னிரண்டு வெண்பாக்கள் இந் நூலில் பாடப் பட்டிருக்கின்றன. குறிஞ்சித் திணையைப் பற்றிய பன்னிரண்டு பாடல்களில் முதலும் எட்டாவதும் சிதைந்திருக் கின்றன; பத்து வெண்பாக்களே முழு உருவில் உள்ளவை. பாலைத்திணையைப் பற்றிய பன்னிரண்டு வெண்பாக்களில் 2, 5 எண்ணுள்ள வெண்பாக்கள் சிதைந்திருக்கின்றன. 3, 4, 8 ஆகிய மூன்று வெண்பாக்கள் இல்லை. 7 வெண்பாக்கள் தாம் முழு உருவில் இருக்கின்றன. முல்லைத் திணையைப்பற்றிய வெண்பாக்களில் மூன்றே வெண்பாக்கள் தாம் முழுசாக இருக்கின்றன. மூன்று முதல் பதினொன்று வரையில் உள்ள ஒன்பது வெண் பாக்கள் அழிந்து விட்டன. மருதத் திணையிலே இரண் டாவது வெண்பா மட்டும் சிறிது சிதைந்திருக்கின்றது.

ஏனைய பதினொன்றும் சிதைவின்றி அப்படியே இருக்கின்றன. நெய்தல் திணையைப்பற்றிய பன்னிரண்டு வெண்பாக்களும் அப்படியே யிருக்கின்றன. மூன்றாவது வெண்பாவில் இரண்டாவது அடியில் ந என்ற ஒரு எழுத்து மட்டும் சிதைந்திருக்கின்றது. ஆதலால் இதைச் சிதைவு என்று சொல்ல முடியாது.

அகத்திணை நூல்களிலே இதுவும் ஒரு சிறந்த நூல்; ஒவ்வொரு நிலத்திலும் உள்ள இயற்கைக் காட்சிகளை அழகாக எடுத்துரைக்கின்றது. இந்நூற் பாடல்கள் முழுவதும் கிடைத்தால் நன்றாக இருக்கும்.

இந்த நூலை இயற்றிய ஆசிரியர் பெயரும் தெரியவில்லை. இந்நூலின் அறுபதாவது பாட்டிலே தென்னவனும் கொற்கை நகரும் காணப்படுகின்றன. இச் செய்யுள் பாண்டியன் வெற்றியைப் பாராட்டுகின்றது. இதைக் கொண்டு இவர் பாண்டிய நாட்டில் வாழ்ந்த ஒரு புலவர் என்று எண்ணலாம்.

> வெந்த புனத்துக்கு வாசம் உடைத்தாகச்
> சந்தனம் ஏந்தி அருவி கொணர்ந்திடுடூஉம் (பா. 27)

"தீயால் வெந்த புனத்திலே, அத்தீயில் சிக்கி மடிந்த உயிர்களின் பிணநாற்றம் வீசுகின்றது. அந்தப் பிணநாற்றம் மறையும்படி, மலையிலிருந்து விழும் அருவிநீர் சந்தனத்தை ஏந்திக்கொண்டு வருகின்றது" என்பது குறிஞ்சித் திணையின் சிறப்பைக் குறித்த பாடல்.

> பாசிப் பசுஞ்சுனைப் பாங்கர் அழிமுதுநீர்
> காய்சின மந்தி பயின்று கனிசுவைக்கும்

பாசி படர்ந்து பசுமையாகக் காணப்படுகின்ற சுனை; அதன் பக்கத்தில் உள்ள பள்ளத்திலே ஊறிக் கிடக்கும் பழைய தண்ணீர்; அந்த நீரைச் சினமுள்ள குரங்கொன்று அள்ளி

அருந்துகின்றது; மரத்தில் உள்ள கனியையும் பறித்துத் தின்று சுவைக்கின்றது; இதுவும் குறிஞ்சி நில இயற்கைக் காட்சி. இந்நூலில் காட்டப்படும் வருணனைகள் இவ்வாறு இயற்கையாகவே அமைந்திருக்கின்றன.

## கருத்துள்ள செய்யுட்கள்

காதலன் ஒவ்வொரு நாளும் இரவிலே காதலியைக் கண்டு கலந்துமகிழ வருகின்றான். அதுபற்றித் தலைவி கவலை அடைகின்றாள். அவன் இரவில் வருவதனால் அவனுக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்தால் என்ன செய்வது என்பதுதான் அவள் கவலை. அவள் தன் காதலன் வரும் வரையிலும் உறங்குவதில்லை. அவளுடைய உள்ளக் கவலை உறக்கத்தைக் கெடுத்து வந்தது. இனி வெளிப்படையாக மணம் புரிந்துகொண்டு வாழ்ந்தால்தான் கவலையற்று வாழ முடியும் என்று அவள் கருதினாள். ஆதலால் தன் உள்ளத்தை அவள் தன் தோழியிடம் உரைக்கின்றாள். இந்த முறையிலே அமைந்துள்ளது ஒரு செய்யுள்.

''தோழியே! நமது தலைவன் பொன்போன்ற பூங் கொத்துக்களையுடைய வேங்கை மரங்கள் நிறைந்த மலை நாட்டை யுடையவன். அவன் மின்னலைப்போல் ஒளிவீசி இருளை ஓட்டுகின்ற வேலைக் கையிலேந்தி இந்த இருட்டிலே இப்பொழுது வந்து கொண்டிருப்பான். அவன் மலைக்காட்டு வழியிலே, வந்து கொண்டிருக்கும் இந்த நள்ளிரவிலே, எனது கண் இமைகள் ஒன்றோடு ஒன்று எப்படித்தான் பொருந்தும்? அவனை நினைத்து என் கண்கள் உறங்க மறுக்கின்றன.''

> பொன் இணர் வேங்கைப் புனம்சூழ் மலைநாட்டன்,
> மின்னின் அனையவேல் ஏந்தி, இரவினில்
> இன்னே வரும்கண்டாய் தோழி! இடையாமத்து
> என்னை இமைபொருந்து மாறு? (பா. 10)

இச் செய்யுளிலே ''நெஞ்சிலே கவலையுள்ளவர்கள் நிம்மதியாகத் தூங்க மாட்டார்கள்'' என்ற உண்மை அடங்கி யிருக்கின்றது.

மற்றொரு செய்யுள் மிகவும் அருமையானது. கணவன் மேல் கருத்து வேறுபட்ட காதலிக்குத் தோழி சமாதானம் கூறுவதாக அமைந்த செய்யுள் அது. கணவன் மனைவிகளுக்குள் கருத்து வேறுபாடு வளர்ந்தால் அவர்கள் வாழ்க்கையிலே இன்பம் இருக்காது. ஆகையால், காதலனுடைய நண்பர்களும், காதலியின் நண்பர்களும், அவர்கள் இருவருக்கும் சிறிது மனவேற்றுமை ஏற்பட்டால் கூட உடனே அதைப் போக்க முயற்சிப்பார்கள். இதுவே தமிழ் மக்களின் பண்பு.

காதலன் பொருள் தேடப் போயிருக்கின்றான். அவன் பொருளைப் பெரியதாக மதித்துத் தன்னை விட்டுப் பிரிந்ததைப் பற்றிக் காதலியின் உள்ளத்திலே ஒரு ஐயம் உண்டாகின்றது. நம்மைப்பற்றி அவன் உள்ளத்திலே வைத்திருந்த அன்பு குறைந்து விட்டதோ என்று எண்ணினாள். தலைவியின் இக் கருத்தைக் கண்ட தோழி அவளுக்குச் சமாதானம் கூறினாள்.

''கள்வர்கள் திரிந்துகொண்டிருக்கும் பாலைவனத்தைக் கடந்து பொருள் தேடச் சென்றார் காதலர். அவர் உள்ளம் வேறுபட்ட காலத்தில்தான் நம்மைவிட்டுப் பிரியத் துணிந்தார் என்று நினைக்கின்றாய் நீ! ஒளிவீசும் ஆபரணங்களை அணிந்த தலைவியே! நீ அப்படி நினைக்காதே! அவர் நம்மிடம் கொண்ட அன்பில் சிறிதும் குறைந்தவர் அல்லர். துன்பந்தரும், மலைப் பிளவுகளைக் கடந்து பொருள்தேடச் சென்றவர், நாம் காணும்படி விரைவில் வருதலை நீ காண்பாய்.''

கள்வர் திரிதரும் கானம் கடந்தவர்
உள்ளம் பிரிந்தமை நீஅறி தி-ஒள் இழாய்!
தொல்லை விடர் அகம் நீந்திப் பெயர்ந்தவர்,
வல்லை நாம் காணும் வரவு. (பா. 22)

இச்செய்யுளிலே ''உன்னுடன் சேர்ந்து இல்லறத்தை இன்பமுடன் நடத்துவதற்காகவே பொருளீட்டச் சென்றார். ஆதலால், அவர் அன்பிலே ஐயங்கொள்ளாதே'' என்று கூறும் கருத்தும் அமைந்திருப்பதைக் காணலாம்.

**பொய்யை வெறுத்தல்**

பொய் சொல்வது தவறு. பொய் சொல்வதை நல்லவர்கள் வெறுப்பார்கள். பொய்யர்களை மக்கள் மதிப்பதில்லை. அவர்களோடு முகங்கொடுத்துப் பேசவும் முன்வர மாட்டார்கள். இன்றும் பொய் புகல்வோரைப் பொதுமக்கள் இகழ்ந்துரைப்பதைப் பார்க்கின்றோம். இது பண்டைத் தமிழர் பண்பாகும்.

காதலன் பரத்தையர் வீட்டுக்குப் போய்விட்டான். சில நாட்கள் கழித்து வீட்டிற்குத் திரும்ப நினைத்தான். திடீரென்று திரும்பிவந்து வீட்டுக்குள் புகுந்தால் காதலியின் வரவேற்பைப் பெறமுடியாது என்பது அவனுக்குத் தெரியும். ஆதலால் அவன் பாணனை அனுப்பிக் காதலிக்குச் சமாதானம் கூறும்படி செய்தான். தலைவனால் தூதாக அனுப்பப்பட்டு வந்த பாணன், தலைவியை அடைந்து ஏதோதோ பொய்யும் புளுகும் அளந்தான். ''தலைவன் இனித் தவறு செய்ய மாட்டான். அவன் இப்பொழுது செய்த குற்றத்திற்காக வருந்துகின்றான்; இக் குற்றத்தை மன்னிக்கும்படி வேண்டுகின்றான். இனி வேசையர் வாழும் திக்கைத் திரும்பிப் பார்ப்பதே இல்லையென்று உறுதி கூறுகின்றான்'' என்றெல்லாம் சொன்னான் பாணன்.

பாணன் இப்படிச் சொல்வது புதிதன்று. இதற்கு முன் எத்தனையோ தடவை தலைவன் இவ்வாறு வாக்குறுதி

தந்தது உண்டு. இது தலைவிக்குத் தெரியும். ஆதலால் பாணன் கூறுவது பொய்யுரை என்றே அவள் நினைத்தாள். நினைத்ததும் அப்பாணனைக் கடிந்து கொள்ளுகின்றாள்.

பயம்இல் யாழ்ப்பாண! பழுதாய கூறாது
எழு! நீபோ, நீடாது மற்று! (பா. 46)

பயனற்ற சொற்களைப் பேசும் யாழ் வாசிக்கும் பாணனே! குற்றமுள்ள பொய்மொழிகளைப் பேசாமல் நீ எழுந்து போ! இங்கே தாமதிக்காதே.''

பொய்ப்பாண!
இருக்க! எம் இல் உள் வரல் (பா. 47)

''பொய் சொல்லும் பாணனே! அப்படியே இரு! எம் வீட்டுக்குள்ளே வரவேண்டாம்.'' இவ்விரண்டு செய்யுட்களும் பொய் பேசுவதைத் தமிழர்கள் எவ்வளவு வெறுத்தனர் என்பதைக் காட்டும்.

பல்லி சொல்வதைத் தமிழர்கள் நம்பினர். பல்லி சொல்லுக்குப் பலன் உண்டு என்று எண்ணினர்; இதனை இந் நூலின் 18-வது செய்யுளில் அறியலாம். இத்தகைய பல கருத்துக்கொண்ட சிறந்த நூல் ஐந்திணை அறுபது.

# 5. ஐந்திணை எழுபது

இது ஐந்து திணைகளைப் பற்றியும் கூறும் எழுபது வெண்பாக்கள் கொண்டது. ஆதலால் ஐந்திணை எழுபது என்ற பெயர் பெற்றது. குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம் நெய்தல் என்ற வரிசையிலே ஐந்து திணைகளைப் பற்றியும் கூறுகின்றது; ஒவ்வொரு திணையைப் பற்றியும் பதினான்கு பாடல்கள் அமைந்திருக்கின்றன.

இந் நூலில் இன்றுள்ள வெண்பாக்கள் அறுபத்தாறு தான். முல்லையைப் பற்றிய பாடல்களில் இரண்டு வெண் பாக்கள் இல்லை. நெய்தல் பற்றிய பாடல்களிலே இரண்டு வெண்பாக்கள் இல்லை.

இதற்குக் கடவுள் வாழ்த்துப் பாடல் ஒன்று உண்டு. இது விநாயகரைப் பற்றியது. இக் கடவுள் வாழ்த்துச்செய்யு ளின் நடையும் போக்கும், பார்த்தால் நூலாசிரியரால் பாடப் பட்டது அன்று எனத் தெரிகின்றது. பதினெண் கீழ்க் கணக்கு நூல்கள் தோன்றிய காலத்தில் விநாயகர் என்ற தெய்வம் இருந்ததாகத் தெரியவில்லை. ஆதலால் பிற் காலத்தார் யாரோ இந்த வாழ்த்துப் பாடலைச் செய்து இதனுடன் இணைத்து விட்டனர்.

இந் நூலைச் செய்த ஆசிரியர் பெயர் மூவாதியர். இவரைப் பற்றிய வரலாறு ஒன்றும் தெரியவில்லை. இவர் பாடிய வேறு நூல்களைப் பற்றியோ, செய்யுட்களைப்

பற்றியோ ஒன்றும் காணக் கூடவில்லை. இந்நூற் பாடல் களிலே, இயற்கைக் காட்சிகளையும், இனிமையையும் காணலாம். அழகிய கற்பனைகளும் அமைந்திருக்கின்றன.

## செய்யுட் சிறப்பு

தலைவியிடம், அவள் காதலனைப் பழித்துப் பேசினாள் தோழி. அதைத் தலைவியால் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை. ''தலைவன் இரக்க சிந்தை படைத்தவன். அவன் என்னை என்றும் கைவிட்டுவிட மாட்டான். அவன் தம்மைக் கைவிட்டாலும், நாமாக அவனை விட்டுப் பிரியமாட்டோம்'' என்று கூறினாள்.

''காட்டுப் பசு ஒன்று மேய்ந்து கொண்டிருக்கின்றது. ஒரு குரங்கு, தானே பழுத்து முதிர்ந்த பலாப் பழத்தின் சுளைகளை நன்றாகத் தின்றது. பழம் சாப்பிட்டபின் பால் சாப்பிட வேண்டும் அல்லவா? ஆகையால் அந்த மந்தி, அங்கு மேய்ந்து கொண்டிருந்த பசுவின் மடியிலே வாய் வைத்துப் பால் குடிக்கத் தொடங்கியது. பசு, அந்தக் குரங்கைத் திரும்பிப் பார்க்கவில்லை. தன் கன்றுதான் பால் குடிக்கிறது என்று நினைத்துக்கொண்டு பாலைச் சுரந்து நின்றது. இத்தகைய பார்க்கத் தகுந்த காட்சி யமைந்த அழகிய மலைநாடன் அவன். அவனை எக்காலத்திலும் நம் உயிருள்ள வரையிலும் விட்டுப் பிரிவதில்லை'' என்றாள் தலைவி. இப்பொருள் பொதிந்த பாட்டுத்தான் கீழ் வருவது.

> மன்றப் பலவின் சுளைவிளை தீம்பழம்
> உண்டுவந்த மந்தி, முலைவருடக், கன்றுஅமர்ந்து
> ஆமா சுரக்கும் அணிமலை நாடனை
> யாமாப் பிரிவது இலம் (பா. 4)

இச் செய்யுளில் பசுவின் தன்மை குறிக்கப்பட்டுள்ளது. அது விரும்பினால்தான் தன் கன்றுக்குப் பால் தரும்; விரும்பா

விட்டால், கன்று ஊட்டினால்கூட, பாலைச் சுரக்காமல் அடக்கிக் கொள்ளும்; இத்தன்மை பசுவுக்கு உண்டு

மற்றொரு பாட்டு மருத நிலத்தில் நடக்கும் நிகழ்ச்சியை உரைப்பது. கணவன், மனைவியை விட்டுச் சென்று பரத்தையர் வீட்டில் வாழ்கின்றான். அவன் தன் இல்லத்திற்குத் திரும்ப நினைத்தான். தன் பிரிவால் மனைவி கோபங் கொண்டிருப்பாள் என்பது அவனுக்குத் தெரியும். திடீரென்று வீட்டுக்குள் நுழைந்தால் இல்லக் கிழத்தியின் சினத்திற்கு இலக்காக வேண்டும் என்று எண்ணினான். மனைவியின் சினத்தைத் தணித்து அவள் உள்ளத்திலே சாந்தம் பிறந்த பின்பே வீட்டுக்குள் நுழையலாம் என்று முடிவு செய்தான்.

ஊடியிருக்கும் காதலியின் ஊடலைத் தணிக்க அக் காலத்திலே பாணர்களைத் தூதாக அனுப்புவார்கள். அவ் வழக்கப்படி காதலன் தனக்கு வேண்டிய ஒரு பாணனைக் காதலியிடம் சமாதானத் தூதாக அனுப்பினான். தூதாக வந்த பாணன், அவளிடம் ஏதேதோ சமாதானப் பேச்சுப் பேசினான். தலைவனைப்பற்றி அவன் சொல்லியதை அவள் ஏற்றுக் கொள்ளவில்லை. அதை அறிவிக்கும் வகையிலே அவள் தூதனிடம் பேசினாள்.

> யாணர்நல் லூரன் திறம்கிளப்பல்! என்னுடைய
> பாண! இருக்க; அதுகளை; நாண் உடையான்!
> தன்உற்ற எல்லாம் இருக்க, இரும்பாண!
> நின்உற்றது உண்டேல் உரை. (பா. 48)

என்பதே அச் செய்யுள். இச் செய்யுளிலே, கணவன் மேல் சினங்கொண்ட மனைவி, தன் வெறுப்பை வெளியிடும் அழகைக் காணலாம்.

''எனது அருமையான பாணனே! புதிய செல்வங்கள் வளரும் சிறந்த ஊர்களையுடைய தலைவனது மேன்மையைப்

பற்றி என்னிடம் அளக்கவேண்டாம்! சும்மா இரு! அந்தப் பேச்சை விட்டுத் தள்ளு! அவன் பிற பெண்களைப் பார்க்க வெட்கப்படுகிறவன்தான்! அவன் அடைந்த துன்பமெல்லாம் இருக்கட்டும்! பெரிய யாழை உடையவனே! அவனைப் பற்றிச் சொன்னது போதும்! உனக்கு ஏதேனும் குறையிருந் தால் கூறு! உன்மீது எனக்கு வெறுப்பில்லை. உன் குறை யைத் தீர்க்கின்றேன். அவனைப்பற்றி மட்டும் சொல்ல வேண்டாம்!'' இதுவே இப் பாட்டில் அமைந்துள்ள பொருள்.

இச் செய்யுளிலே தமிழர்களின் சிறந்த பண்பொன்றைக் காணலாம். எய்தவனிருக்க அம்பை நோவது அறியாமை என்றொரு பழமொழியுண்டு. குற்றவாளியை விட்டு விட்டுக் குற்றவாளியால் தூண்டப்பட்டவனைக் கோபித்துக்கொள் வது அறியாமை என்பதே இப் பழமொழியின் கருத்து. இக் கருத்துக்கு இலக்காகாதவர்கள் நல்ல குடியிலே பிறந்த பெண்கள். அறிவுள்ள பெண்களும் இக்கருத்துக்கு இலக்காக நிற்கமாட்டார்கள். இந்த உண்மையை இப்பாடலிலே காண லாம்.

அறியாத பெண்களாயிருந்தால், தூது வந்த பாணன் மேல் சீறி விழுவார்கள். இந்தத் தலைவி அப்படிச் செய்ய வில்லை. பாணன்மீது பரிவு காட்டினாள். குற்றம் புரிந்த கொழுநனையே கோபித்துக் கொண்டாள். இச் சிறந்த கருத்தமைந்த செய்யுள் இது. இதுபோன்ற இன்னும் பல செய்யுட்களை இந்நூலிலே காணலாம்.

### சிறந்த பல செய்திகள்

''அறிவுள்ளவர்களின் நட்பே சிறந்தது. அது எப் பொழுதும் அழியாமல் நிலைத்து நிற்கும். அவர்கள் நட்பே என்றும் வலிமையுளள துணையாக நிற்கும். மேலும் மேலும் பல நன்மைகளைத் தரும்.''

சான்றவர் கேண்மை சிதைவு இன்றாய் ஊன்றி
வலியாகிப் பின்னும் பயக்கும். (பா. 5)

கற்புள்ள பெண்கள் கணவனையே உயிர் என்று கருதி யிருந்தனர். அவன் உயிர் வாழ்ந்தால்தான் தாம் உயிர் வாழ்வர். அவன் வீழ்ந்தால் தாமும் வீழ்வர். இதை விளக்கும் செய்யுள் கீழ்வருவது:

குறை ஒன்று உடையேன்மன் தோழி! நிறையில்லா
மன்உயிர்கு ஏமம் செயல் வேண்டும்; இன்னே
அராவழங்கும் நீள்சோலை நாடனை, நம் இல்
இராவாரல் என்பது உரை! (பா. 14)

''தோழியே எனக்கு ஒரு குறையுண்டு; அது நின்னால் தான் முடியவேண்டும்; என்பால் நிலையில்லாமல் இருக்கும் என்னுயிர்க்கு ஒரு பாதுகாவலைச் செய்யவேண்டும். இப் பொழுதே அதைச் செய்யவேண்டும். நமது தலைவன் பாம்புகள் திரிந்து கொண்டிருக்கின்ற நீண்ட சோலையை யுடைய நாட்டின் தலைவன்; அவனிடம் அச்சோலையை இரவிலே கடந்து நம் வீட்டுக்கு வரவேண்டாம் என்று கூற வேண்டும்'' என்றாள். இதனால் காதலும் கற்பும் நிறைந்த மாதரின் இயல்பைக் காணலாம்.

முயற்சியினாலேயே செல்வம் உண்டாகும். பெரிய சிறந்த முயற்சிக்கு ஏற்றாற்போல் சிறந்த செல்வம் கை கூடும். இதுவே பண்டைத்தமிழர் நம்பிக்கை.

பெருந்தகு தாளாண்மைக் கேற்ப
அரும்பொருள் ஆகும். (பா. 29)

என்பது இவ்வுண்மையைத் தெரிவிக்கின்றது.

செல்வத்திலேயே சிந்தையைச் செலுத்தியவர்கள் எப் பொழுதும் அதைச் சேர்ப்பதிலேயே குறியாய் இருப்பார்கள்;

அவர்கள் சிறிதும் இரக்கம் காட்டமாட்டார்கள்; தயவு தாட்சண்யம் என்பது எள்ளளவும் அவர்களிடம் இராது. ''தாட்சண்யம் தனநாசம்'' என்பதைப் பின்பற்றி நடப்பர்.

மெல்லியல் கண்ணோட்டம் இன்றிப் பொருட்கு இவர்ந்து
நில்லாத உள்ளத் தவர் (பா. 30)

இரக்கத் தன்மையாகிய கருணை சிறிதும் இல்லாமல், பொருள் தேடுவதிலேயே விருப்பங்கொண்டு. நம்மிடம் அன்பு நிலைபெறாத உள்ளம் உடையவர் என்பதால் இவ் வுண்மையைக் காணலாம்.

இல்லறமே சிறந்ததாகும். அறிஞர்கள், ஆராய்ச்சி யுள்ளவர்கள், இல்லறம், துறவறம் இரண்டிலே இல்லறமே சிறந்தது என்று கூறினர். ஆதலால் அதுவே அன்புடன் விரும்பத்தக்கதாகும்.

உள்நாட்டம் சான்றவர் தந்த நசையிற்று (பா. 53)

ஆழ்ந்த ஆராய்ச்சி நிறைந்த அறிஞர்கள் சிறந்தது என்று ஏற்படுத்தியது; அன்புடன் கூடியது என்பது இவ் வுண்மையை விளக்கும்.

**பழக்க வழக்கங்கள்**

பண்டைக்காலப் பழக்க வழக்கங்கள் சிலவற்றையும் இந் நூலால் அறியலாம்:

பசுக்கள் இடையர்கள் ஊதும் கொன்றைக் குழலின் இனிய ஓசையைச் சுவைக்கும். அவர்கள் அக்குழலை ஊதினால் பசுக்கள் கூடும்; அவர்கள் ஊதிக்கொண்டே சென்றால், அவர்களைத் தொடர்ந்து அவைகள் செல்லும்.

கொன்றைக் குழல் ஊதிக் கோவலர் பின் நிரைத்துக்
கன்று அமர் ஆயம் புகுதர (பா. 22)

கொன்றைக்குழலை ஊதிக்கொண்டு போகும் இடையர்கள் பின்னே, வரிசையாக, கன்றை விரும்பும் பசுமந்தை

ஊர்க்குள் நுழைய என்பதனால் பசுக்களின் இசை உணர்ச்சியை அறியலாம்.

தும்மல் இயல்பாக வருவதன்று, யாரோ நம்மை நினைப்பதனால்தான் தும்மல் வருகின்றது என்பது நம்பிக்கை. இந் நம்பிக்கை யுள்ளவர்கள் இன்றும் இருக்கின்றனர். பண்டைத் தமிழர்களிடமும் இந்த நம்பிக்கை இருந்தது. இதனை இந்நூலின் நாற்பதாவது செய்யுளால் அறியலாம்.

பெண்களுக்கு இடது கண் துடித்தால் நன்மையுண்டு. கனவுக்குப் பலன் உண்டு. நெஞ்சத்திலே எழும் நினைப்புக் காரணமாக, உடம்பின் உறுப்புக்களிலே மாற்றம் ஏற்படும். பல்லி சொல்வதற்குப் பலன் உண்டு. இத்தகைய நம்பிக்கைகள் பழந்தமிழர்களிடம் இருந்தன.

பூம்கண் இடம்ஆடும்; கனவும் திருந்தின;
ஓங்கிய குன்றம் இறந்தாரை யாம் நினைப்ப
வீங்கிய மென்தோள் கவினிப் பிணிதீரப்
பாங்கத்துப் பல்லி படும். (பா. 41)

''உயர்ந்த மலையைக் கடந்து சென்ற நம் காதலரைப் பற்றி நாம் நினைத்த உடனே, அழகிய கண்களிலே இடக் கண் துடிக்கின்றது; கண்ட கனவுகளும் நல்ல கனவுகளாக இருந்தன; இளைத்துப்போன மெல்லிய தோள்கள் அழகுடன் பருத்தன; துன்பம் தீரும்படி பக்கத்திலே பல்லியும் சொல்லும்.'' இதனால் மேலே கூறிய நம்பிக்கைகளைக் காணலாம். இத்தகைய பல சிறந்த கருத்துக்களையுடையது ஐந்திணை எழுபது என்னும் நூல்.

# 6. திணைமாலை நூற்றைம்பது

ஐந்திணைகளைப்பற்றியும் வரிசையாகச் சொல்லுவது, நூற்றுஐம்பது பாடல்கள் அடங்கியது, திணை மாலை நூற்றைம்பதாகும்.

பெயர், திணைமாலை நூற்றைம்பது; ஆனால் இதி லிருக்கும் வெண்பாக்களின் எண்ணிக்கை நூற்று ஐம்பத்து மூன்று. இதன் இறுதியிலே பாயிரச் செய்யுள் ஒன்று காணப் படுகின்றது. ஆக இந்நூலில் இன்றுள்ள பாடல்கள் 154 ஆகும்.

படித்தவன் பாட்டைக் கெடுத்தான், எழுதினவன் ஏட்டைக கெடுத்தான் என்று ஒரு பழமொழி உண்டு. பழங் காலத்திலே நூல்கள் எல்லாம் பனையோலையில் எழுதப்பட்டு வந்தன. அப்பொழுது ஒருவர் படிப்பார்; மற்றொருவர் எழுது வார். படிப்பவர் தப்பாகப் படிப்பதும் உண்டு; எழுதுகிறவர் தப்பாக எழுதுவதும் உண்டு. இது மட்டும் அன்று, அவர்கள் தங்களுக்குப் பிடித்தமானவற்றைச் சேர்த்தும் எழுதிவிடு வார்கள்; பிடிக்காதவற்றைத் தள்ளியும் எழுதிவிடுவார்கள். இந்த உண்மையைக் குறிப்பதுதான் மேலே காட்டிய பழமொழி.

இந்நூலுள் அளவுக்குமேல் உள்ள மூன்று பாடல்கள் பிற்காலத்தினரால் சேர்க்கப்பட்டிருக்கலாம். பாயிரச் செய்யுள் ஆசிரியர் பாடியதன்று. வேறொருவரால் நூலைச் சிறப்பித் துப் பாடப்பட்டதாகும்.

குறிஞ்சியில் 31 வெண்பா, நெய்தலில் 31 வெண்பா, பாலை யில் 30 வெண்பா, முல்லையில் 31 வெண்பா, மருதத்தில் 30 வெண்பா. திணையும் இந்த வரிசையிலேயே அமைந் திருக்கின்றது. குறிஞ்சியிலும், நெய்தலிலும், முல்லையிலும் ஒவ்வொரு வெண்பா மிகுந்திருக்கின்றது.

இந் நூலாசிரியர் பெயர் கணிமேதாவியார். கணி என்றால் சோதிடர்; மேதாவியார் என்றால் வல்லுநர்; கணி மேதாவியார் என்றால் சோதிடத்திலே வல்லுநர் என்று பொருள் கொள்ளலாம். இவரைப்பற்றிய வரலாறு வேறு ஒன்றும் தெரியவில்லை.

இந்நூலின் வெண்பாக்கள் சிறிது கடினமானவைதாம்; எல்லோரும் படித்து எளிதில் பொருள் தெரிந்துகொள்ள முடியாது; எல்லா வெண்பாக்களிலும் மோனையும் எதுகையும் அழகாக அமைந்திருக்கின்றன. ஆயினும் அவ்வளவு இனிமை யான நடையென்று நவில முடியாது.

பல பாடல்களுக்கு நேராகப் பொருள் கூறலாம். சில பாடல்களுக்கு நேராகப் பொருள் சொல்ல முடியாது. பதங் களை மாற்றி யமைத்துப் பொருள் சொன்னால்தான் தெளி வாக விளங்கும். பழந்தமிழ்ச் சொற்கள் பல இந்நூல் பாடல் களிலே பயின்று வருகின்றன. இப் பாடல்களிலே குறிப்பிடப் படும் சில மலர்கள், மரங்களைப் பற்றி இன்று அடையாளம் காணமுடியாது. போதுமான தமிழ்ப் பயிற்சி யில்லாதார் இந் நூலைப் படிக்கும்போது, சிறிது பொறுமையும் முயற்சியும் காட்டித்தான் ஆக வேண்டும்.

ஒவ்வொரு திணையைப் பற்றிய பாடல்களும், அந்தந்த நிலத்தில் உள்ள இயற்கைக் காட்சிகளைப் படம் பிடித்தது போல எடுத்துக் காட்டும். இயற்கை நிகழ்ச்சிகளை எடுத் துரைப்பதிலே இந்நூலாசிரியர் மிகவும் வல்லுநர். தமிழர் பண்பாட்டையும், பழக்க வழக்கங்கள் சிலவற்றையும் இந் நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

**பாடல்கள்**

இந்நூற் பாடல்களின் பொருட் சிறப்பைக் காண இரண்டொரு வெண்பாக்களே போதும். உதாரணமாகச் சில பாடல்களைக் காண்போம்.

மணமாகாத மங்கை ஒருத்தி; குறிஞ்சி நிலப் பெண்; திணைப்புனங் காத்திருந்தாள். நாளடைவில் அவளுடைய தோற்றத்திலே மாறுதல் காணப்பட்டது. அதனால் அவளுடைய நடத்தையிலே ஐயமுற்றனர் பெற்றோர். உடனே ''தினைப்புனம் காத்தது போதும், வீட்டுக்கு வந்துவிடு'' என்று சொல்லி அந்தப் பெண்ணை வீட்டிலேயே வைத்துவிட்டனர். வைத்ததும் அவளிடம் ஏற்பட்ட மாற்றம் மட்டும் மறையவில்லை. மேலும் மாறிக்கொண்டே வந்தாள். அவளுடைய மாறுதல் வளர்ந்து கொண்டே வந்தது.

அந்த மங்கையை வளர்த்த செவிலித்தாய், அவளுடைய மாறுதலுக்குக் காரணத்தை அறிய விரும்பினாள். அக்காரணம் தோழிக்குத் தெரியும்; அவள் தனக்குத் தெரிந்ததை மறைக்காமல் செவிலித்தாயிடம் சொல்லுகின்றாள்.

''நமது மலையுள் பலாமரங்கள் நிறைந்திருக்கின்றன. இன்னும் பல வளங்களும் நிறைந்திருக்கின்றன. அதன் அண்டையிலே உள்ள தினைப்புனத்திலே நானும் என் தலைவியும் பரண் மேலே அமர்ந்து காவல் காத்துக் கொண்டிருந்தோம். அச்சமயத்தில் பருத்த துதிக்கையையுடைய ஒரு யானை—அதுவும் மதம் பிடித்த யானை—எங்களை நோக்கிச் சினத்துடன் ஓடி வந்தது. உடனே ஒரு கட்டிளங் காளை தோன்றினான்: அந்த யானையை அலறிக்கொண்டு ஓடும்படி அடித்து விரட்டினான். எங்களைக் காப்பாற்றினான். அவனையே என் தலைவியின் தோள்கள் தழுவிக் கொள்ளும்; வேறொருவன் தோள்களைத் தொடுவதற்குச் சம்மதிக்கமாட்டா'' என்றாள் தோழி. இதன் மூலம் தன்

தலைவியின் மாறுதலுக்கான காரணத்தைக் கூறினாள். எங்கள் உயிரைக் காப்பாற்றிய அவனுடைய நன்றியை எம் தலைவி மறக்கமாட்டாள். நன்றி மறத்தல் தமிழர் பண்பாடன்று என்ற தமிழர் நெறியையும் உரைத்தாள் தோழி. இதை உணர்த்தும் செய்யுள் கீழ் வருவது:

> வருக்கை வளமலையுள், மாதரும் யானும்
> இருக்கை இதன் மேலேம் ஆகப்,—பருக்கைக்
> கடாஅ மால் யானை கடிந்தானை அல்லால்,
> தொடாஅ ஆல், என் தோழி தோள். (பா. 14)

இச் செய்யுளின் வழியாகத் தமிழரின் நன்றி மறவாத உயர்ந்த பண்பாட்டைக் காணலாம். தமிழரின் பண்பாட்டைக் குறிக்கும் மற்றொரு பாடலையும் கீழே காண்போம்.

களவு மணவாழ்க்கையிலே வாழும் தம்பதிகள் இருவர். அவர்கள் தம் களவு வெளிப்படுவதற்கு முன்பு கற்பு மணத் தம்பதிகளாகிவிட வேண்டும் என்று முடிவு செய்தனர்; இதன் பின் தலைவன், தன் காதலியை அவளுடைய பெற்றோர் அறியாமல் தன்னுடன் அழைத்துக் கொண்டுபோய் விட்டான். கருத்து ஒருமித்த காதலர்கள் மணம் புரிந்து கொள்ளுவதற்கு ஏதேனும் தடை ஏற்பட்டால், இவ்வாறு செய்வது பண்டைக் கால வழக்கம்.

தலைவியை வீட்டிலே காணாத செவிலித்தாய், அவளைத் தேடிக்கொண்டு புறப்பட்டாள். பாலை நிலத்தின் வழியே அவள் போகும்போது எதிரிலே வந்த மற்றொரு தம்பதிகளைப் பார்த்தாள். அவர்களிடம் ''உங்களைப்போல் இருவரை இவ்வழியிலே கண்டீரோ'' என்று கேட்டாள். அவள் கேள்விக்கு ஆடவன் விடையளித்தான்.

''விரைவாக நீங்கள் நடந்து போங்கள்; அவர்கள் நம்மிடம் அகப்பட்டுக் கொள்ளுவார்கள்; நீங்கள் எண்ணும்

எண்ணமும் விரைவில் கைகூடும்; நீங்கள் நினைத்துக் கொண்டு வந்த சூரியனைப் போன்ற அந்த ஆடவனை நான் பார்த்தேன்; சந்திரனைப் போன்ற அந்த மங்கையை என் துணைவி பார்த்தாளாம்'' என்றான் அவன்.

> நண்ணிநீர் செல்மின்! நமர் அவர் ஆபவேல்
> எண்ணிய எண்ணம் எளிது அரோ!—எண்ணிய
> வெம்சுடர் அன்னானை யான்கண்டேன், கண்டாளாம்
> தண்சுடர் அன்னாளைத் தான். (பா. 89)

இச் செய்யுள் ஒரு உயர்ந்த பண்பை எடுத்துரைக்கின்றது. ஒரு ஆடவன் பிற பெண்களைக் கண்ணால் நோக்குதலும் தவறு என்பதே அப்பண்பு. இது தமிழர்களின் சிறந்த பண்பாடுகளுள் ஒன்று. பெண்களைப் போலவே ஆண்களும், பிற பெண்களைப் பார்க்காத கற்புள்ளவர்களா யிருக்க வேண்டும் என்பதே இதன் கருத்து. பண்டைக் காலத் தமிழர் ஒழுக்கத்திற்கு இச் செய்யுள் ஒரு சிறந்த உதாரணம்.

இயற்கைக் காட்சிகளை இந்நூலாசிரியர் எவ்வாறு எடுத்துக் காட்டுகிறார் என்பதற்கு ஒரு உதாரணம். மருத நிலத்தின் காட்சியைக் கூறும் ஒரு வெண்பா. மிகவும் தெளிவும், இயற்கையை அப்படியே சித்தரிக்கும் அழகும் அமைந்தது அது.

''ஒரு எருமை; சிவந்த கண்கள்; வலிமையான கொம்புகள். அது, நீர் நிறைந்த வயல்களையும் அவற்றை அடுத்த பள்ளங்களையும் பார்த்தது. மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. ஆனந்தமாகக் கனைத்துக் கொண்டது. அழகான கழனிகளிலும் பள்ளங்களிலும் பாய்ந்து நெடுநேரம் கிடந்தது. பிறகு கரையேறி வரும்போது அதன் முதுகின்மேல் குவளைப் பூக்கள் இருந்தன; சிவந்த கயல் மீன்கள் இருந்தன; தவளைகளும் உட்கார்ந்து கொண்டிருந்தன. இவைகளைச் சுமந்து கொண்டு அந்த எருமை கரையேறி வருகின்றது.''

செம்கண் கரும் கோட்டு எருமை, சிறு கணையால்
அம் கண் கழனிப் பழனம் பாய்ந்து—அங்கண்
குவளை அம் பூவொடு, செம் கயல் மீன் சூடித்
தவளையும் மேல் கொண்டு வரும். (பா. 147)

என்பதே மேல் உள்ள பொருள் அமைந்த வெண்பா. நீர் நிறைந்த வயல்கள்; குளங்கள்; குவளை மலர்கள்; மீன்கள்; எருமைகள். இவைகள் மருத நிலத்தில் எங்கும் உள்ளவை. இந்த இயற்கையை எடுத்துரைத்தது இவ் வெண்பா.

## தெய்வங்கள்

திருமால், பலதேவன், முருகன் ஆகிய தெய்வங்களைக் குறிப்பிடுகின்றார் இவ்வாசிரியர்.

'மாயவனும் தம்முனும்' (பா. 56) என்பது திருமாலையும் பலதேவனையும் குறிப்பது. ''ஆழியான்'' (பா. 96) என்பதும் திருமாலைக் குறித்தது. ''மாயவன்'' (பா. 97) என்பதும் திருமால்.

'இரும் கடல் மா கொன்றான் வேல்' (பா. 93) என்பது முருகனைக் குறித்தது. ''பெரிய கடலிலே மா மர வடிவாகி நின்ற சூரனைக் கொன்ற முருகனது வேல்'' என்பதே இதன் பொருள்.

## நம்பிக்கைகளும் பழக்கங்களும்

நல்வினையால்தான் ஒருவருக்குச் செல்வம் பெருகும் என்ற நம்பிக்கை பண்டைத் தமிழரிடம் இருந்தது. 'வினை விளையச் செல்வம் விளைவது போல்' (பா. 5) என்பது உதாரணம்.

நல்ல நாளிலே தொடங்கும் காரியம் இடையூறில்லாமல் வெற்றி பெறும் என்பது பழந்தமிழர் நம்பிக்கை. பெண் கேட்கச் செல்வார் நல்ல நாள் பார்த்து அந் நாளிலே புறப்படுவார்கள். 'நாள் கேட்டுத் தாழாது வந்தால் நீ எய்துதல் வாயால்' (பா. 46)-''நல்லநாள் கேட்டுக் கொண்டு தாமத

மில்லாமல் வந்தால் இப்பெண்ணை அடைவது உண்மை'' என்பது இதன் பொருள்.

நாள் பார்த்து நல்ல நேரத்திலே திருமணம் புரியும் வழக்கமும் பழந்தமிழர் வழக்கமாகும். ''நாள் ஆய்ந்து வரைதல் அறம்'' (பா. 52) என்பதனால் இதனைக் காணலாம்.

சோதிடர்களே நல்ல நாட்களைக் குறித்துக் கொடுப்பார்கள். அந்த நல்ல நாளிலே திருமணம் முதலிய மங்கலமான செயல்களை நடத்துவார்கள். இவ்வழக்கம் தமிழகத்தில் இருந்தது. ''குறிஅறிவார்க் கூஉய்க் கொண்டு ஓர் நாள் நாடி நல்குதல் நன்று'' (பா. 54)—நல்ல குறிகளை அறிந்து சொல்லும் சோதிடர்களை அழைத்து, ஓர் நல்ல நாளைத் தேர்ந்தெடுத்து மணம் புரிந்து கொடுத்தால் நலமாகும் என்பதே இதன் பொருள். இதனால் சோதிடர்களைக் கொண்டு நாள் பார்க்கும் செய்தியைக் காணலாம்.

குறி கேட்கும் வழக்கமும் பண்டைக் காலத்தில் இருந்தது. குறி சொல்வோர் கழங்குக் காய்களை வைத்துக் கொண்டு, அவற்றை எண்ணிக் குறி சொல்லுவார்கள். குறி சொல்லுகின்றவர்கள் தெய்வத்தின் உதவியினாலேயே உண்மையை அறிந்து உரைக்கின்றனர் என்று நம்பி வந்தனர். இதனை இந்நூலின் 90-வது வெண்பாவால் காணலாம்.

மக்கள்மேல் தெய்வம் ஏறி நிற்பதாக நம்பினர்; முருகனுக்குப் பூசை செய்யும் பூசாரி, கையில் வேலேந்தி ஆவேசங் கொண்டு ஆடுவான்; குறி சொல்வான். வேலைக் கையிலேந்தி ஆடுவோனுக்கு வேலன் என்று பெயர். தெய்வத்திற்கு ஆட்டுக் குட்டிகளையும் பலி கொடுப்பர். கள்ளும் வைத்துப் படைப்பார்கள். இது பழந்தமிழர் வழக்கம். ''வேலனார் போக, மறிவிடுக்க, வேரியும் பாலனார்க்கு ஈக', (பா. 21)—வெறியாடுவதற்காக வந்த வேலேந்திய பூசாரி போகட்டும்; ஆட்டுக் குட்டியையும் விட்டு விடுங்கள்; மணமுள்ள மதுவை

அதை விரும்பும் தன்மையுள்ளவர்களுக்குக் கொடுத்து விடுங்கள் என்பதே இதன் பொருள். இது தமிழர்கள் தெய்வத்தைப் பூசித்த முறையைக் கூறிற்று.

இவ்வுலகத்திற்கு அப்பால் இன்பம் நுகரக் கூடிய சுவர்க்கலோகம் ஒன்று உண்டென்று நம்பினர். இதனை 62-வது வெண்பாவிலே காணலாம்.

சங்கு, சக்கரம், வில், வாள், தண்டு என்பவை திருமாலின் படைகள். பொன்னால் இப்படைகளைச் செய்து குழந்தை களின் கழுத்திலே கட்டியிருப்பார்கள். இதற்கு ஐம்படைத் தாலி என்று பெயர். இத்தகைய ஐம்படைத்தாலி அணியும் வழக்கம் இந்நூலில் கூறப்படுகின்றது. இதை இந்நூலின் 66-வது வெண்பாவால் அறியலாம்.

குழந்தைகள் பூணும் நகையையே பண்டைக் காலத்தில் தாலி என்று கூறிவந்தனர். பிற்காலத்தில் தான் தாலி என்பது, கணவனால் மனைவியின் கழுத்திலே கட்டப்படும் ஒரு குறிப்பிட்ட அணியைச் சுட்டி வந்தது.

இந்நூலிலே கூறப்பட்டிருக்கும் ஒரு உண்மை நமக்கு வியப்பைத் தருகின்றது. சூரிய வெப்பத்தால் தான் நிலத்தில் உள்ள நீர் ஆவியாக மேலெழுந்து மேகமாகி மழை பெய்கின் றது என்பதுதான் அவ்வுண்மை. 'எல்லை தருவான், கதிர் பருகி ஈன்ற கார்' (பா. 105)—பகலைத் தருகின்ற சூரிய னுடைய கிரணங்கள், நிலத்தில் உள்ள நீரைப் பருகிப் பெற்ற மேகங்கள் என்பதே அவ்வரியின் பொருள்.

மேகங்கள் தனிப்பொருள்கள், இந்திரன் ஆணைக்கு அடங்கியவை, உயிர் உள்ளவை என்று மக்கள் நம்பியிருந்த அக்காலத்தில் இவ்வாசிரியர் இவ்வுண்மையைக் கூறியிருப்பது வியப்புக் குரியதல்லவா?

# 7. கார் நாற்பது

கார் காலத்தைப்பற்றிக் கூறுவது, நாற்பது வெண்பாக் களைக் கொண்டது, கார் நாற்பதாகும்.

கார் கருமை நிறம். மழை பெய்யும் மேகம் கருமை நிறம் உள்ளது. கருமை நிறம் உள்ள மேகம் மழை பெய்யும் காலம் கார் காலம். கார் காலம் முல்லை நிலத்திற்கு உரியது. ஆகவே இது முல்லைத் திணையைப்பற்றி உரைப்பதாகும்.

ஒரு தலைவன் ஏதேனும் ஒரு காரணத்தால் மனைவியை விட்டுப் பிரிந்து செல்லுகின்றான்; செல்லும்போது ''நான் கார் காலம் வருவதற்குள் வந்துவிடுவேன்'' என்று உறுதி கூறிச் செல்கின்றான் கார் காலமும் வந்துவிட்டது. கணவன் வரவில்லை. அப்பொழுது மனைவி, அவன் வருவான் என்று நம்பித் தன் துன்பத்தைப் பொறுத்துக் கொண்டிருக்கின்றாள். இதுவே முல்லைத் திணை நிகழ்ச்சியாகும்.

காட்டின் காட்சி, மழை நாளின் இயற்கை, காதலியின் அன்பு, கணவனுடைய காதல், இவைகளை யெல்லாம் முல்லைத் திணையிலே காணலாம். இந்த நூலின் ஆசிரியர் மதுரைக் கண்ணங்கூத்தனார் என்பவர். இவர் பெயர் கூத்தனார்; இவர் தந்தையார் பெயர் கண்ணன். தந்தையார் பெயரையும் தன் பெயரோடு சேர்த்து வைத்துக் கொண்டார். இப்படிப் பெயர் வைத்துக்கொள்வது பண்டை மரபு. இவர் மதுரையில் வாழ்ந்தவராகவோ அங்கே பிறந்தவராகவோ

இருக்கவேண்டும். ஆதலால்தான் மதுரைக்கண்ணங்கூத்தனார் என்று அழைக்கப்பட்டார். இவர் இந் நூலைத் தவிர வேறு எந் நூலையும் இயற்றியதாகத் தெரியவில்லை.

## செய்யுட் சிறப்பு

இந் நூலின் செய்யுட்கள் படிப்பதற்கு இனிமையானவை. இயற்கைக் காட்சிகளை நம் கண் முன்னே நிறுத்திக் காட்டுவன. இந் நூலாசிரியர் எடுத்துக் காட்டும் உவமானங்கள் மிகவும் பொருத்தமாக இருக்கும். இயற்கையோடு இணைந்து காணப்படும். இந்நூல் பாடல்களின் சிறப்பைச் சில உதாரணங்கள் மூலம் காண்போம்.

கார் காலம் வந்துவிட்டது; பிரிந்து சென்ற காதலன் இன்னும் வரவில்லை. காதலி பசலை நோயால் வருந்துகின்றாள். இந்த நிலையைக் கண்டாள் தோழி. ''காதலன் வந்துவிடுவான்; கார் காலத்தைக் கண்டால் அவன் சென்ற இடத்திலே தாமதிக்கமாட்டான். நீ வருந்த வேண்டாம்'' என்று ஆறுதல் கூறினாள். இந்த முறையில் பல பாடல்கள் அமைந்திருக்கின்றன. அவற்றுள் ஒரு பாடல் கீழ்வருவது:

''ஆடும் மகளிரின் மஞ்சை அணிகொளக்
காரும் கடுக்கை கவின்பெறப் பூத்தன;
பாடுவண்டு ஊதும் பருவம் பணைத்தோளி!
வாடும் பசலை மருந்து. (பா. 4)

நடனமாடும் பெண்களைப்போல மயில்கள் அழகாக ஆடுகின்றன; காடெல்லாம் கொன்றை மலர்கள் கவினுடன் பூத்திருக்கின்றன; பாடுகின்ற வண்டுகள் எல்லாம் மலர்களிலே உட்கார்ந்து ஊதுகின்றன; இதுதான் காதலர் வருவதாகச் சொல்லிச் சென்ற பருவம்; மூங்கில் போன்ற அழகிய தோளையுடையவளே! இப் பருவந்தான் நீ வருந்துகின்ற பசலை நோய்க்கு மருந்துமாகும்.

இந்தப் பாடலில் கூறப்பட்டிருக்கும் காட்சி, இயற்கைக் காட்சி. காட்டிலே இக் காட்சியைக் கார் காலத்தில் இன்றும் காணலாம்.

மற்றொரு அருமையான செய்யுள். இச் செய்யுளும், தலைவிக்குத் தோழி கூறும் ஆறுதல் மொழியாக அமைந் திருப்பது.

> கல்பயில் கானம் கடந்தார் வர,ஆங்கே
> நல்இசை'ஏறொடு வானம் நடுநிற்பச்,
> செல்வர் மனம்போலக் கவின்ஈன்ற, நல்கூர்ந்தார்
> மேனிபோல் புல்என்ற காடு. (பா. 8)

மலை நெருங்கிய காட்டைக் கடந்து சென்ற தலைவர் திரும்பி வருவதனால், அவர் வரும் வழியிலே மிகுந்த இடியோடு கூடிய மேகம் வானத்தின் உச்சியிலே நின்று மழையைப் பொழிந்தது. அதனால், வறுமையுள்ளவர்களின் உடம்பைப்போல வாடி வதங்கியிருந்த காடுகள் செல்வம் உள்ளவர்களின் உள்ளம்போல் அழகைத் தந்தன.

மழையில்லாத காலத்தில் காட்டில் உள்ள மரம் செடி கொடிகள் வாடிச் சோர்ந்து கிடந்தன; வெயில் அக் காட்டை வாட்டி வதக்கிக்கொண்டிருந்தது. ஆதலால் அந்தக் காடு பார்ப்பதற்கு அழகில்லாமல் பொலிவிழந்து கிடந்தது. மழை பெய்தபின் காடு செழித்தது. மரம், செடி, கொடிகள் தழைத்துக் காய்த்துக் குலுங்கி யிருந்தன. இது கண்ணுக் கினிய காட்சியாக இருந்தது. கோடையால் வாடியிருந்த காடு வறுமையால் வாடுகின்றவன் உடம்பைப்போல வற்றி யிருந்தது; மழையால் செழிப்புற்ற காடு செல்வமுள்ளவன் நெஞ்சம்போல் செழித்திருந்தது என்று இக் காட்சியை உவமையுடன் விளக்கியிருப்பது மிகவும் பொருத்தமானது.

## செல்வச் சிறப்பு

செல்வம் உள்ளவர்களே வாழ்க்கையில் இன்பம் அடைய முடியும்; புகழ் உள்ளவர்களாக வாழ முடியும்; செல்வம் இருந்தால்தான் வறியோர்க்கு வழங்கி உதவி செய்யலாம். ஆதலால் இல்லறத்தில் வாழ்வோர் பொருளீட்டுவதை முதன்மையாகக் கொள்ள வேண்டும். இது இவ்வாசிரியர் கருத்து.

புணர்தரு செல்வம் தருபாக்குச் சென்றார் (பா. 11)

இம்மை மறுமை இன்பங்கள் பொருந்துவதற்குரிய செல்வத்தைத் தேடிக்கொண்டுவரும் பொருட்டுச் சென்றார்.

கெடா்அப் புகழ்வேட்கைச் செல்வர் மனம்போல்
படாஅ மகிழ் வண்டு பாண்முரலும் (பா. 32)

''அழியாத புகழை விரும்புகின்ற செல்வர்களின் சிந்தையைப் போல, கெடாத மகிழ்ச்சியை உடைய வண்டு இசை பாடிக் கொண்டிருக்கும்.''

இவைகள் செல்வத்தால் பெறும் இன்பத்திற்கு எடுத்துக் காட்டுக்கள்.

நச்சியார்க்கு ஈதலும் நண்ணார்த் தெறுதலும்
த்ன்செய்வான் சென்றார். (பா. 7)

''தம்மை நாடி வந்தவர்க்குக் கொடுப்பதும், பகைவரை அழிப்பதும் தமக்குப் புகழ்தரும் என்று நினைத்துப் பொருள் தேடச் சென்றார்.''

மண்இயல் ஞாலத்து மன்னும் புகழ்வேண்டிப்
பெண்இயல் நல்லாய், பிரிந்தார். (பா. 8)

''பெண் தன்மை நிறைந்த சிறந்தவளே! அவர் இவ்வுலகிலே நிலையான புகழைப்பெற விரும்பியே பொருள் தேடப் பிரிந்தார்.''

இவைகள் செல்வமே புகழுக்குக் காரணம் என்பதை எடுத்துக் காட்டின.

**பழக்க வழக்கங்கள்**

இந்நூலாசிரியர் காலத்திலே தமிழ்நாட்டிலே வேள்விகள் நடைபெற்று வந்தன. ''புகழ் வேள்வித் தீப்போல எச்சாரும் மின்னும் மழை''. புகழுக்குரிய யாகாக்கனி போல, மேகம் எப்பக்கமும் ஒளிவீசும்படி மின்னுகின்றது.

திருமால், பலதேவன் ஆகிய தெய்வங்களைப்பற்றியும் இந் நூலாசிரியர் குறிப்பிட்டிருக்கின்றார். பொரு கடல் வண்ணன் (பா. 1) என்பது திருமால். ''நாஞ்சில் வலவன்'' (பா. 19) என்பது பலதேவன்.

கார்த்திகை நாளிலே வரிசையாக விளக்கு வைத்து விழாக் கொண்டாடும் வழக்கம் பண்டைத் தமிழகத்தில் இருந்தது. இதனை

> நலமிகு கார்த்திகை நாட்டவர் இட்ட
> தலைநாள் விளக்கின் தகையுடைய ஆகிப்
> புலமெல்லாம் பூத்தன தோன்றி. (பா. 26)

''நன்மை மிகுந்த கார்த்திகைத் திருநாளில் நாட்டினர் கொளுத்தி வைத்த முதல் நாள் விளக்குகளைப் போல, தோன்றிப் பூக்கள், எல்லா இடங்களிலும் அழகுடன் பூத்திருந்தன.''

இத்தகைய சிறந்த செய்திகளைக் கார்நாற்பதிலே காணலாம்.

# 8. களவழி நாற்பது

களவழி நாற்பது என்றால் களத்தைப் பற்றிப் பாடிய நாற்பது என்று பொருள். இதில் நாற்பது வெண்பாக்கள் தாம் இருக்க வேண்டும். ஆனால் இந்நூலில் 41 வெண் பாக்கள் இருக்கின்றன. எப்படியோ ஒரு வெண்பா வந்து சேர்ந்து விட்டது. வெண்பாவிலே நாலு அடிகளுக்குமேல் வருமாயின் அதைப் பஃறொடை வெண்பா என்பர். இந்நூலில் பஃறொடை வெண்பாக்களும் இருக்கின்றன. பஃறொடை—பல் தொடை; பல அடிகள் தொடர்ந் திருப்பவை.

களவழிப் பாடல்களிலே இரண்டு வகையுண்டு. உழவர்கள் நெற்கதிரை அறுத்துக் களத்திலே கொண்டு வந்து சேர்த்து, அடித்து, நெல்லைக் குவிக்கும் ஏர்க்களத் தைப் பாடுவது ஒன்று. நால்வகைப் படைகளையும் கொண்டு போர் செய்யும் போர்க்களத்தைப் பாடுவது மற்றொன்று. ஏர்க்களம், போர்க்களம் இந்த இரண்டைப் பற்றியும் பாடும் பாடல்களுக்கும் களவழிப் பாடல்கள் என்று பெயர்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகிய இந்தக் களவழி நாற்பது போர்க்களத்தைக் குறித்துப் பாடப் பட்டது.

சோழன் செங்கண்ணான் என்பவன், சேரமான் கணைக் கால் இரும்பொறை என்பவனுடன் போர் புரிந்தான். இந்தப்

போர் கழுமலம் என்னும் ஊரிலே நடந்தது. இப்போரில் சேரன் தோற்றான்; சோழன் வென்றான்; தோற்ற சேரன் சோழனால் சிறைப்படுத்தப் பட்டான். சேரனுடைய நண்பர் பொய்கையார் என்னும் புலவர். அவர் சோழனுடைய வெற்றியைப் புகழ்ந்து பாடிச் சேரனைச் சிறையிலிருந்து விடுதலை செய்தார். இதுவே இந்நூல் தோன்றுவதற்குக் காரணமாகக் கூறப்படும் வரலாறு.

புறநானூற்றில் உள்ள 74-வது பாட்டு சேரமான் கணைக்கால் இரும்பொறை பாடியதாகக் குறிப்பிடப்பட் பட்டுள்ளது. அச்செய்யுளின் அடியிலே ஒரு குறிப்புக் காணப் படுகின்றது. ''சேரமான் கணைக்கால் இரும்பொறை, சோழன் செங்கணானோடு போர்ப்புறத்துப் பொருது பற்றுக் கோட்பட்டுக், குடவாயிற் கோட்டத்துச் சிறையிற் கிடந்து, தண்ணீர் தாவென்று பெறாது, பெயர்த்துப் பெற்றுக் கைக் கொண்டிருந்து, உண்ணான் சொல்லித் துஞ்சிய பாட்டு'' என்பதே அக் குறிப்பு.

செங்கண்ணானுடன் போர் செய்து தோற்ற சேரன், குடவாயிற் கோட்டத்திலே சிறைப்பட்டிருந்தான். தண்ணீர் கேட்டான். காவலர்கள் அவமதித்துப் பேசினர். பிறகு தண்ணீர் தந்தனர்; அதை உண்ண விரும்பாமல் இப்பாட லைப் பாடி உயிர் துறந்தான் என்பதே இக் குறிப்பின் பொருளாகும்.

களவழியின் வரலாறு சேரமான் சிறையிலிருந்து விடப் பட்டான் என்று கூறுகின்றது. புறநானூற்று அடிக்குறிப்பு சேரன் சிறையிலேயே மாண்டான் என்று கூறுகின்றது. இரண்டும் ஒன்றுக்கொன்று முரண். ஆதலால் புறநானூற் றுப் பாடல் பாடிய சேரன் கணைக்கால் இரும்பொறை வேறு; களவழியின் மூலம் விடுதலை பெற்ற சேரன் வேறு என்று கருதுவதற்கே இடந் தருகின்றது. இவ்வாறே சில அறிஞர்கள் கருதுகின்றனர்.

பொய்கையார் என்னும் இப்புலவர், பொய்கை என்னும் ஊரிலோ, அல்லது பொய்கை என்னும் நாட்டிலோ பிறந்தவராதல் வேண்டும். ஆதலால் இப் பெயர் பெற்றார். ஆனால் இவர் தொண்டி என்ற ஊரினர் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். தொண்டி யென்பது சேரநாட்டுத் துறைமுகம். மேற்குக் கடற்கரையில் இருந்தது.

பொய்கை ஆழ்வார் என்பவர் முதலாழ்வார்களில் ஒருவர். இந்த ஆழ்வாரும், இப் பொய்கையாரும் ஒருவர் என்று சிலர் எண்ணுகின்றனர். பொய்கையாழ்வார் வேறு; இந்தப் புலவர் வேறு. பொய்கையார் பெயரால் உள்ள பாடல்கள், புறநானூற்றில் இரண்டும், நற்றிணையில் ஒன்றும் காணப்படுகின்றன. அவர் வேறு, இவர்வேறு என்று எண்ணத்தான் இடம் உண்டு.

**பாடற் பெருமை**

இந்நூலிலே யானைப் போரைப் பற்றிய பாடல்களே மிகுதியாகக் காணப்படுகின்றன. சேரமானிடம் யானைப் படைகளே அதிகம். சேரநாட்டில்தான் யானைகள் மிகுதி. ஆதலால், சேரனுக்கும் சோழனுக்கும் நடந்த போரிலே யானைப் படைகளின் சிதைவைப் பற்றிக் கூறுவது வியப் பன்று.

போர்க்களத்தில் நடைபெறும் கொடுமை, போரால் மக்கள் மாண்டு மடியும் பயங்கரக் காட்சி, பார்ப்போர் உள் ளத்திலே அச்சத்தை ஊட்டும் போர்க்களக் காட்சி இவைகளை இக் களவழிப் பாடல்களிலே காணலாம். இந் நூலைப் படிப்போர் போரை வெறுப்பார்கள்; அமைதியையே விரும்புவார்கள்.

போரினால், மக்கள் வாழ்க்கைக்குப் பயன்படும் பல பண்டங்கள் பாழாகும். இது ஒருபுறம் இருக்கட்டும்.

போரிலே பல வீரர்கள் மடிவதன் காரணமாகப் பல மக்கள் ஆதரவற்ற அநாதைகளாகின்றனர். போர் நடந்தால்—போர்க்களத்திலே வீரர்கள் மாண்டால்—பிள்ளைகளை யிழந்து தவிக்கும் பெற்றோர்கள் பலர்; காதலர்களை இழந்து கவலைப்படும் மனைவிகள் பலர்; தந்தைகளை யிழந்து தவிக்கும் பிள்ளைகள் பலர்; ஆதலால்தான் மக்கள் சமுதாயத்திலே ஒற்றுமையையும், நல்வாழ்வையும் விரும்புகின்றவர்கள் போரை வெறுக்கின்றனர்; சமாதானத்தை விரும்புகின்றனர். இக்கருத்தை இந்நூலின் பாடல்களிலே காணலாம்.

சோழன் புரிந்த போர்க்களத்திலே, தங்கள் உறவினர்களாகிய வீரர்களை யிழந்த மக்கள் நாற்றிசையும் கேட்கும்படி அலறி அழுகின்றனர்; ஓடுகின்றனர். இப்படி அழுகிறவர்களில் பெண்களே பெரும்பாலோராகக் காணப்படுகின்றனர். இக்காட்சி, மரங்கள் அடர்ந்த சோலையிலே, பெருங்காற்றுப் புகுந்து வீசுவதைக் கண்டு, அஞ்சிய மயிலினங்கள், வெவ்வேறு திசைகளிலே சிதறி ஓடுவதைப்போல இருந்தது; என்று கூறுகின்றது ஒரு செய்யுள்.

கடிகாவில் காற்று உற்று எறிய, வெடிபட்டு
வீற்றுவீற்று ஓடும் மயில் இனம்போல்—நாற்றிசையும்
கேளிர் இழந்தார் அலறுபவே, செங்கண்
சினமால் பொருத களத்து. (பா. 23)

''செங்கட் சோழன் போர் செய்த போர்க்களத்திலே, மரங்கள் அடர்ந்த சோலையில் காற்றுப் புகுந்து கடுமையாக வீச, அதைக் கண்டு பயந்து பிரிந்து பிரிந்து ஓடுகின்ற மயிற் கூட்டத்தைப்போல, தம் உறவினரை இழந்தவர்கள் நான்கு திசைகளிலும் ஓடி ஓடி அலறி அழுகின்றனர்.''

இச் செய்யுளைப் படிப்பவர்கள், போர் எவ்வளவு கொடுமையானது, மக்களுக்கு எவ்வளவு மனவேதனையைத் தரக்கூடியது என்பதை உணராமல் இருக்க முடியாது.

மற்றொரு பாட்டிலே தச்சன் வேலை செய்யும் இடத்தை யும், போர்க்களத்தையும் ஒப்பிட்டுக் காட்டியுள்ளார். இக் காட்சியைக் காணும்போது யாருடைய உள்ளமும் உருகாமல் இருக்காது.

தச்சன் வேலை செய்யும் இடத்தைப் பார்த்தால் அலங்கோலமாகத்தான் காணப்படும். வேலை செய்யும் ஆயுதங்கள் பல இடங்களிலே கிடக்கும்; வெட்டப் பட்ட மரங்கள், அறுபட்ட மரங்கள், துண்டு போடப் பட்ட மரங்கள், துளை போடப்பட்ட மரங்கள், மரங்களிலே செதுக்கிய—இழைத்த சிறியவும் பெரியவுமான சிறாய்த் தூள்கள்—இவைகள் எங்கு பார்த்தாலும் சிதறிக் கிடக்கும்.

போர்க்களத்திலும் ஆயுதங்கள் பல சிதறிக் கிடக்கும்; பல பிணங்கள் குவிந்து கிடக்கும்; தனித்தனியாகவும் கிடக் கும்; வீரர்களின் கால் கைகள் துண்டிக்கப்பட்டுக் கிடக்கும்; உடல்கள் சிதைந்து உருமாறி எங்கும் கிடக்கும். யானை, தேர், குதிரை முதலியவைகளும் சிதைந்து கிடக்கும். இத்தகைய போர்க்களத்திற்குத் தச்சுப்பட்டரையை ஒப்பிட்டது மிகவும் பொருத்தமானது.

> கொல்யானை பாயக் குடைமுருக்கி எவ்வாயும்
> புக்கவாய் எல்லாம் பிணம் பிறங்கத், தச்சன்
> வினைபடு பள்ளியில் தோன்றுமே செங்கண்
> சினமால் பொருத களத்து.

''கோபத்தையுடைய செங்கட்சோழன் போர்செய்தகளத்திலே, எவ்விடத்திலும், குடைகளை யழித்துக் கொல்லுகின்ற யானைகள் பாய்ந்து பொருகின்றன. அவைகள் புகுந்த இட மெல்லாம் பிணங்களே குவிந்து கிடக்கின்றன. அவைகள் தச்சன் வேலை செய்கின்ற இடத்தைப் போலத் தோற்றம் அளிக்கின்றன,''

இச்செய்யுள் போர்க்களத்தின் பயங்கரக் காட்சியை நமக்குக் காட்டுகின்றது. இதுபோல் போர்க்களத்தின் காட்சியைக் காட்டும் பாடல்கள் பல.

**பழக்க வழக்கங்கள்**

தமிழ் நாட்டிலே கார்த்திகை விழாக் கொண்டாடிய செய்தி இந்நூலிலும் காணப்படுகின்றது.

கார்த்திகைச் சாற்றில் கழிவிளக்கைப் போன்ற (பா. 17)

கார்த்திகைத் திருவிழாவின்போது கொளுத்தி வைக்கப்பட்ட மிகுதியான விளக்குகளைப் போலக் காணப்பட்டன.

பாம்பு பிடிப்பதனால் சந்திர கிரகணம், சூரிய கிரகணம் ஏற்படுகிறதென்ற நம்பிக்கை பண்டைத் தமிழர்களிடம் இருந்தது.

கோடுகொள் ஒண்மதியை நக்கும்பாம்பு ஒக்குமே (பா. 22)

''கலை நிரம்பிய ஒளிபொருந்திய சந்திரனை நக்கி விழுங்கும் பாம்பை ஒத்திருந்தது.''

ஐந்து தலைப்பாம்பு உண்டு என்ற நம்பிக்கையும் அக் காலத் தமிழர்களிடம் இருந்தது. இதனை ''ஐவாய் வய நாயகம்'' என்ற தொடரால் அறியலாம். (பா. 26)

நிலத்தைப் பூமிதேவி என்று, பெண்ணாகக் கருதும் வழக்கும் அக்காலத்திலிருந்தது.

மையில் மாமேனி நிலம் என்னும் நல்லவள்

''குற்றமற்ற அழகானமேனியை யுடைய நிலமென்னும் நல்ல மாது.''

மந்திரத்திலும் தமிழர்களுக்கு நம்பிக்கையிருந்தது. மாநிலம் கூறும் மறைகேட்ப போன்றவே—''பூமிதேவி கூறு கின்ற மந்திரத்தைக் கேட்பதுபோல இருக்கிறது.'' (பா. 41)

மேலே காட்டியவைகள் தமிழர்களின் பழைய நம்பிக்கை களையும் பழக்க வழக்கங்களையும் காட்டுகின்றன. இவ் வாசிரியர் கூறும் உவமானங்கள் மிகவும் அழகாகவும், பொருத்தமாகவும் அமைந்திருக்கின்றன. இந் நூலைப் படிப்போர் இவற்றின் அருமைகளை அறியலாம்.

# 9. முதுமொழிக் காஞ்சி

முதுமொழிக் காஞ்சி; அறிவு நிறைந்த மொழியாகிய காஞ்சி. முதுமொழி—பழமொழி என்றும் கூறுவர்.

காஞ்சி யென்பது நிலையாமையைப் பற்றிக் கூறுவது; முதுமொழிக் காஞ்சி என்பது காஞ்சியின் ஒரு பகுதி. அறம் பொருள் இன்பங்களை அறிவுறுத்துதல் முதுமொழிக் காஞ்சி யாகும்.

இந்நூலின் செய்யுட்கள் வெண்செந்துறை என்னும் ஒருவகைச் செய்யுள். இரண்டடிகள் கொண்டது; ஒவ்வொரு அடியிலும் நான்கு சீர்கள் அமைந்திருப்பது. இதுவே வெண் செந்துறை.

இந்நூலின் ஒவ்வொரு செய்யுளின் முதல் அடி 'ஆர்கலி உலகத்து மக்கட்கெல்லாம்' என்பது. 1. சிறந்த பத்து 2. அறிவுப்பத்து. 3. பழியாப்பத்து. 4. துவ்வாப்பத்து. 5. அல்லபத்து. 6. இல்லைப்பத்து. 7. பொய்ப்பத்து. 8. எளியபத்து. 9. நல்கூர்ந்தபத்து. 10. தண்டாப்பத்து என்னும் பத்துப் பிரிவுகளையுடையது. ஒவ்வொரு பகுதி யிலும் பத்துப் பத்துப் பாடல்கள். நீதி நூல்களிலே மிகவும் சிறியதொரு நூல். மற்றைய நீதி நூல்களை நோக்க இது அவ்வளவு சிறப்புடையதன்று. பண்டைக் காலத்திலே தமிழர்கள் சிறந்த ஒழுக்கமுள்ளவர்களா யிருந்தனர், வாழ வழி யறிந்திருந்தனர், பல உண்மைகளைத் தெரிந்து

கொண்டிருந்தனர் என்பதை விளக்க இந்நூலும் துணை செய்கின்றது.

இந்நூலை இயற்றிய ஆசிரியர் பெயர் கூடலூர் கிழார் என்பது. இவரைப் புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் என்று அழைப்பர். எட்டுத்தொகையுள் ஒன்றாகிய ஐங்குறு நூற்றைத் தொகுத்தவர் இவரேதான். மலைநாட்டிலே யுள்ள கூடலூரிலே வாழ்ந்தவர். ஆதலால் இப்பெயர் பெற்றார். குறுந்தொகையிலே மூன்று பாட்டுக்களும் புறநானூற்றிலே ஒரு பாட்டும் இவர் பெயரால் காணப்படு கின்றன. இந்தக் கூடலூர் கிழார் வேறு; முதுமொழிக் காஞ்சியைச் செய்த கூடலூர் கிழார் வேறு என்று கூறுவோ ரும் உண்டு.

**நீதிகளின் சிறப்பு**

இந் நூலிலே கூறப்பட்டிருக்கும் அறங்களிலே புதுமை யில்லை. தமிழில் உள்ள நீதி நூல்களில் காணப்படும் அறங்கள்தாம் இந்நூலில் சுருக்கமாகக் கூறப்பட்டிருக்கின் றன. ஆனால் அவ்வறங்கள் மக்கள் பின்பற்ற வேண்டியவை என்பதை வலியுறுத்திக் கூறுகின்றார் இவ்வாசிரியர். வலியுறுத்திச் சொல்லுவது ஒன்றுதான் இதில் உள்ள சிறப்பு.

> ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்
> ஓதலில் சிறந்தன்று ஒழுக்கம் உடைமை

ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த இவ்வுலகில் வாழும் எல்லா மக்களுக்கும் கல்வியைக் காட்டிலும் ஒழுக்கமே சிறந்ததாகும் (பா 1) ஒழுக்கத்தின் உயர்வையும் அவசியத்தையும் வலி யுறுத்தியது இச்செய்யுள்.

> ஆர்கலி உலகத்து மக்கட்கெல்லாம்
> குலன் உடைமையின் கற்புச் சிறந்தன்று

''உயர்ந்த குடிப் பிறப்பைக் காட்டிலும் கல்வியே சிறந்த தாகும்.'' (பா. 7) கல்வி கற்றவர்கள் எக்குடியினராயினும்

உயர்ந்தவர்கள்; கல்லாதவர்கள் எக்குடியினராயினும் இழிந்தவர்கள். ஆதலால் எல்லா மக்களும் கல்வி கற்பாராயின் உயர்வு தாழ்வு வேற்றுமைகள் ஒழிந்து போகும். கல்வியினால் உலக மக்கள் ஒன்றுபட்டு வாழ முடியும் என்பதே முன்னோர் கொள்கை.

தேசங்கள் தோறும் ஆசாரங்கள் வேறுபட்டிருக்கும். ஒரு நாட்டினரின் ஆசாரத்தை மற்றொரு நாட்டினர் பழிப்பது தவறு. பழிப்பதனால் ஒரு நாட்டினர்க்கும் மற்றொரு நாட்டினர்க்கும் உள்ள உறவு கெட்டுப் போகும்.

ஆர்கலி உலகத்து மக்கட்கெல்லாம்
அறியாத் தேசத்து ஆசாரம் பழியார் (3-ஆம் பத்து. பா. 8)

உலகத்து மக்களுக்கு வேண்டிய சிறந்த குணம், தாம் அறியாத நாட்டின் ஆசாரத்தைப் பழிக்காமல் இருப்பதாகும்.

மறு பிறப்பிலே தமிழர்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர். வயது முதிர்வதன் பலன், மறுபிறப்பு உண்டென்பதை அறிவது. மறுமையில் இன்பம் பெறும் வகையிலே அறத்தையும், ஒழுக்கத்தையும் பின்பற்றி நடப்பதே சிறந்த அறமாகும்.

ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
மறுபிறப்பு அறியாதது மூப்பு அன்று

இவ்வுலகிலே பிறந்த மக்கள் அனைவருக்கும் மறுபிறப்பு உண்டு என்பதை அறியாமல் முதிர்ந்த பருவம் அடைவது மூப்பாகாது. (5-ஆம் பத்து. பா. 10)

எவ்வளவு செல்வம் இருந்தாலும் இன்னும் செல்வம் வேண்டும் என்று ஆசைப்படுவோர் செல்வர்கள் அல்லர்; வறியவர்கள் ஆவார்கள்.

ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
நசையில் பெரியதோர் நல்குரவு இல்லை

ஆசையைக் காட்டிலும் பெரியதொரு வறுமை இல்லை'' (6-ஆம் பத்து பா. 7.) என்பதனால் இதைக் காணலாம்!

பொருளிலே அளவுக்கு மீறிய ஆசையுள்ளவன் நீதி முறைகளையும் பேணமாட்டான். பொருள் கருதி எந்த அக்கிரமத்தையும் துணிந்து செய்வான். அவன் நீதி முறைப்படி எதையாவது செய்கிறேன் என்று சொல்லுவானாயின் அச்சொல் பொய்யாகும்.

பொருள் நசை வேட்கையோன்
முறை செயல் பொய் (7-ஆம் பத்து பா. 9)

பொருள் விருப்பத்திலே ஊன்றிய உள்ளமுடையவன் நீதி முறையின்படி ஒன்றைச் செய்தல் இல்லை.

இன்பதுன்பங்களைப் பற்றி இவ்வாசிரியர் கூறுவது போற்றத்தக்கது.

துன்பம் வெய்யோர்க்கு இன்பம் எளிது.

துன்பத்தைப் பொருட்படுத்தாமல் முயற்சியை விரும்புவோர்க்கு இன்பம் எளிதாகும். (8. பா. 5)

இன்பம் வெய்யோர்க்குத் துன்பம் எளிது.

இன்பத்தையே விரும்பி நிற்பவர்களுக்குத் துன்பம் வருவது எளிதாகும். (8-பா. 6) இவை இன்ப துன்பந் தோன்றுவதற்கான காரணங்களைக் கூறின.

இன்பம் வேண்டுவோன் துன்பம் தண்டான்.

இன்பத்தை விரும்புகின்றவன் துன்பத்தைப் பொருட்படுத்தமாட்டான். (10. பா. 7) இவை இன்பம் எய்தும் வழியைக் கூறின.

முறையில் அரசன்நாடு நல்கூர்ந்தன்று

மக்கள் எல்லார்க்கும் சம நீதி வழுங்காத நாடு வறுமையால் வாடும். (9. பா. 1)

முறையில் அரசர் நாட்டிருந்து பழியார்

''செங்கோல் முறையில்லாத நாட்டிலே இருந்துகொண்டு அவர்கொடுங்கோன்மையைப்பழிக்கமாட்டார்கள்'' (3-பா. 9) இவை அரசியலைப் பற்றிக் கூறியவை. கொடுங்கோலன் நாட்டில் குடியிருப்பதை விட அந்நாட்டை விட்டு வெளியேறுவதே நலம் என்பது பண்டைத் தமிழர் கொள்கை. இது அரசன் சர்வாதிகாரியாகப் பலம் பெற்றிருந்த காலத்தில் எழுந்த நீதி.

மது விலக்கைப் பற்றியும் இந்நூலில் கூறப்படுகின்றது. இத்தகைய அறிவுரைகளைக் கொண்டதே இந்நூல். இதில் உள்ள பல சொற்கள் வழக்கில் இல்லாத பழைய சொற்கள்.

# 10. திரிகடுகம்

திரிகடுகம் நூறு வெண்பாக்களைக் கொண்டது. புறப் பொருள்பற்றிக் கூறும் நூல். இதை அறநூல், நீதி நூல் என்றே சொல்லி விடலாம். இந்த வெண்பாக்கள் அவ்வளவு கடினமானவை யல்ல. எளிதில் பொருள் தெரிந்து கொள்ளக்கூடியன. தமிழர்களின் ஒழுக்கம்—பழக்க வழக்கம்—நேர்மையாக நடக்கவேண்டும் என்பதிலே அவர்கள் காட்டிய கவலை—இவைகளையெல்லாம் இந் நூலிலே காணலாம்.

சுக்கு, மிளகு, திப்பிலிகளைத் திரிகடுகம் என்று நாட்டு வைத்தியர்கள் கூறுவார்கள். இந்த மூன்று மருந்துகளைக் கொண்டே உடல் நோயைத் தடுத்துக் கொள்ள முடியும்; இது நாட்டு வைத்தியர்களின் நம்பிக்கை. இன்றும் திரிகடுகச் சூரணம் என்னும் மருந்து பல நோய்களைத் தீர்க்கப் பயன்பட்டு வருகின்றது. இந்த மருந்தின் பெயரையே இந்நூலுக்கு வைத்தனர். இதற்குக் காரணம் உண்டு. இந்நூலில் உள்ள ஒவ்வொரு வெண்பாவிலும் மூன்று மூன்று அறங்கள் சொல்லப்படுகின்றன. இம்மூன்று நீதிகளையும் பின்பற்றி நடப்போர் உள்ளத்திலே ஒரு நோயும் இன்றி உவகையுடன் வாழ முடியும்; வாழ்விலே குற்றம் வளராமல் மாசற்ற வாழ்வு நடத்த முடியும். இந்த உண்மையைக் கருதித்தான் இந் நூலுக்குத் திரிகடுகம் என்ற பெயர் வைத்தனர்.

இந்நூலில் கூறப்படும் அறங்கள் எல்லாம் இக்காலத் திற்கு ஏற்றவை என்று சொல்ல முடியாது. கொள்ளத்

தக்கவை பல; தள்ளத்தக்கவையும் சில உண்டு. இவ்வுண்மையை உணர்ந்து படிப்பதே அறிவுள்ளவர் கடமை.

இந் நூலாசிரியர் பெயர் நல்லாதனார். இவருடைய பெயரால், வேறு நூல்களோ செய்யுட்களோ காணப்படவில்லை.

நூறு வெண்பாக்களோடு, கடவுள் வாழ்த்து வெண்பா ஒன்றும் காணப்படுகின்றது. இது திருமால் வணக்கம். இக்கடவுள் வாழ்த்து நூலாசிரியரால் இயற்றப்பட்டதா அல்லது பிற்காலத்தாரால் பாடிச் சேர்க்கப்பட்டதா என்பது ஆராயத்தக்கது. இந்நூலில் உள்ள பாடல்களில் பல சிறந்த கருத்துள்ளவை.

**நன்மை தராதவை**

இந்நூலில் கூறப்படும் அறங்கள் பல; அவை ஒவ்வொரு மக்களும் பின்பற்றக்கூடிய வகையிலே அமைந்திருக்கின்றன; மக்கள் முன்னேற்றத்திற்கு வழி காட்டுவனவாக இருக்கின்றன; அநுபவத்திலே கண்டறிந்த உண்மைகளாகவும் காணப்படுகின்றன.

> கணக்காயர் இல்லாத ஊரும், பிணக்கு அறுக்கும்
> மூத்தோரை இல்லா அவைக்களனும், பாத்து உண்ணும்
> தன்மை யிலாளர் அயல் இருப்பும் - இம்மூன்றும்
> நன்மை பயத்தல் இல (பா. 10)

கல்வி கற்பிக்கும் ஆசிரியர் இல்லாத ஊர்; வழக்கைத் தீர்த்து வைக்கின்ற அறிவு முதிர்ந்தவர் இல்லாத சபை; தமக்கு உள்ளதைப் பிறருக்கும் பகுத்துக் கொடுத்து உண்ணும் தன்மை யில்லாதவர்களின் பக்கத்திலே வாழ்வது; இம்மூன்றும் நன்மை தருவதில்லை.

மூன்று அருமையான செய்திகள் இவ் வெண்பாவிலே அடங்கியிருக்கின்றன. ஒரு ஊர் என்றால் அந்த ஊரிலே

கல்வி கற்பிக்கும் ஆசிரியர் இருக்கவேண்டும். ஆசிரியர் இருந்தால்தான் ஊரில் உள்ள பிள்ளைகள் கல்வி கற்க முடியும். இல்லாவிட்டால் மக்கள் தற்குறிகளாகத்தான் இருக்க முடியும். அக்காலத்திலே ஊர்ப் பொதுக் காரியங் களைக் கூட ஆசிரியர்கள்தான் முன்னின்றுநடத்திவைத்தனர்.

ஒரு சபையென்றால் அதில் கல்வி கேள்விகளிலே சிறந்த வர்கள் இருக்கவேண்டும். அப்பொழுதுதான் சபையில் உள்வவர்கள் பயனுள்ள பொருள்களைத் தெரிந்துகொள்ள முடியும். சபையினர்க்குள் கருத்து வேற்றுமை ஏற்படும் போது, சரியான கருத்து இதுவென்பதையும் கண்டறிய முடி யும். அறிஞர் இல்லாத சபையால் யாருக்கும் எப்பயனும் இல்லை. அது வெறும் வம்பர் மகா சபையாகத்தான் இருக்கும்.

நமது பக்கத்திலே குடியிருப்போர் உதவி செய்யும் தன்மை யுள்ளவர்களாயிருக்க வேண்டும். அப்படிப்பட்ட வர்களா யிருந்தால் தான் ஒருவர்க் கொருவர் உதவி செய்து கொண்டு வாழலாம். அவர்களால் நமக்கும் நன்மை யுண்டு, நம்மால் அவர்களுக்கும் நன்மை யுண்டு. பக்கத்தில் இருப்பவர்கள் தந்நலமே குறியாகக் கொண்டவர்களாயிருந் தால் நமக்கு யாதொரு பயனும் இல்லை.

### செல்வத்தைச் சிதைப்பன

ஒருவனுடைய செல்வத்தைச் சிதைக்கும் படைகள் இன்னின்னவை என்று ஒரு வெண்பாவிலே கூறப்படுகின்றது.

தன்னை வியந்து தருக்கலும், தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருககலும்—முன்னிய
பல் பொருள் வெஃகும் சிறுமையும், இம் மூன்றும்
செல்வம் உடைக்கும் படை (பா. 38)

தன்னைத்தானே புகழ்ந்து கொண்டு கர்வ மடைதல் ; எடுத்த தற்கெல்லாம் திடீரென்று வீணாகக் கோபித்துக் கொள்ளுதல்; தன் முன்னே காணப்படும் பல பொருள்களின் மேலும் ஆசை வைக்கும் சிறுமைக் குணம் ; இவைகள் ஒருவனுடைய செல் வத்தைக் கெடுக்கும் ஆயுதங்களாகும்.

ஒருவன் தன் செல்வத்தைச் சிதையாமல் பாதுகாத்துப் பெருக்கிக் கொள்ள வேண்டுமானால் மேலே கூறிய மூன்று குணங்களையும் விட்டுவிட வேண்டும். தற்பெருமை கூடாது, கோபம் கூடாது, கண்ட பொருள்கள் மேலெல்லாம் ஆசைப் படக் கூடாது என்ற உண்மையைக் கூறிய செய்யுள் இது.

**மனைவியின் மாண்பு**

இல்லறத்திலே இன்பம் தவழ வேண்டுமாயின் இல்லாள் கற்புடையவளாயிருக்க வேண்டும். தன் காதலனுக்குக் கூட் டாளியாகவும், தாயாகவும், மனைவியாகவும் இருந்து உதவி செய்வதே கற்புள்ள பெண்ணின் கடமை என்று கூறு கின்றது ஒரு செய்யுள்.

> நல்விருந்து ஓம்பலின் நட்டாளாம் ; வைகலும்
> இல்புறம் செய்தலின் ஈன்றதாய்—தொல்குடியின்
> மக்கள் பெறலின் மனைக்கிழத்தி, இம் மூன்றும்
> கற்புடையாள் பூண்ட கடன். (பா. 64)

நல்ல விருந்தினரைப் பாதுகாப்பதனால் கணவனுக்கு நட்பின ளாம் ; இல்லறத்தை வழுவாது நடத்தலால் பெற்ற தாயா வாள் ; தன் பழமையான குடும்பம் விளங்குதற்குரிய மக் களைப் பெறுவதனால் மனையாள் ; இம் மூன்றும் கற்புள்ள மனைவி கொண்ட கடமையாகும்.

இச் செய்யுள் ஒரு பெண்ணின் கடமை இன்னது என்று எடுத்துக் காட்டுகின்றது. விருந்தினரைப் பேணுதல், இல் லறத்தை நன்றாக நடத்தல், பிள்ளை பெறுதல், இதுவே கற்புள்ள மங்கையின் கடமை என்று கூறப்பட்டது. இது

பண்டைத் தமிழர் இல்லறத்திலே மகிழ்ச்சியும் இன்பமும், தழைப்பதற்குக் கண்டறிந்த வழியாகும்.

**அறமுணர்வோர் பண்பு**

அறநெறியே சிறந்தது, அந்நெறியிலே நடப்பதே நமது கடமை, என்று நினைப்பவர்கள் உயர்ந்தவர்கள். அவர்களிடம் மூன்று பண்புகள் முதன்மையாகக் காணப்படும்.

அவர்கள் நம் செல்வத்தைத் தமக்கு மட்டும் பயன் படுத்திக் கொள்ளமாட்டார்கள். வீணாகச் சேர்த்து வைத்து அழகு பார்த்துக் கொண்டிருக்கவும் மாட்டார்கள். இல்லா மையால் வருந்தும் எளியோர்க்கு வழங்குவார்கள் ; அவர்கள் துன்பத்தை நீக்கி இன்பம் அடைவார்கள். இதற்கே தங்கள் செல்வத்தைச் செலவழிப்பார்கள்.

அவர்கள் இவ்வுலக இயல்பை நன்றாக அறிந்திருப் பார்கள். உலகில் தோன்றும் பொருள்கள் எல்லாம் என்றும் நிலைத்திருப்பன அல்ல, அழிந்துவிடக் கூடியன, என்ற உண்மையை அறிந்திருப்பார்கள். நிலைத்து நில்லாதவை களை நிலைத்து நிற்பன என்று எண்ணும் புல்லறிவு அவர் களிடம் இல்லை. இத்தகைய உண்மை யறிவு காரணமாகத் தாமும் என்றோ ஒருநாள் மாண்டு மடிவது உறுதி என்பதை மறக்க மாட்டார்கள். ஆகையால் இறப்பதற்கு முன் நல் லறங்களைச் செய்யவேண்டும் என்ற உணர்ச்சி அவர்கள் உள்ளத்திலே நிறைந்திருக்கும்.

அவர்கள் எவ்வுயிர்க்கும் தீமை செய்ய மாட்டார்கள். பிற உயிர்களைத் துன்புறுத்தி அதனால் மகிழ்ச்சியடையும் மடமைக் குணம் அவர்களிடம் இருக்காது. பிறருடைய உழைப்பைச் சுரண்ட மாட்டார்கள். செல்வத்தைக் கொள்ளை கொள்ளமாட்டார்கள். மற்ற மக்கள் மனம் வேதனை யடையும்படி எச் செயல்களையும் செய்ய மாட்டார்கள். இத் தகைய பண்பே குற்றமற்ற குணமாகும் ; தூய தன்மை

யாகும். இந்த மாசற்ற குணம் அவர்களிடம் அமைந் திருக்கும்.

வறியோர்க்கு உதவும் செல்வம் ; உலகப் பொருள்கள் நிலையற்றவை என்று அறியும் அறிவு ; எவ்வுயிர்க்கும் கொடுமை செய்யாதிருத்தல் ; இம் மூன்றும் அறநெறியை அறிந்தவர்களின் பண்பாகும். இதனை ஒரு செய்யுள் விளக்கமாகக் கூறுகின்றது. அச்செய்யுள் கீழ்வருவது :

> இல்லார்க்கு ஒன்று ஈயும் உடைமையும், இவ்வுலகில்
> நில்லாமை உள்ளும் நெறிப்பாடும்—எவ்வுயிர்க்கும்
> துன்புறுவ செய்யாத தூய்மையும், இம்மூன்றும்
> நன்று அறியும் மாந்தர்க்கு உள. (பா. 68)

வறியவர்க்கு அவர் விரும்பும் ஒன்றைக் கொடுக்கும் செல் வம் ; இவ்வுலகில் உள்ள பொருள்களின் நிலையாமையைப் பற்றி நினைக்கும் நல்லொழுக்கம் ; எவ்வுயிர்க்கும், அவை கள் துன்புறும்படியான கொடுமையைச் செய்யாத நற்குணம் ; ஆகிய இம்மூன்று தன்மைகளும் அறத்தின் உயர்வை அறிந்த வர்களிடம் உள்ளவை.

**அரசியல்**

அரசன் நீதியுடன் நடந்தால்தான் நாடு செழிக்கும், குடிகள் இன்புறுவர் என்ற கருத்தை இந்நூலாசிரியர் வற் புறுத்திக் கூறுகின்றார்.

''தான் வாங்கிக்கொள்ளும் பொருளுக்கு ஆசைப்பட்டுக் குடிகளைக் கொடுமைப்படுத்தும் அரசன் உள்ள நாட்டிலே மழை பெய்யாது'' (பா. 50).

''கொடுங்கோல் அரசன் பெருமையடையமாட்டான்'' (பா. 66).

''கொடுமைகளை நீக்கிக் குடிகளுக்கு நன்மை செய் கின்றவனே அரசன் ஆவான்'' (பா. 96).

''நம்பிக்கையுள்ள சேனை ; எதிரிகள் பலர் முற்றுகை யிட்டாலும் எளிதில் அழிக்க முடியாத எல்லைப்புறப் பாது காப்பு ; நிறைந்த செல்வச் சேமிப்பு ; இவைகளே அரசர்க் குச் சிறந்த உறுப்புக்களாகும்'' (பா. 100).

இவ்வாறு அரசாட்சியைப் பற்றிக் கூறுகிறது இந்நூல்.

**பார்ப்பார்**

பார்ப்பாரைப்பற்றி இந்நூலிலே பலவிடங்களில் கூறப் பட்டிருக்கின்றன.

நன்கு உணர்வின் நான்மறையாளர் (பா. 2)

அறத்தை நன்றாக உணரும் அறவினையுடையவர்கள்' நான்கு வேதங்களையும் கற்றவர்கள்.

மூன்று கடன் கழித்த பார்ப்பானும் (பா. 34)

தேவர், முனிவர், பிதிரர் ஆகிய மூவருக்கும் செய்யும் மூன்று கடமைகளையும் செய்து முடித்த பார்ப்பான்.

செந்தீ முதல்வர் அறம் நினைந்து வாழ்தல் (பா. 98)

வேள்வியிலே செந்தீயை வளர்க்கும் அந்தணர்கள் தமக்குரிய அறத்தை மறவாமல் பின்பற்றி வாழ்தல், மாதம் மும்மாரி பெய்வதற்கு விதையாகும்.

வேதம் ஓதல், மூன்று கடன்களையும் செய்தல், வேள்வி செய்தல், அறநெறி தவறாமை இவைகள் அந்தணர் கடமை யாகும் என்பதை மேலே காட்டிய பகுதிகள் அறிவித்தன.

பழகினும் பார்ப்பாரைத் தீப்போல் ஒழுகல்

எவ்வளவு நாட்கள்தான் பழகியிருந்தாலும் பார்ப்பாரை நெருப்பைப்போல் நினைத்துப் பழகவேண்டும். நெருப்பு இன்றியமையாதது, அதைப்போல அவர்களும் அவசியமான வர்கள்; ஆதலால், அவர்களிடம் நெருங்காமலும், நீங்கா மலும் பழக வேண்டும்.

இப்பகுதி, பண்டைக் காலத்திலே பார்ப்பார்கள் தமிழர் சமுதாயத்திலே பெற்றிருந்த செல்வாக்கைக் காட்டுவதாகும்.

**பழக்க வழக்கங்கள்**

மனைவியைக் கோல்கொண்டு அடிப்பது அறியாமை யாகும். (பா. 8)

மாட்டு மந்தைக்குள், கையில் கோல் இல்லாமல் செல்லக் கூடாது. (பா. 4)

தேவர், முனிவர், பிதிரர் இவர்களுக்கான கடன்களைச் செய்பவரே அறிவுடைய பார்ப்பார் ஆவார். (பா. 34)

முயற்சியுள்ளவன் சூதாட்டத்தால் பொருள் சேர்க்க விரும்ப மாட்டான்; விளையாட்டுக்காகச் சூதாடினாலும் அதிலே இலாபம் கிடைத்தால் அப்பொருளையும் ஏற்றுக் கொள்ளமாட்டான். (பா. 42)

குடிகாரன் குடும்பம் வாழாது. வாழ்வது போலக் காணப் பட்டாலும் விரைவில் அழிந்து விடும். (பா. 59)

பார்ப்பார் கடமை, வேதங்களைக் கற்றிருத்தல். வேதங் களைக் கற்றறிந்த பார்ப்பனரே சிறந்த செல்வம் உள்ள வர்கள். (பா. 70)

கொடுக்கும் பணத்திற்கு வட்டி வாங்குவோன் பேராசைக் காரன்; ஆசைக் கடலில் அழுந்தி யிருப்பவன் ஆவான். (பா. 81)

நூல்களை எழுதும் புலவர்கள்—எழுத்தாளர்கள்—அற நெறிகளைக் கூறும் நூல்களையே செய்ய வேண்டும்; மக்களை நன்னெறிப் படுத்தும் நூல்களையே எழுத வேண் டும்; இதுவே மக்களுக்கு நன்மை செய்வதாகும்; நூலாசிரியர் களும் நன்மை பெறும் வழியாகும். இதனை அறநெறி, சேர் தற்குச் செய்க பெருநூலை என்று கூறியிருப்பதனால் காண

லாம். செய்க என்பதற்குக் கற்க என்று பொருள் கூறுவர். இதைவிட இயற்றுக என்று பொருள் கூறுதல் சிறந்ததாகும்.

விலைமாதர்களின் சொற்களை நம்பக் கூடாது. அவர்களின் இன்பத்தை விரும்புவதால் துன்பந்தான் உண்டாகும்.

பிறர் மனைவியை விரும்புதல் குற்றமாகும்.

இவை போன்ற கருத்துக்களும் பல பாடல்களிலே காணப்படுகின்றன.

**நம்பிக்கைகள்**

அருந்ததியே சிறந்த கற்புடையவள்; கற்புள்ள மகளிர்க்கு அருந்ததியே உதாரணம்.

நான்கு வேதங்களை அறிந்த வேதியர்கள் சொல்லும் அறங்களைப் பின்பற்றி நடப்பதே நல்லொழுக்கமாகும்.

கூற்றுவன் ஒரு தெய்வம்; அவன் உயிர்களைக் கவர்ந்து செல்வான்.

குடிகளைத் துன்புறுத்தி வரி வாங்கும் அரசன்; பொய் பேசும் மக்கள்; குடும்பத்திலிருந்து கொண்டே விபசாரம் செய்யும் பெண்; இவர்கள் உள்ள நாட்டில் மழை பெய்யாது.

செய்ந்நன்றி மறந்தவன்; அறிஞர்கள் முன்னே பொய் புகல்வோன்; அடைக்கலமாக வைத்த பொருளைத் திருப்பிக் கொடுக்காதவன்; இம் மூவரும் மக்கள் பேற்றை இழப்பார்கள்.

கணவன் குறிப்பறிந்து நடக்கும் மனைவி; நெறி தவறாத தவசி; செங்கோல் செலுத்தும் அரசன்; இவர்கள் மழை பெய் என்று சொன்னால் மழை பெய்யும்.

அறநெறியிலே தவறாமல் வேள்வி 'செய்யும் அந்தணர்கள்; செங்கோல் செலுத்தும் அரசன்; கணவன் கருத்தின் படி ஒழுகும் பெண்கள்; இவர்கள் உள்ள நாட்டிலே மாதம் மும்மாரி பெய்யும்,

அறம் புரியாதவர்கள் நரகத்தை அடைவார்கள்; பழ வினையினால்தான் ஒவ்வொருவர்க்கும் இன்ப துன்பங்கள் உண்டு.

உயிர்க்கொலை செய்தால் பாவம்; புலால் உண்ணுதல் அறநெறிக்கு ஏற்றதன்று.

இவைபோன்ற பல நம்பிக்கைகள் தமிழ் மக்களிடம் குடி கொண்டிருந்தன. இவைகளைத் திரிகடுகப் பாடல்களிலே காணலாம்.

திருக்குறளின் கருத்துகள் பல, திரிகடுகப் பாடல்களிலே காணலாம்.

திருக்குறளின் கருத்துகள் பல, திரிகடுகப் பாடல்களிலே சுருக்கமாகக் கூறப்படுகின்றன.

மறுமைக்கு அணிகலம் கல்வி (பா .52)

என்பது, ''ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒரு வற்கு, எழுமையும் ஏமாப்பு உடைத்தது'' என்ற குறளின் கருத்தாகும்.

இல்லார்க்கு ஒன்று ஈயும் உடைமை (பா .98)

என்பது ''வறியோர்க்கொன்று ஈவதே ஈகை மற்றெல் லாம் குறி எதிர்ப்பை நீரது உடைத்து'' என்ற குறளின் கருத்தாகும்.

கொண்டான. குறிப்பறிவாள் பெண்டாட்டி
.........பெய்யெனப் பெய்யும் மழை (பா .96)

என்பது ''தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுது எழு வாள் பெய்எனப் பெய்யும் மழை'' என்ற திருக்குறளின் கருத்தாகும்.

இவ்வாறு திருக்குறளின் கருத்துக்கள் பல, திரிகடுக வெண்பாக்களிலே காணப்படுகின்றன. பண்டைத் தமிழர் பழக்க வழக்கங்களையும் சமூக வாழ்க்கையையும் தெரிந்து கொள்ளுவதற்கு இந்நூல் மிகவும் உதவி செய்கின்றது.

# 11. இன்னா நாற்பது

மக்களுக்குத் துன்பந்தருவன இவை என்று கூறும் நாற்பது வெண்பாக்கள் இந்நூலில் உண்டு. இதனாலேயே இதற்கு இன்னா நாற்பது என்று பெயர் வைத்தனர். இந்நூல் வெண்பாக்கள் ஒவ்வொன்றிலும் இன்னா என்னும் சொல் திரும்பத் திரும்ப வருகின்றது. இன்னா—துன்பம்.

இன்று இந் நூலில் காணப்படும் செய்யுட்கள் 41. ஒரு செய்யுள் கடவுள் வாழ்த்து. அது சிவன், பலராமன், திருமால், முருகன் நால்வரையும் வணங்காதவர் துன்பம் அடைவர் என்று கூறுகின்றது. இக்கடவுள் வாழத்துப் பாட்டு நூலாசிரியரால் பாடியிருக்க முடியாது. இவ்வாழ்த்தும் நூலோடு பிறந்ததாயிருந்தால் ''இன்னா நாற்பது'' என்ற பெயர் வைத்திருக்க மாட்டார்கள்.

இந் நூலாசிரியர் கபிலர். இப்பெயர் படைத்த புலவர்கள் பலர். அவர்களுள் இந் நூலாசிரியர் எக் கபிலர் என்று துணிந்து கூற முடியவில்லை.

சங்கப் பாடல்களிலே கபிலரது பாட்டு என்றால் அதற் கொரு தனிச் சிறப்பு. பாட்டின் சிறப்புக்கு உதாரணமாகக் கபிலரது பாட்டை எடுத்துக் கூறுவது பழந்தமிழ்ப் புலவர்கள் வழக்கம். பத்துப் பாட்டிலே குறிஞ்சிப் பாட்டைப் பாடியவர் கபிலர். ஐங்குறு நூற்றிலே மூன்றாம் நூறு கபிலர் பாடியது. பதிற்றுப் பத்திலே 7-வது பத்து கபிலர் இயற்றியது. கலித் தொகையிலே குறிஞ்சிக் கலி கபிலர் செய்தது. நற்றிணை,

குறுந்தொகை, அகநானூறு முதலிய நூல்களிலும் இவருடைய பாடல்கள் பல உண்டு.

இக்கபிலர் அந்தணர்; பாரியின் நண்பர். மாமிச உணவு உண்டவர். புறநானூற்றில் 14-வது பாடல் இவர் பாடியது. அதில் இவர் மாமிச உணவு உண்பவர் என்பதைக் குறிப்பிட்டிருக்கின்றார்.

சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் என்னும் அரசனைக் காணச் சென்றார் கபிலர். அவன் கபிலர்க்குக் கை கொடுத்து வரவேற்றான். கபிலர் கை பூப்போல மென்மையாக, வழ வழவென்றிருந்ததை உணர்ந்தான் ஆதன். ''என் கை மட்டும் கடினமாக இருக்கிறது. உம் கை மென்மையுடன் இருப்பது ஏன்?'' என்றான் ஆதன். ''உன் கை'' குதிரையின் கடிவாளத்தைப் பிடிக்கும் கை; கணையை எடுத்து வில்லிலே தொடுத்து விடும் கை; இரவலர்க்கு நல்ல அணிகலன்களை அள்ளி வழங்கும் கை; ஆகையால் காய்ச்சிப் போய்க் கரடு முரடாக இருக்கின்றது. என் கை நன்றாகச் சமைத்த ஊனையும், துவையலையும், கறியையும், சோற்றையும் அள்ளி அள்ளி உண்ணுகின்ற கை; உண்ட சோறு செறிமானம் ஆகவில்லையே என்று வருந்தி வயிற்றைத் தடவிக் கொண்டிருக்கும் கை. ஆகையால் உன் கை கடினம்; என் கை மென்மை'' என்று கூறினார். இதனால் சங்ககாலக் கபிலர் புலால் உணவை வெறுத்தவர் அல்லர் என்று காணலாம்.

இன்னாநாற்பதில் புலால் உணவு வெறுக்கப்படுகின்றது.

புலைஉள்ளி வாழ்தல் உயிர்க்கு இன்னா (பா. 13)

புலால் உணவை விரும்பி வாழ்வது மக்கள் உயிர்க்குத் துன்பம் தருவதாகும்.

ஊனைத்தின்று ஊனைப்பெருக்குதல் முன்இன்னா (பா. 23)

மற்றொரு உயிரின் ஊனைத் தின்று, தன் உடம்பை வளர்த்தல் துன்பமாகும்.

இவை புலால் உணவைக் கடிந்து கூறும் பகுதிகள். ஆதலால் இவர் பாரியின் நண்பராக வாழ்ந்த அந்தக் கபிலராக இருக்க முடியாது.

கபிலர் அகவல் என்னும் நூல் ஒன்று உண்டு. அது சாதி வேற்றுமையை வன்மையாகக் கண்டிப்பது. சங்க நூல்களின் கருத்துக்களுக்கு மாறாக, ஆரியர்களே, நால்வகைச் சாதிப் பிரிவினையை இந்நாட்டிலே புகுத்தியவர்கள் என்று கூறுகின்றது. அது பிற்காலத்திலே எழுந்த நூல். கபிலர் அகவல் பாடிய கபிலர், சாதி வேற்றுமையை ஒத்துக் கொள்ளாதவர் இன்னாநாற்பது பாடிய கபிலர் சாதி என்று சொல்லாவிட்டாலும் குடிப்பிறப்பில் உயர்வு தாழ்வு உண்டு என்று ஒத்துக் கொள்ளுகிறார்.

குலத்தில் பிறந்தவன் கல்லாமை இன்னா

உயர்ந்த குலத்திலே பிறந்தவன் கல்வி கற்காமல் இருப்பது அவனுக்குத் துன்பமாகும்.

குலம் இல்வழிக் கலத்தல் இன்னா

நல்ல குலம் இல்லாத குடியிலே மணம் செய்துகொள்ளுதல் துன்பம் தரும்.

இவைகள் இன்னாநாற்பதில் உள்ளவை. இவைகள் பிறப்பிலே உயர்வு தாழ்வு உண்டு என்பதை ஒத்துக் கொள்ளுகின்றன. ஆதலால் இக்கபிலர் சங்ககாலக் கபிலரும் அல்லர். கபிலர் அகவல் பாடிய கபிலரும் அல்லர். வேறு யாரோ ஒரு கபிலர். இவர் வரலாறு தெரியவில்லை.

## செய்யத் தகாதவை

இன்னா நாற்பதில் கூறப்படும் நீதிகள் மிகவும் சிறந்தவை. இக் காலத்திற்குப் பொருந்தாதவை சில காணப்படலாம். பெரும்பாலான கருத்துக்கள் மக்களுக்கு அறிவையும் அறத்தையும் போதிப்பவை. அவைகளில் சிலவற்றைக் காண்போம்,

பொருள் உணர்வார் இல்வழிப் பாட்டுஉரைத்தல் இன்னா;
இருள் கூர் சிறுநெறி தாம்தனிப் போக்கு இன்னா;
அருள் இலார் தம்கண் செலவு இன்னா; இன்னா
பொருள் இலார் வண்மை புரிவு. (பா. 11)

பாட்டின் பொருளை அறிந்து சுவைக்கும் அறிவுள்ளவர் இல்லாத இடத்தில் செய்யுளைக் கூறுதல் துன்பம். இருள் நிறைந்த சிறிய வழியிலே தனியே செல்லுதல் துன்பம். இரக்கமில்லாதவரிடம் சென்று ஒன்றைக் கேட்பது துன்பந் தரும். செல்வம் இல்லாதவர் பிறருக்குப் பொருள் கொடுக்க விரும்புதல் துன்பந்தரும்.

பெரியாரோடு யாத்த தொடர்விடுதல் இன்னா;
அரியவை செய்தும் எனஉரைத்தல் இன்னா;
பரியார்க்குத் தாம்உற்ற கூற்றுஇன்னா; இன்னா
பெரியார்க்குத் தீய செயல். (பா. 25)

பெரியாரோடு கொண்ட நட்பை விடுவது துன்பம். தம்மால் செய்ய முடியாத காரியங்களைச் செய்து முடிப்போம் என்று கூறுவது துன்பமாகும். தம்மிடம் அன்பில்லாதவர் பால் தாம் அடைந்த துன்பத்தை உரைத்தல் துன்பமாகும். பெருமை யுள்ளவர்க்குத் தீமை செய்யத் தொடங்குதல் துன்பமாகும்.''

இந்த இரண்டு பாடல்களில் உள்ள அறங்கள் சிறந் தவை; என்றும் மக்களால் பின்பற்றக் கூடியவை.

**பழக்க வழக்கங்கள்**

பண்டைத் தமிழகத்தில் இருந்த பழக்க வழக்கங்கள் சில வற்றையும் இந்நூலிலே காணலாம். பண்டைத் தமிழ் மக்கள் கொண்டிருந்த நம்பிக்கைகள் சிலவற்றையும் காணலாம்.

பார்ப்பார் இல் கோழியும்நாயும் புகல்இன்னா

பார்ப்பார் வீட்டிலே கோழியும் நாயும் நுழைவது துன்பம் தரும். (பா. 3) பார்ப்பார்கள் கோழியையும் நாயையும் அருவெறுத்தனர். இரண்டும் மலந்தின்பவை; ஆதலால்

அவைகள் வீட்டில் நுழைந்தால் ஆசாரத்திற்குக் குறைவு என்று கருதினர்.

இன்னா ஒத்துஇலாப் பார்ப்பான் உரை. (பா. 22)

வேதத்தை ஓதாத பார்ப்பான் அறிவில்லாதவன். ஆதலால் அவன் கூறுவதை நம்பினால் துன்பந்தான்.

இவைகள் பார்ப்பாரைப் பற்றிக் கூறப்பட்டிருப்பவை.

இன்னா காப்பாற்றா வேந்தன் உலகு (பா. 3)

குடிகளைக் காப்பாற்றாத வேந்தன் உள்ள நாட்டிலே வாழ்வது துன்பந்தரும்.

கொடுங்கோல் மறமன்னர் கீழ்வாழ்தல் இன்னா (பா. 4)

கொடுங்கோல் செலுத்தும், கொலைத் தொழிலையுடைய மன்னர்களின் ஆட்சியின் கீழே வாழ்வது துன்பம்.

முறை யின்றிஆளும் அரசு இன்னா

நீதி யில்லாமல் ஆளுகின்ற அரசாட்சியின் கீழ் வாழ்வது துன்பம் தரும். (பா. 6) இவைகள் அரசு முறையைப் பற்றிக் கூறியவை.

திருவுடை யாரைச் செறல் இன்னா (பா. 5)

செல்வம் உள்ளவரைப் பகைத்துக் கொள்வதனால் துன்பம் வரும்.

அக் காலத்திலே செல்வர்களுக்கே சமுதாயத்தில் மதிப்பு மிகுதி. அவர்களைப் பகைத்துக்கொண்டால் அவர்களால் எந்தத் தீமையையும் செய்யமுடியும். ஆதலால் அவர்களுக்கு அடங்கியே வாழவேண்டும் என்று நம்பினர்.

குறி அறியான் மாநாகம்ஆட்டுவித்தல் இன்னா (பா. 30)

பாம்பாட்டுவதற்குரிய மந்திரம் முதலியவற்றை அறியாதவன் பெரிய பாம்பை ஆட்டுவது துன்பம்தரும்.

பாம்புகளை மந்திரத்தால் ஆட்டுவிக்கலாம் என்ற நம்பிக்கை பண்டைக் காலத்திலும் இருந்தது என்பதைக் காட்டுகின்றது இது.

ஒடுங்கி அரவு உறையும்இல் இன்னா (பா. 31)

பாம்பு பதுங்கியிருக்கின்ற வீட்டில் வசிப்பது துன்பந் தரும்.

சில கிராமங்களில் பழைய வீடுகளிலே பாம்பு உண்டு. அதை மனைப்பாம்பு என்பர்; அடிக்கக்கூடாது என்றும் கூறுவர். இது மூடநம்பிக்கை. இந்த நம்பிக்கையைக் கண்டிக்கின்றது இது.

இவ்வாறு பல நீதிகளை இந்நூலிலே காணலாம். ஒவ்வொரு வெண்பாவிலும் நான்கு நான்கு நீதிகள் கூறப்பட்டிருக்கின்றன. இந் நீதிகளில் பல நெஞ்சில் நிலைத்திருக்க வேண்டியவை.

# 12. இனியவை நாற்பது

நாற்பது வெண்பாக்கள் கொண்ட நூல்; நல்லவை இவை இவை என்று எடுத்துரைக்கின்றன. ஆகையால் இந் நூலுக்கு இனியவை நாற்பது என்று பெயர். இன்று 41 வெண்பாக்கள் இருக்கின்றன. முதற் பாட்டுக் கடவுள் வாழ்த்து. சிவன், திருமால், நான்முகன் மூவரையும் வாழ்த்துகின்றது. இவ் வாழ்த்துப் பிற்காலத்தாரால் பாடிச் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும்.

இந்நூலைச் செய்த ஆசிரியர் பெயர் பூதஞ்சேந்தனார். இவர் இயற்பெயர் சேந்தனார்; இவர் தந்தை பெயர் பூத னார். இந்தப் பூதனார் மதுரையில் வாழ்ந்தவர். இவர் தமிழ் ஆசிரியர். ஆதலால் இந் நூலாசிரியரை மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ்சேந்தனார் என்று அழைத்தனர்.

இந்நூல் வெண்பாக்கள் ஒவ்வொன்றும் மக்கள் நலம் பெற்று வாழ்வதற்கான நல்லறங்களைக் கூறுகின்றன. பெரும்பாலான வெண்பாக்களில் மூன்று செய்திகள் தாம் சொல்லப்படுகின்றன. சில சிறந்த நீதிகள் இதில் உண்டு. இவ் வெண்பாக்கள் அவ்வளவு கடினமானவை யல்ல. எளி தில் பொருள் தெரிந்து கொள்ளக் கூடியவை. மோனையும், எதுகையும் அமைந்த அழகிய வெண்பாக்கள். சில பஃறொடை வெண்பாக்களும் இதில் உண்டு.

**பாடல் சிறப்பு**

மெய், வாய், கண், மூக்கு, செவி யென்பன ஐம்பொறி கள். இவைகளை அடக்கி ஆளும் மனிதனே மன அமைதி யுடன் வாழ முடியும். கல்லாத மூடர்களின் சேர்க்கையால் செல்வங் கிடைப்பதாயினும் அச்சேர்க்கையைக் கைவிடுதல் தான் நலம். நிலைத்த அறிவும், நெஞ்சிலே உரமும் இல்லாத மனிதருடன் சேர்ந்து வாழாமைதான் நன்மை தரும். இவ் வாறு அறவுரை கூறுகின்றது ஒரு செய்யுள்.

ஐவாய வேட்கை அவா அடக்கல் முன்இனிதே ;
கைவாய்ப் பொருள்பெறினும் கல்லார்கண் தீர்வுஇனிதே ;
நில்லாத காட்சி நிறையில் மனிதரைப்
புல்லா விடுதல் இனிது

ஐம்பொறிகளின் வழியால் வரும் நினைப்பையும் ஆசையை யும் அடக்கிக்கொள்வதே மிகவும் சிறந்தது ; கையிலே பொருள் கிடைப்பதா யிருப்பினும் கல்லாதவரை விட்டுப் பிரிதலே நன்று ; நிலையில்லாத அறிவும், நெஞ்சிலே உறுதி யும் இல்லாத மனிதரைச் சேராமல் இருப்பதே நலம். (பா. 26)

நன்மைகள் இவை என்று எடுத்துரைக்கும் மற்றொரு செய்யுளும் மனத்திலே பதிய வைத்துக்கொள்ளத் தக்கதாகும்.

கயவரைக் கைகழிந்து வாழ்தல் இனிதே,
உயர்வுஉள்ளி ஊக்கம் பிறத்தல் இனிதே ;
எளியர் இவர்என்று இகழ்ந்துரையார் ஆகி
ஒளிபட வாழ்தல் இனிது

கீழ்த்தரமானவர்களுடன் சேராமல் வாழ்வது நலம் ; தான் மேலும் உயர்வதற்கு எண்ணி, அதற்காக ஊக்கம் பெற்று உழைத்தல் நலம் ; இவர் வறியவர் என்று ஒருவரையும் இகழ்ந்து பேசாமல் புகழுடன் வாழ்வதே நலம்.

**தன்மானம்**

தன்மானத்துடன் வாழாதவன் மனிதன் அல்லன். தன்மானமே உயிர் எனக் கொண்டவன்தான் மக்களால் மதிக்கப்படுவான். தன்மான உணர்ச்சி எல்லா மக்களிடமும் உண்டு. சிலர் அவ்வுணர்ச்சியை எச்சமயத்திலும் இழந்து விடுவதில்லை சிலர் ஆபத்தும் மனச்சோர்வும் ஏற்படும் போது அவ்வுணர்ச்சியை விட்டுவிடுகின்றனர். எச்சமயத்தி லும் மானத்தைக் காப்பாற்றிக்கொள்வதே மனிதத்தன்மை என்று கூறுகின்றது இந்நூல்.

> உயிர்சென்று தான்படினும் உண்ணார் கைத்துஉண்ணாப்
> பெருமை போல் பீடுஉடையது இல் (பா. 12)

பசியினால் உயிரே போவதானாலும், உண்ணத்தகாதவர் கையிலிருந்து உணவைப் பெற்று உண்ணாத பெருமையே சிறந்தது ; அதைப் போன்ற பெருமை வேறு ஒன்றும் இல்லை.

> மானம் அழிந்தபின் வாழாமை முன்இனிதே (பா. 14)

மானங்கெட்ட பின் உயிர் வாழ்வதைவிடச் செத்து மடிவதே சிறந்ததாகும்.

> மானம் படவரின் வாழாமை முன்இனிதே (பா. 28)

மானம் கெடும்படியான நிலைமை வருமாயின், அந் நிலைமை வருவதற்கு முன்பே இறந்துபடுதல் நன்று.

இவைகள், தன்மானத்தின் பெருமையை எடுத்துக் காட்டின.

**அரசன் கடமை**

நாடாளும் மன்னவன் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதையும் இந்நூல் எடுத்துரைக்கின்றது. அரசனுக்குக் கூறப்பட்டிருக்கும் அந்த அறிவுரை, அரசன் அற்ற குடி அரசுக்கும் ஏற்றதாகும்.

ஒற்றினான் ஒற்றிப் பொருள்தெரிதல் முன்இனிதே;
முன்தான் தெரிந்து முறைசெய்தல் முன்இனிதே;
பற்றுஇலனாய்ப் பல்லுயிர்க்கும் பாத்துற்றுப் பாங்கு அறிதல்
வெற்றிவேல் வேந்தர்க்கு இனிது

ஒற்றர்களைக்கொண்டும் நாட்டிலே நடைபெறும் நிகழ்ச்சி களைத் தெரிந்துகொள்ளுதல் சிறந்தது; நீதி வழங்குவதற்கு முன்பே, தான் நன்றாக ஆராய்ந்து உண்மை யறிந்து நீதி வழங்குவதே சிறந்தது; ஒரு சார்பிலே நிற்காதவனாய், எல்லா வுயிர்களிடத்தும் சமமான நிலையில் நின்று, எல்லாரி டத்திலும் உள்ள நன்மை தீமைகளை அறிந்து கொள்ளு வதே வேந்தர்களின் கடமை.

இந்த அறிவுரையைப் பின்பற்றி நடக்கும் அரசாங்கம் எப்பொழுதும் நிலைத்து நிற்கும்; மக்களால் தூற்றப் படாது; போற்றப்படும்.

## சிறந்த அறங்கள்

இன்னும் பல சிறந்த அறங்களும் இந்நூலிலே கூறப் பட்டுள்ளன. அவைகளில் சிலவற்றைக் காண்போம்.

''தந்தை சொல்மிக்க மந்திரம் இல்லை'' என்று நாம் படித்திருக்கின்றோம்; தந்தையைத் தெய்வமாகப் போற்ற வேண்டும் என்பதே இதன் கருத்து. தந்தை மொழியைத் தட்டவே கூடாது என்று இன்றும் சிறுவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கின்றோம். இதற்கு மாறான கருத்தை இந்நூலிலே காணலாம். ''தந்தை ஒழுக்கம் அற்றவனாயிருந்தால் - நீதி இது, அநீதி இது என்று அறியாதவனாயிருந்தால் - அவனுடைய சொல்லைக் கேட்கக்கூடாது. கேட்பதனால் யாதும் பயன் இல்லை'' என்று கூறுகிறது இந்நூல்.

தந்தையே ஆயினும்தான் அடங்கான் ஆகுமேல்
கொண்டு அடையான் ஆகல் இனிது (பா. 8)

தந்தையா யிருந்தாலும் சரி அவன் அடக்க மற்றவனாயிருப் பின், அவன் சொல்லைக் கேட்டு நடக்காமல் இருப்பதே நலம்.

பிச்சை புக்காயினும் கற்றல் இனிதே (பா. 2)

பிச்சை யெடுத்தாவது கல்வி கற்றல் மிகவும் சிறந்தது. இது அனைவரும் போற்றக்கூடிய சிறந்த அறிவுரையாகும்.

பற்பலநாளும் பழுதுஇன்றிப் பாங்குடைய
கற்றலின் காழ்இனிது இல்.

பல நாட்களும் சோர்வில்லாமல் சிறப்பு நூல்களைக் கற்பதைவிட மிகச் சிறந்தது வேறொன்றும் இல்லை. இவை கல்வியின் சிறப்பை வலியுறுத்தின.

ஊனைத்தின்று ஊனைப் பெருக்காமை முன் இனிதே

வேறு ஒரு உயிரின் உடம்பைத் தின்று, தன் உடம்பை வளர்க் காமல் இருப்பதே சிறந்த அறம் (பா. 5) என்று சொல்லி, மாமிச உணவைக் கூடாது என்று மறுக்கின்றது.

கடம் உண்டு வாழாமை காண்டல் இனிதே (பா. 11)

கடன் வாங்கி உண்டு வாழாத முறையைக் கண்டறிந்து வாழ் தலே சிறந்தது.

கடன் கொண்டு செய்வன செய்தல் இனிதே

பணம் இல்லை என்று செய்ய வேண்டிய காரியங்களைச் செய்யாமல் விட்டு விடக்கூடாது; கடன் வாங்கியாவது அவற்றைச் செய்து முடிப்பதே நன்று. (பா. 43) இவைகள் கடன் வாங்குவதை மறுத்தும், அவசியமானால் கடன் வாங்க லாம் என்றும் கூறின.

வினையுடையான் வந்து அடைந்து வெய்துறும் போழ்து
மனன் அஞ்சான் ஆகல் இனிது

ஊழ்வினை தன்னை அடைந்து, அதனால் துன்பம் அடையும் பொழுதும், உள்ளத்திலே அச்சமும் சோர்வும் இன்றி உரிய கடமைகளைச் செய்வதே சிறந்தது. (பா. 15) ஊழ்வினை ஒன்று உண்டு; ஆயினும், உள்ளத்திலே ஊக்கமும், ஆண்மை

யும் உள்ளவர் அவ்வினையை முறியடிக்கலாம் என்று உரைத்தது இது.

ஊர் முனியா செய்தொழுகும் ஊக்கம் மிக இனிதே

தான் இருக்கும் ஊரார் வெறுக்கத்தகாத செயல்களைச் செய்து வாழும் ஊக்கமே சிறந்தது; ஊரார் வெறுக்கும் செயல்களைச் செய்பவன் துன்பத்திற்கு ஆளாவான். (பா. 34) இது ஊருடன் ஒத்துவாழ வேண்டும் என்று அறிவுறுத்தியது.

எத்துணையும் ஆற்ற இனிது என்ப பால்படும்
கற்றா உடையான் விருந்து

எந்த அளவிலும் மிகவும் பால் கறக்கும் கன்றோடு கூடிய பசுவை உடையவன் செய்யும் விருந்தே சிறந்தது (பா. 39) என்பர்.

யார் செய்யும் விருந்து சிறந்தது என்பதை எடுத்துரைத்தது இச் செய்யுள். மற்றவர்கள் செய்யும் விருந்தைக் காட்டிலும் கறவைப் பசுவை வைத்திருக்கின்றவன் செய்யும் விருந்தே சிறந்ததாம். நல்ல பால், நல்ல நெய், நல்ல தயிர் இவை விருந்திற்கு வேண்டியவை. விலைக்கு வாங்கினால் அவ்வளவு நல்லதாகக் கிடைக்காது. சொந்தமாக மாடிருந்தால் தான், கலப்பற்ற பால், தயிர், நெய் கிடைக்கும். ஆதலால் கறவைப் பசுவை யுடையவன் செய்யும் விருந்தே சிறந்த சுவையுள்ள விருந்தாகும் என்று கூறிற்று.

### திருக்குறள்

இனியவை நாற்பதிலே திருக்குறளின் கருத்துகள் பல காணப்படுகின்றன.

ஊனைத்தின்று ஊனைப் பெருக்காமை முன் இனிது

என்பது ''தன் ஊன் பெருக்கற்குத் தான் பிறிதின் ஊன் உண்பான் எங்ஙனம் ஆளும் அருள்'' என்ற திருக்குறளின் கருத்தைக் கொண்டதாகும்.

ஆற்றுந் துணையால் அறம் செய்கை
முன் இனிதே (பா. 7)

என்பது, 'ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே செல்லும் வாய் எல்லாம் செயல்'' என்ற திருக்குறளின் கருத்தாகும்.

மானம் அழிந்த பின் வாழாமை முன் இனிதே (பா. 14) என்பது ''மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார் உயிர் நீப்பர் மானம் வரின்'' என்ற குறளின் கருத்தைக் கொண்டதாகும்.

நட்டார்க்கு நல்ல செயலின் இனிது எத்துணையும்
ஒட்டாரை ஒட்டிக் கொளல் அதனின் முன் இனிதே [பா.18]

என்பது ''நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே ஒட்டாரை ஒட்டிக் கொளல்'' என்ற திருக்குறளின் பொருளை அப்படியே எடுத்துரைக்கின்றது. இவ்வாறே பல பாடல்களிலே திருக்குறளின் கருத்துகள் காணப்படுகின்றன.

இனியவை நாற்பதிலே உள்ள வெண்பாக்கள் அனைத்தும் சிறத்த கருத்தமைந்தவை; படிப்போர் மனத்திலே அப்படியே பதியக் கூடியவை; தமிழ் மக்கள் வாழ்க்கைச் சிறப்பைக் காண்பதற்கு இந்நூல் உதவி செய்கின்றது; அவர்களுடைய ஒழுக்கச் சிறப்பை விளக்கி உரைக்கின்றது.

# 13. நான்மணிக் கடிகை

நான்மணிக் கடிகை ஒரு சிறந்த நூல். இதனுள் இன்று 106 வெண்பாக்கள் காணப்படுகின்றன. நூறு வெண்பாக்கள் தாம் நூலாசிரியரால் பாடப்பட்டிருக்க வேண்டும். ஆறு வெண்பாக்கள் எப்படியோ வந்து சேர்ந்து விட்டன. இவற்றுள் இரண்டு வெண்பாக்கள் கடவுள் வாழ்த்தாக இருக்கின்றன. இரண்டும் திருமாலைப் பற்றியே கூறுகின்றன. இந்த இரண்டும் நூலினுள் நான்கும் இந்நூலாசிரியரால் பாடப் பட்டவை அல்ல என்றே கொள்ள வேண்டும்.

நான்மணிக் கடிகை—நான்கு மணிகள் பதித்த ஆபரணம். ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு அணிகலன். அந்த அணிகலன்களிலே நான்கு நான்கு இரத்தினங்கள் பதித்து வைக்கப்பட்டிருக்கின்றன. இதுவே நான் மணிக் கடிகை என்பதன் விளக்கம்.

நான்மணிக் கடிகையின் ஒவ்வொரு வெண்பாவும் நந் நான்கு நீதிகளைத் தெளிவாகக் கூறுகின்றன. படிப்பவர் களுக்கு நன்றாக விளங்கும் விதத்தில் நறுக்கு நறுக்கென்று நீதியைச் சொல்லுகின்றன.

திரிகடுகம், சிறுபஞ்ச மூலம், ஏலாதி என்னும் நூல்களின் வெண்பாக்களைவிட இந்நூல் வெண்பாக்கள் இனிமை யானவை; தெளிவானவை; விளக்கமானவை. திரிகடுகம், சிறுபஞ்ச மூலம், ஏலாதி மூன்றும் மருந்தின் பெயரைக் கொண்டவை; ஆதலால் அவைகளின் நடையிலும் கொஞ்சம்

கசப்பும் காரமும் அமைந்திருப்பது இயற்கை. நான்மணிக் கடிகையோ ஒளிபொருந்திய மணியாரம்; ஆதலால் இதன் செய்யுட்கள் அவைகளைவிட ஒளிபெற்று விளங்குவதும் இயல்புதான்.

இந் நூலாசிரியர் பெயர் விளம்பி நாகனார். இவர் பெயர் நாகனார். இவர் வாழ்ந்த ஊர் அல்லது பிறந்த ஊர் விளம்பியாக இருக்கலாம். ஆதலால் ஊர்ப்பெயரும் சேர்ந்து விளம்பி நாகனார் என்று பெயர் பெற்றார். இவரைப் பற்றிய வேறு வரலாறு ஒன்றும் தெரியவில்லை.

## பாடல்களின் சிறப்பு

எதையும் தெளிவாகக் கூறுவதே இந்நூல் வெண்பாக் களின் சிறப்பாகும். சில வெண்பாக்களைப் படித்தாலே இந்த உண்மையைக் காணலாம்.

> கள்ளி வயிற்றின் அகில் பிறக்கும் ; மான்வயிற்றின்
> ஒள்அரி தாரம்பிறக்கும் ; பெரும் கடலுள்
> பல்விலைய முத்தம் பிறக்கும் ; அறிவார் யார்
> நல்ஆள் பிறக்கும் குடி?

புகைத்தால் நறுமணம் தரும் அகில் கட்டை கள்ளியின் நடு விலே உண்டாகும். மானின் வயிற்றிலே ஒளியுள்ள அரி தாரம் பிறக்கும் ; உப்புச்சுவையுள்ள பெரிய கடலிலே மிகுந்த விலையுள்ள முத்து உண்டாகும். ஆதலால் நல்ல மக்கள் பிறக்கும் குடி இன்ன குடிதான் என்று யார் அறிவார் ?

ஒருவனுடைய குடிப் பிறப்பைக்கண்டு அவனை உயர் வாகவோ தாழ்வாகவோ எண்ணக் கூடாது ; அவனுடைய கல்வி அறிவு ஒழுக்கங்களைக் கொண்டே அவனை மதிக்க வேண்டும் ; இழிந்த குடியிலே பிறந்தாலும் கல்வி அறிவு, ஒழுக்கமுள்ளவன் உயர்ந்தவன் ; இவைகள் இல்லாதவன் உயர்ந்த குடியிலே பிறந்தவனாயினும் இழிந்தவன் என்ற கருத்தை வலியுறுத்துகின்றது இச்செய்யுள்.

உறக்கம் இல்லாமல் துன்புறுகின்றவர்கள் யார் யார்? என்று உரைக்கின்றது ஒரு செய்யுள்.

> கள்வம் என்பார்க்கும் துயில் இல்லை ; காதலி மாட்டு
> உள்ளம் வைப்பார்க்கும் துயில் இல்லை; ஒண்பொருள்
> செய்வம் என்பார்க்கும் துயில் இல்லை; அப்பொருள்
> காப்பார்க்கும் இல்லை துயில்

திருடுவோம் என்று எண்ணிக் காலம் பார்த்திருக்கும் கள்வர்களுக்கும் தூக்கம் இல்லை ; எப்பொழுதும் காதலியிடமே உள்ளத்தை அடிமையாக்கி யிருப்பவர்களுக்கும் உறக்கம் இல்லை. சிறந்த செல்வப் பொருளை விரைவிலே பெருக்குவோம் என்று எண்ணி உழைப்பவர்களும் தூங்கமாட்டார்கள்; உழைத்துச் சேர்த்த பொருளைக் காப்பாற்றுகின்றவர்களுக்கும் உறக்கம் இல்லை. (பா. 7) இந்நால்வகையினரும் தங்கள் நினைப்பை வேறு இடத்திலே செலுத்தியிருப்பார்கள்; ஆகையினால் மன அமைதியுடன் உறங்க மாட்டார்கள்.

சிலருக்குத் தம்மூர், வேற்றூர் என்ற வேறுபாடே தோன்றாது ; எல்லா வூரையும் தம்மூர் போலவே எண்ணுவார்கள். அவர்களுக்குத் தம்மூரிலே கிடைக்கும் அத்தனையும் வேற்றூரிலும் கிடைக்கும். இத்தகையோர் யார் என்று சொல்லுகிறது ஒரு பாட்டு.

> நல்லார்க்கும் தம்ஊர் என்று ஊர் இல்லை ; நன்னெறிச்
> செல்வார்க்கும் தம்ஊர் என்று ஊர் இல்லை ;—அல்லாக்
> கடைகட்கும் தம் ஊர்என்று ஊர் இல்லை ; தம் கைத்து
> உடையார்க்கும் எவ்வூரும் ஊர்

கல்வி அறிவு, ஒழுக்கங்களிலே சிறந்த நல்லவர்களுக்கும் தம்முடைய ஊர் என்று ஓர் ஊர் இல்லை ; நன்னெறியிலே நடப்போர்க்கும் தம்முடைய ஊர் என்று ஓர் ஊர் இல்லை ; உயர்ந்தவர்கள் அல்லாத கீழ்மக்கட்கும் தம்முடைய ஊர் என்று ஓர் ஊர் இல்லை ; தம் கையிலே செல்வம் உள்ளவர்களுக்கும் எல்லா ஊரும் சொந்த ஊர்தான்.

நல்லவர்கள் எல்லா ஊர்களிலும் பாராட்டப்படுவார்கள். உண்மை ஒழுக்கமுள்ள உயர்ந்தவர்கள் எல்லா ஊர்களிலும் வரவேற்கப்படுவார்கள். தீமை செய்யும் கீழ்மக்கள் உள்ளூரிலும், வெளியூர்களிலும் வெறுக்கப்படுவார்கள். செல்வம் உள்ளவர் எங்கு சென்றாலும், பணத்தைக்கொண்டு சொந்த ஊர்போல் வசதி செய்து கொண்டு வாழலாம். இக் கருத்தையே இப்பாடல் தெளிவாக உரைத்திருக்கின்றது.

## அரசியலைப் பற்றி

அரசாள்வோருக்கு அறிவுறுத்தும் அறவுரைகள் இந் நூலிலே பல உண்டு. அவை ஆளுவோர் தங்கள் உள்ளத்திலே மறவாமல் கொள்ள வேண்டியவை.

நாட்டு ஆக்கம் நல்லன் இவ்வேந்து என்றல் (பா. 18)

ஒரு நாட்டுக்கு உயர்வு, இந்நாட்டை ஆளும் வேந்தன் நல்லவன் என்று குடிமக்களால் பாராட்டப்படுவதாகும்.

மண் அதிர்ப்பின் மன்னவன் கோல் அதிர்க்கும் (பா. 19)

நாட்டில் உள்ள குடிமக்கள் கலங்குவார்களாயின் மன்னவனது ஆட்சியும் கலங்கி விடும் ; நிலைக்காது.

கோல்நோக்கி வாழும் குடி எல்லாம் (பா. 27)

குடிகள் எல்லாம் அரசனது செங்கோலை நோக்கியே உயிர் வாழ்வார்கள் ; ஆதலால் நீதி தவறாது ஆட்சி புரிய வேண்டும்.

மழையின்றி மாநிலத்தார்க்கு இல்லை ; மழையும்
தவம்இலார் இல்வழியில்லை ; தவமும்
அரசன் இலாவழி யில்லை ; அரசனும்
இல்வாழ்வார் இல்வழி இல் (பா. 47)

மழையில்லாவிட்டால் இவ்வுலகில் வாழ்வோருக்கு வாழ்வில்லை ; மழையும் தவம் இல்லாதவர்கள் வாழும் இடங்களில் இல்லை ; தவமும் அறநெறியைக் காக்கும் அரசன்

இல்லாதவிடத்தில் இல்லை ; அரசனும் குடிமக்கள் இல்லாத விடத்தில் இல்லை.

இச்செய்யுளிலே தவத்தோரால்தான் மழை பெய்கின்றது, தவசிகளைக் காப்பாற்றுவது அரசன் கடமை என்று கூறியிருப்பது பழங்கால மக்கள் நம்பிக்கை. குடிமக்கள் நன்றாக வாழாவிட்டால், அரசன்—அரசாட்சி—இல்லை என்று கூறியிருக்கும் உண்மை என்றும் அழியாதது.

மேலே கூறப்பட்டிருப்பவை அரசியலைப் பற்றி அறிவுறுத்தும் உண்மைகள்.

**அறவுரைகள்**

சினம் கொள்வதால் நன்மையில்லை, ஆத்திரம் அறிவைச் சிதைக்கும். உண்மையைக் காணவிடாது. சினத்தை அடக்குவதே அறிஞர் கடமை. இவ்வுண்மையை வலியுறுத்துகிறார் இவ்வாசிரியர்.

எல்லாம், வெகுண்டார் முன் தோன்றா கெடும் (பா. 8)

எல்லா நன்மைகளும் கோபங்கொள்கின்றவர்களிடம் காணப்படாமல் அழிந்துவிடும்.

என்றும், விடல்வேண்டும் தம்கண் வெகுளி (பா. 11)

எப்பொழுதும், தம்மிடம் உள்ள கோபத்தை விட்டுவிட வேண்டும் ; கோபமே கூடாது.

வெல்வது வேண்டின் வெகுளி விடல்

பிறரை வெல்ல வேண்டினால், வெகுளியை — அதாவது கோபத்தை — விட்டுவிட வேண்டும் ; அப்பொழுதுதான் ஆழ்ந்து சிந்தித்து அவரைத் தோற்கடிக்கலாம். (பா. 15) இவைகள் சினத்தைப் பற்றிக் கூறியவை.

புலவர் தேவர்களுக்குச் சமமானவர்கள். 'தேவர் அனையர் புலவரும்' - புலவர்கள் தேவர்களைப் போன்றவர்கள். (பா. 74)

இல்லத்திலே இருந்துகொண்டு விபச்சாரம் செய்கின்றவள் எமன் ஆவாள். 'கூற்றமே இல்லத்துத் தீங்கு ஒழுகுவாள்' - இல்லத்திலே இருந்து கெட்டவழியிலே நடக்கின்ற பெண், தன் கணவனுக்கு எமன் ஆவாள்.

என்றும் நன்மைகளைச் சிந்திப்பவர்களே அந்தணர் ஆவார். 'என்றும் நன்று ஊக்கல் அந்தணர் உள்ளம்' - எப்பொழுதும் நல்ல செயல்களிலே கருத்தைச் செலுத்துவதே அந்தணர்களின் எண்ணமாக இருக்க வேண்டும். (பா. 85)

பலதார மணம் தவறு; பல மனைவிகளை மணந்திருப்பவன் வறுமையால் வாடுவான். 'நிரப்பிடும்பை பல் பெண்டிர் ஆளன் அறியும்' - வறுமைத் துன்பத்தைப் பல பெண்களை மணந்தவனே அறிவான். (பா. 95)

### கொள்கைகளும் நம்பிக்கைகளும்

மாந்திரிகர் மந்திரத்தினால் பாம்பின் கோபத்தை அடக்கி விடுவார்கள்; அதைத் தன் வசப்படுத்திக் கொள்வார்கள் (பா. 10)

தான் இறந்தபின் தன்னுடன் வருவது தான்செய்த அறத்தின் பயனைத்தவிர வேறு ஒன்றும் இல்லை. (பா. 15)

தன் மனத்தைக் கட்டுப்படுத்தி ஆளும் தன்மையுள்ளவனே தவம் புரிவதற்குத் தகுதியுள்ளவன். (பா. 16)

கொல்லுவதற்காகவே பிற உயிர்களை வளர்ப்பது குற்றமாகும்: விலைக்குப் புலால் வாங்கிச் சமைத்துச் சாப்பிடுவதும் குற்றமாகும். (பா. 26)

அந்தணர்கள் உயர்ந்த பிறப்புள்ளவர்கள். (பா. 33)

மையிட்டுக கொள்வதனால் கண்கள் அழகாகக் காணப்படும். ஆதலால்தான் பெண்கள் கண்ணுக்கு மையிட்டுக் கொள்ளும் வழக்கம் நீண்ட காலமாக நிலவி வருகின்றது. (பா. 36)

தெய்வத்தை அடைந்து வாழ்த்தி வணங்கினால் வேண்டும் வரங்களைப் பெறலாம். (பா. 61)

திருமகள் கருணையினால்தான் ஒருவனுக்குச் செல்வம் உண்டாகும். (பா. 65)

தந்தையின் பெருமையையும், பண்பையும் அவனுடைய மகனால் அறிந்து கொள்ளலாம்; பூர்வ வினையை வெல்ல முடியாது; அது தன் பலனைத் தந்தே தீரும். புலால் உண்ணல் அறமன்று; கள்ளுண்டல் தீமை தரும். போர் செய்வதற்குரிய படைகளிலே யானைப்படைகளே சிறந்தவை. கல்வி கற்பது மக்கள் கடமை; கற்றவர்களே சிறந்தவர். இக்கருத்துக்கள் பல பாடல்களிலே காணப்படுகின்றன.

**திருக்குறள் கருத்துக்கள்**

நான்மணிக் கடிகையிலே திருக்குறளின் கருத்துக்கள் பலவற்றைக் காணலாம். 'கெட்டறிய கேளிரால் ஆய பயன்'- தமக்குக் கேடுவந்தபோது உறவினரால் ஆகும் பயனைக் கண்டறிக (பா. 3) என்பது நான்மணிக் கடிகை. ''கேட்டினும் உண்டு ஓர் உறுதி கிளைஞரை, நீட்டி அளப்பது ஓர் கோல்'' என்பது திருக்குறள். இரண்டும் ஒத்த கருத்துடையன.

''பிறர் செய்த நன்றியை நன்றாகக் கொளல்வேண்டும்''- பிறர் செய்த நன்றியை மறவாமல் என்றும் மனத்திலே கொள்ள வேண்டும். (பா. 11) இது நான்மணிக் கடிகை. ''தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக், கொள்வர் பயன்தெரிவார்'' என்பது திருக்குறள். இவை இரண்டிலும் கருத்தொற்றுமை காணப்படுகின்றது.

'பொருள் பெறினும் நாடாதி நட்டார் கண் விட்டவினை.' பெரும் பொருள் கிடைப்பதாயினும் நண்பர்களின் பொறுப்பிலே செய்வதற்கு விட்டிருக்கும் தொழிலிலே தலையிடாதே. அதைப்பற்றி ஆராயாதே (பா. 25) என்பது நான்மணிக் கடிகை: ''தேரான் தெளிவும் தெளிந்தான் கண் ஐயுறவும்,

தீரா இடும்பை தரும்'' என்பது திருக்குறள். இவ்விரண் டிலும் ஒத்த கருத்துக்கள் அமைந்திருக்கின்றன.

'எற்றுள்ளும், இன்மையின் இண்னாதது இல்லை'- எதனுள்ளும், வறுமையைப் போலத் துன்பந்தருவது வேறு ஒன்றுமேயில்லை (பா. 30) என்பது நான்மணிக்கடிகை. ''இன்மையின் இன்னாதது யாது எனின் இன்மையின் இன்மையே இன்னாதது'' என்பது திருக்குறள். இவை யிரண்டும் ஒத்த கருத்துடையன.

'முன்னம் முகம்போல முன் உரைப்பது இல்' ஒருவனுடைய உள்ளத்தில் இருப்பதை அவனுடைய முகத்தைப்போல முதலில் தெரிவிப்பது வேறொன்றும் இல்லை (பா. 46) என்பது நான்மணிக் கடிகை. ''அடுத்தது காட்டும் பளிங்கு போல் நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம்'' என்பது திருக்குறள். இவை இரண்டும் ஒரே கருத்துடையன.

சுருக்குச் செல்லா இடத்துச் சினம்-தன் சினம் செல்லாத இடத்திலே அச்சினத்தைச் செல்லாமல் சுருக்கிக் கொள்ளுக; என்பது நான்மணிக் கடிகை. (பா. 87) தன்னைக் காட்டினும் வலியாரைச் சினந்து கொள்வதால் தனக்குத்தான் தீமை யுண்டாகும். தன்னை விட வலியாரிடம் தன் சினம் செல் லாது. ஆதலால் அச்சினத்தை அடக்கிக் கொள்ளுவதே அறிவுடைமையாகும். இக்கருத்து, ''செல் இடத்துக் கார்ப்பான் சினம் காப்பான் அல் இடத்துக் காக்கின் என் காவாக்கால் என்?'' என்ற திருக்குறளிலே அமைந் திருப்பதைக் காணலாம்.

திருக்குறளின் கருத்தைக் கொண்ட இவை போன்ற பல பாடல்கள் நான்மணிக் கடிகையிலே அமைந்திருக்கின்றன. நான்மணிக் கடிகையைப் படிப்போர் அவற்றைக் காணலாம். இந்நூல் தமிழரின் பண்பாட்டை விளக்கும் சிறந்த நூலாகும். அறநெறியிலே நடந்து கொள்ளும்படி அறிவுறுத்தும் அழகான வெண்பாக்களைக் கொண்ட அருமையான நூல்,

# 14. சிறு பஞ்சமூலம்

சிறு பஞ்சமூலம் என்பது ஒரு மருந்தின் பெயர். மூலம் —வேர். சிறிய ஐந்து வேர்கள் என்பதே சிறு பஞ்சமூலம் என்பதன் பொருள்.

கண்டங்கத்திரி வேர், சிறுவழுதுணை வேர், சிறு மல்லி வேர், பெருமல்லி வேர், நெருஞ்சி வேர் இவைகளே சிறு பஞ்ச மூலம். இந்த ஐந்து வேர்களும் மருந்துப் பண்டங்கள். இவற்றால் உடல் நோய்கள் பலவற்றைப் போக்க முடியும்.

இந்நூலில் உள்ள ஒவ்வொரு பாட்டிலும் ஐந்து ஐந்து பொருள்கள் கூறப்படுகின்றன. அந்த ஐந்து வேர்களும் உடல் நோயை ஒழிக்கும்; உடம்பை நன்றாக வைந்திருக்க உதவி செய்யும். இந்நூலில் ஒவ்வொரு வெண்பாவிலும் சொல்லப் படும் ஐந்து பொருள்களும் மக்களின் மனப் பிணியை மாய்க்கும்; உள்ளத்தைப் பரிசுத்தமாக வைத்துப் பாது காக்கும். இந்தக் கருத்தில் தான் இந் நூலுக்குச் சிறு பஞ்ச மூலம் என்று பெயர் வைக்கப்பட்டது.

சிறு பஞ்சமூலம் - சிறுமை, பஞ்சம், மூலம் என்ற மூன்று மொழிகளைக் கொண்டது. இந்த மூன்று சொற்களில் சிறுமை என்னும் ஒரு சொல்தான் தமிழ்ச் சொல். பஞ்சம், மூலம் என்னும் இரண்டு சொற்களும் வடசொற்கள். நூலின் பெயரி லேயே ஒருபாகம் தமிழ்ச் சொல்லாகவும், இரண்டு பாகம் வட சொல்லாகவும் அமைந்திருப்பது உற்று நோக்கத் தக்கது.

இதைக் கொண்டு இந்நூலாசிரியர் வடமொழிப் பயிற்சியுள்ள வர், வடநூல்களின் பொருள்களையும் இந்நூலிலே கூறி யிருக்கின்றார் என்று எண்ணலாம். இதில் தவறில்லை.

சிறுபஞ்ச மூலத்தின் ஆசிரியர் காரியாசான்; இவ ருடைய ஆசிரியர் மாக்காயனார். ஆதலால் இந்நூலாசிரியர் பெயரை மாக்காயனார் மாணாக்கன் காரியாசான் என்று அழைப்பர்.

இந்நூலிலே இன்று 97 வெண்பாக்கள் தாம் இருக்கின் றன. முதலில் கடவுள் வாழ்த்துப் பாடல் ஒன்று. இறுதியில் பாயிரப் பாடல் ஒன்று. இரண்டையும் சேர்த்துக்கொண் டால் 99 வெண்பாக்கள்.

நூலின் பாடல்கள் மிகவும் எளியவை, இனியவை என்று சொல்லிவிட முடியாது. மிகவும் கரடு முரடானவை என்று கூறிவிடவும் முடியாது. நடுத்தரமானவை. நூலின் பெயரில் மூன்றில் இரண்டு சொல் வடமொழியாக இருந்தா லும், நூலில் உள்ள வெண்பாக்களில் வடசொற்கள் அதிகம் இல்லை. இது இவ்வாசிரியரின் தமிழ்ப் புலமையின் சிறப் பைக் காட்டுவது.

### சிறந்த பாடல்கள்

சிறுபஞ்ச மூலத்திலே பல சிறந்த கருத்துள்ள பாடல் களைக் காணலாம். மக்களுக்கு அழகைத் தருவன இன்னின் னவை என்று இரண்டு வெண்பாக்களிலே கூறப்படுகின்றன. அழகைப்பற்றிக் கூறும் அவ்வெண்பாக்கள் மிகவும் அழகா கவே அமைந்திருக்கின்றன.

> கண்வனப்புக் கண்ணோட்டம்; கால்வனப்புச் செல்லாமை;
> எண்வனப்பு இத்துணையாம் என்றுரைத்தல்;—பண்வனப்புக்
> கேட்டார் நன்றுஎன்றல்; கிளர்வேந்தன் தன்நாடு
> வாட்டான் நன்றுஎன்றல் வனப்பு (பா. 9)

கண்ணுக்கு அழகு கண்ணாடி அன்று ; அல்லது மை தீட்டிக் கொள்வது அன்று ; துன்பப்படும் மக்களிடம் இரக்கங்காட்டு வதே கண்ணுக்கு அழகு. மதியாதார் தலைவாசலை மிதிப்ப தற்குச் செல்லாமைதான் காலுக்கு அழகு ; இத்துணை என்று தவறாமல் கணக்கிட்டுக் கூறுதலே கணக்குக்கு அழகாகும் ; கேட்பவர்கள், நன்று ! நன்று ! என்று சொல்லிச் சுவைக்கும் படி பாடுவதுதான் பாட்டுக்கு அழகாகும் ; அரசனுக்கு அழகு தனது நாட்டு மக்களைத் துன்புறுத்த மாட்டான் என்று சொல்லப்படுவதாகும்.

மயிர்வனப்பும், கண்கவரும் மார்பின் வனப்பும்,
உகிர்வனப்பும், காதின்வனப்பும், செயிர் தீர்ந்த
பல்லின்வனப்பும் வனப்பல்ல; நூற்குஇயைந்த
சொல்லின்வனப்பே வனப்பு (பா. 37)

தலைமயிரை அழகு செய்துகொள்வது வனப்பன்று ; பார்ப் போர் உள்ளத்தைக் கவரும்படியான அகன்ற எடுப்பான மார்பும் அழகன்று ; சொத்தையில்லாமல் — அழகாக — உருண்டு திரண்டிருக்கும் நகமும் வனப்பன்று ; காதின் அழகும் அழகன்று ; சிறிதும் பழுது சொல்ல முடியாமல் முத்துப்போல் வரிசையாக அமைந்திருக்கும் பல்லும் அழ கன்று ; தான் படித்திருக்கும் நூல்களுக்குத் தகுந்தவாறு, அவைகளின் கருத்துக்களைக் கேட்போர்க்கு விளங்கும்படி எடுத்துரைக்கும் சொல்லின் அழகே அழகாகும். (பா. 37) இவை இரண்டு வெண்பாக்களும் மக்களுக்கு அழகைத் தரு வன இவையிவை யென்று தெளிவாகத் தெரிவிக்கின்றன.

**ஆள்வோர் கடமை**

அரசாள்வோர் கடமையைப் பற்றிப் பல பாடல்களிலே கூறப்படுகின்றன. அவற்றுள் ஒரு சிறந்த வெண்பா கீழ் வருவது.

வார்சான்ற கூந்தல் ! வரம்புஉயர; வைகலும்
நீர்சான்று உயரவே நெல்உயரும்;—சீர்சான்ற
தாவாக் குடிஉயரத் தாங்கரும்சீர்க் கோஉயரும் ;
ஓவாது உரைக்கும் உலகு. (பா. 46)

நீண்ட கூந்தலை யுடைய பெண்ணே ! நிலத்திலே நீர் தங்கும்படி கரை உயர்ந்திருக்கவேண்டும் ; கரை உயரமா யிருந்தால்தான் நிலத்திலே தண்ணீர் தங்கி நிற்கும் ; தண் ணீர் தேங்கி நின்றால்தான் பயிர் செய்யப்படும். நெற்பயிர் ஓங்கி வளரும்; நெற்பயிர் ஓங்கி வளர்ந்தால்தான் குடிமக்கள் உணவுப் பஞ்சமின்றிச் செல்வங்கள் எல்லாம் பெற்று உயர்ந்து வாழ்வார்கள்; குடிமக்கள் உயர்வாக வாழ்ந்தால்தான் அரசன் உயர்வாக வாழ்வான். (அரசாட்சி சிறப்படையும்).

நாட்டிலே உணவுப் பொருள் உற்பத்தி பெருகுவதற் கான முயற்சியிலேயே அரசாங்கம் முதலிலே ஈடுபட வேண் டும். அப்பொழுதுதான் பஞ்சம் தலைகாட்டாது; நாட்டில் அமைதி நிலைக்கும் ; மக்களிடம் ஒற்றுமைக் குறைவும், ஒழுக்கக் கேடும் தோன்ற மாட்டா ; மக்கள் அனைவரும் மகிழ்ந்து வாழ்வார்கள். இது எக்காலத்திலும் எந்த அர சாங்கமும் கண்ணும் கருத்துமாகச் செய்யவேண்டிய கடமை யாகும்.

### தேசத் தொண்டு

மழை குறைந்த நாடுகளில் மரம் வளர்க்கவேண்டும் என்னும் கிளர்ச்சி இன்று வலுத்து வருகின்றது. இருக்கும் காடுகளை அழித்துவிடக்கூடாது ; அவைகளைப் பாதுகாக்க வேண்டும் ; நாடெங்கும் புதிய மரங்களை வளர்க்க வேண் டும் என்ற உணர்ச்சி எல்லா நாடுகளிலும் தலையெடுத்திருக் கின்றது. பண்டைய இலக்கியங்களிலே செடி நட்டு மரம் வளர்ப்பதை ஒரு கடமையாகக் கூறியிருக்கின்றனர். திரு மணச் சடங்கில், இறுதியில் மரம் நடுவதையும் ஒரு சடங்காக

வைத்திருக்கின்றனர்; கல்யாணத்திலே அரசாணிக்காலாக இருந்த ஒதிய மரத்தை நட்டுப் பயிர் செய்வது வழக்கம். ஒவ்வொரு மனிதனும் தன் ஆயுள் காலத்திலே பால் தரும் ஐந்து மரங்களையாவது நட்டுப் பயிர் செய்யவேண்டும் என்பதை முன்னோர்கள் ஒரு கடமையாகக் கொண்டிருந்தனர். நாட்டிலே மழை வளம் குறையாமலிருப்பதற்கே இந்த ஏற்பாடு.

நாடு நன்றாக வாழ—நாட்டிலே நீர்வளம் குறையாமலிருக்க—உணவுப் பொருள் உற்பத்தி பெருக—என்னென்ன காரியங்கள் செய்யவேண்டும் என்பதைச் சிறு பஞ்சமூல ஆசிரியர் தெளிவாகக் கூறியிருக்கின்றார்.

> குளம்தொட்டுக் கோடு பதித்து வழிசீத்து,
> உளம்தொட்டு உழுவயல் ஆக்கி—வளம்தொட்டுப்,
> பாகுபடும் கிணற்றோடு, என்றுஇவ் ஐம்பால் படுத்தான்
> ஏகும் சுவர்க்கத்து இனிது. (பா. 66)

தண்ணீர்த் தட்டு ஏற்படாமல் இருப்பதற்காகப் பெரிய ஆழமான குளம் தோண்டவேண்டும்; தளிர்த்து வளரக்கூடிய மரக்கிளைகளை நிலத்திலே நட்டு நீர்விட்டு வளர்க்க வேண்டும்; மக்கள் நடப்பதற்கான வழிகளை முட்புதர்களோ மேடு பள்ளங்களோ இல்லாமல் நன்றாகச் செப்பனிட்டு வைக்க வேண்டும்; தரிசு நிலத்தை வெட்டிப் பண்படுத்தி உழுது பயிர் செய்யத்தக்க நன்செய் நிலமாக்குவதோடு நன்றாக விளையும்படி செழிப்புள்ள நிலமாக்க வேண்டும்; சுற்றிலும் கரை கட்டப்பட்ட கிணறுகளையும் தோண்ட வேண்டும். இந்த ஐந்து பகுதிகளையும் செய்தவனே இனிய சுவர்க்கத்தை அடைவான்.

இவ்வெண்பாவிலே சொல்லி யிருக்கும் ஐந்து செய்திகளும் என்றும் போற்றத்தக்கவை. இதைப் பின்பற்றி நடக்கும் நாட்டிலே பஞ்சம் ஏற்படாது.

**நாய்கள்**

இவ்வாசிரியர் ஒழுக்கமற்றவர்களின் மேல் காய்ந்து விழுகிறார். ஒழுக்கமற்றவன் மனிதனே அல்லன்; அவனும் சரி; நாயும் சரி; என்பதே இவர் கொள்கை.

நாண்இலன் நாய், நன்கு நள்ளாதவன் நாய், பெரியார்ப்
பேணிலன் நாய், பிறர் சேவகன் நாய்—ஏண் இல்
பொருந்திய பூண்முலையார் சேரிகைத்து இல்லான்
பருத்தி பகர்வுழி நாய். (பா. 88)

வெட்கங்கெட்டவன் நாய்; பிறரோடு நன்றாக நட்புக் கொள்ளாதவன் நாய்; பெரியார்களைப் பாது காக்காதவன் நாய்; பிறருடைய பணியாளனாய் இருந்து வயிறு வளர்க்கின்றவன் நாய்; அழகற்ற ஆபரணங்களை அணிந்த பரத்தையர் சேரியிலே பணமில்லாமல் திரிகின்றவன் பருத்தி விற்பனை செய்யும் இடத்திலே அலைந்து கொண்டிருக்கும் நாய்.

ஒழுக்கமற்றவனை நாயைப் போன்றவன் என்று கூடச் சொல்லவில்லை இவ்வாசிரியர்; நாய்தான் என்று உருவகமாகவே உரைத்துவிட்டார். இதனால் ஒழுக்கத்தை உயிரினும் சிறந்ததாக மதிக்கிறார் இவ்வாசிரியர் என்பதைக் காணலாம்.

**மனைவியின் கடமை**

இல்லாளின் கடமையைப் பற்றி இவ்வாசிரியர் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது. குடும்பத்தை நடத்தும் பொறுப்பு முழுவதும் பெண்களைச் சேர்ந்தது என்ற கருத்தையே இவர் வலியுறுத்துகிறார்.

வருவாய்க்குத் தக்க வழக்கு அறிந்து, சுற்றம்
வெருவாமை வீழ்ந்து, விருந்து ஓம்பித்—திரு ஆக்கும்
தெய்வதையும் எஞ்ஞான்றும் தேற்ற வழிபாடு
செய்வதே, பெண்டிர்சிறப்பு. (பா. 43)

தன் கணவனுடைய வருமானத்தின் அளவைத் தெரிந்து கொள்ள வேண்டும்; அந்த வருமானத்திற்குத் தகுந்த அளவிலே செலவு செய்யவேண்டும்; சுற்றத்தார்கள் மேல் சீறி விழாமல் அவர்களை அன்புடன் ஆதரிக்க வேண்டும்; விருந்தினர்களை உபசரிக்க வேண்டும்; செல்வத்தைக் கொடுக்கும் தெய்வத்தை எந்நாளும் வணங்கவேண்டும். இவைகளே பெண்களின் சிறப்பாகும்.

பெண்கள் படித்திருக்கவேண்டும் என்னும் கருத்தும் இவ் வெண்பாவில் அடக்கம். பெண்களுக்குப் படிப்பில்லா விட்டால், கணவன் வருவாய்க்குத் தக்கவாறு செலவு செய்யும் கணக்கு அவர்களுக்கு எப்படித் தெரியும்? இச் செய்யுள் செல்வம் கொடுக்கும் தெய்வத்தை வணங்கச் சொல்லுகிறது; வள்ளுவர் கணவனையே தெய்வமாக வணங்கச் சொல்லு கிறார். இது குறிப்பிடத்தக்கது.

**சிறந்த கருத்துக்கள் சில**

இன்னும் பல சிறந்த கருத்துக்கள் இந்நூலிலே உண்டு. அவைகளில் சிலவற்றைக் காண்போம்.

நன்றாகத் தமிழ்மொழியைப் படிக்காதவன்—தமிழ் இலக்கிய இலக்கணங்களிலே தேர்ச்சி பெறாதவன்—கவிகள் எழுதுவானாயின் அது சிரிப்புக்கிடமாகும். அச் செய்யுளிலே இனிய சொற்களோ, அரிய பொருளோ அமைந்திருக்க முடியாது. ஆதலால் அப்பாடலைப் படிப்போர் இதுவும் பாட்டுத்தானா? என்று எண்ணி நகைப்பார்கள்.

செந்தமிழ் தேற்றான் கவிசெயலும்
நாவகமே நாடின், நகை. (பா. 12)

செந்தமிழ் நூல்களைக் கல்லாதவன் கவி இயற்றுவதை நாவிலே வைத்து ஆராய்ந்தால் சிரிப்புக்கு இடமாகும்.

தங்கள் பழம் பெருமையைப் பற்றிப் பிதற்றுகின்ற வர்கள், தங்கள் அழகைத் தாமே வியந்துகொள்ளுகின்ற

வர்கள் இவ்விருவரும் இரண்டு கால்களைக் கொண்ட எருது களாகும்.

> துன்பம் இலேம் பண்டு, யாமே வனப்புடையேம்
> என்பார் இருகால் எருது (பா. 20)

முன்பு துன்பமில்லாமல் இன்பமாக வாழ்ந்தோம், நாங்கள் தாம் அழகிலே சிறந்தவர்கள் என்று சொல்லிக்கொள்ளுவோர் இரண்டுகால் எருதுகள்.

உழவுத் தொழில் செய்கின்றவன், தன் கீழ் வேலை பார்க்கும் உழவனுடன் ஒற்றுமையாக இருக்கவேண்டும். அவனுடன் பகைத்துக்கொள்ளக் கூடாது; பகைத்துக் கொண்டால் விவசாயம் பாழ்படும், வருமானம் குறையும் என்று அறிவுரை கூறுகின்றது இந்நூல்.

> தொழில்மகன் தன்னோடு மாறாயின் என்றும்
> உழுமகற்குக் கேடு என்று உரை. (பா. 50)

வேலை செய்யும் தொழிலாளியுடன் பகைத்துக்கொண்டால் அதனால் தொழிலாளிக்குக் கெடுதியில்லை. உழுவிப்போ னாகிய நிலக்காரனுக்குத் தான் கெடுதி என்று தெரிந்து கொள். நிலச் சொந்தக்காரர்கள் இந்த உண்மையை உணர்ந் திருப்பார்களாயின் உற்பத்தி குறையாது; விவசாயிகளும், நிலக்காரர்களும் இன்புற்று வாழ்வார்கள்.

சென்னை போன்ற நகரங்களிலே ஒரு அதிசயத்தைக் காணலாம். பால் கறப்பவர்கள் தங்கள் தோளிலே தோலால் செய்த கன்றுக்குட்டியைச் சுமந்துகொண்டு வருவார்கள். அவர்கள் பின்னே மாடு வந்துகொண்டிருக்கும். பின்னே வரும் மாடு, பால்காரனுடைய தோளிலேயுள்ள வைக்கோல் திணிக்கப்பட்ட அந்த கன்றைத் தன் கன்றாகவே நினைத்துக் கொண்டு வரும். கன்று உயிரோடிருந்தால், பால் வீணாகும் என்பதற்காகவே, பால்காரர்கள் இப்படிச் செய்கின்றனர். காசுக்கு ஆசைப்பட்டுக் கன்றைக் கொன்று விடுகின்றனர்,

இந்த மாபாதகச் செயல் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே தமிழ் நாட்டில் இருந்ததென்று இந் நூலால் தெரிகின்றது. தோல்கன்று காட்டிக் கறவார் (பா. 84) என்பதனால் இதனைக் காணலாம்.

**நம்பிக்கைகள்**

கடவுளால் சொல்லப்பட்ட நூல்கள் முதல் நூல்கள்; அந் நூல்களில் கூறப்படும் அறங்களைப் பின்பற்றி நடப்பவனே தவசியாவான். (பா. 8)

ஒருவர்க்காகப் பரிந்து பொய்ச்சாட்சி சொல்லுகின்றவர்களுடைய நாக்கு அறுந்துவிடும். ஆதலால் பொய்ச் சான்று கூறுதல் தீமை. (பா. 10)

பெண் இன்பத்தை விரும்பாத பிரமச்சாரியே சிறந்த ஆசிரியன் ஆவான். (பா. 29)

தவம் புரிவதால் சுவர்க்கம் பெறலாம்; ஞானத்தால் வீடு பெறலாம். (பா. 36)

நாள், முகூர்த்தம், கிரகம், யோகம் இவைகளைப் பார்த்து, இவைகளின் பலனையும், அறிந்து, திருமணம் முதலிய நல்ல காரியங்களைச் செய்யவேண்டும். (பா. 44)

குடிப்பதற்கு நீர், தங்குவதற்கு நிழல், இருப்பதற்கு இடம், உண்பதற்கு உணவு, ஆகியவைகளைக் கொடுப்போரும், அன்னசாலை அமைப்போரும் பேரின்பத்தை அடைவார்கள். (பா. 63)

முன் பிறப்பிலே, மற்றவர்களுடைய தலைநோய், பைத்தியம், வாய்ப்புற்று, க்ஷயநோய், மூலநோய் இவைகளைத் தீர்த்தவர்களே இப்பிறப்பில் நோயற்ற வாழ்வு வாழ்வார்கள். (பா. 76)

பஞ்சகாலத்தில் பிறர்க்குப் பகுத்துக் கொடுத்துத் தானும் உண்பவன்; தன் செல்வத்தால் பிறர்க்கு உதவி செய்கின்ற

வன்; போர்க்களத்திலே அஞ்சாமல் நின்று, பகைவர்களை அழித்துத் தன் படையைக் காப்பவன்; ஒவ்வொரு நாளும் பிறருக்கு உணவிட்ட பின்பே தான் உண்பவன்; பசியால் வாடும் குழந்தைகளுக்கு உணவளிப்பவன்; இந்த ஐவரும் எண்பது வயதுக்கு மேலும் உயிர் வாழ்வார்கள். (பா. 79)

இவை போன்ற இன்னும் பல கருத்துக்கள் இந் நூலிலே காணப்படுகின்றன. திருக்குறளின் கருத்துக்கள் பலவற்றை இந்நூல் வெண்பாக்களிலே பார்க்கலாம். சிறு பஞ்சமூலம் முழுவதையும் படிப்போர் அவற்றைக் காணலாம்.

புலால் உண்ணாமையைப் பற்றிப் பல பாடல்களில் கூறப்படுகின்றது. புலால் உண்ணாதவர்கள்தாம் சுவர்க்கம் பெறுவார்கள், மோட்சம் பெறுவார்கள் என்று கூறுகின்றன.

கொலை செய்வது கூடாது, கள்ளுண்டல் தீது, பொய் புகலக்கூடாது; சூதாடுவதால் கெடுதியுண்டாகும் என்ற நீதிகள் பல பாடல்களிலே காணப்படுகின்றன.

வேசையர் நட்பை வெறுக்கவேண்டும்; பிறர் மனைவியை விரும்புதல் கூடாது; பெண்கள் கற்புள்ளவர் களாய் வாழவேண்டும். இந்த அறங்களையும் பல பாடல் களிலே காணலாம்.

துறவிகள் ஒழுக்கமுடன் நடந்து கொள்ள வேண்டும்; ஞான நெறியைப் பின்பற்றி நடக்கவேண்டும்; சடைமுடி போன்ற வெளி வேடத்தால் பயன் இல்லை; பிறர் வசை கூறினாலும் பொறுத்துக் கொள்ளும் பொறுமைக் குணம் வேண்டும்; துறவற நெறியைப் பின்பற்றி நடக்க முடியாத வர்கள் துறவறம் பூணுவதை விட இல்லறத்தில் வாழ்வதே ஏற்றதாகும்.

**சிறு பஞ்சமூலச் சிறப்பு**

நான்கு வரிகள் கொண்ட பாடலிலே ஐந்து பொருள்களை அமைத்துப் பாடுவதற்கு ஆற்றலும் புலமையும் வேண்டும். இவ்வகையில் நூறு பாடல்களைப் பாடிய இவ்வாசிரியர் திறம் போற்றத்தக்கது. இவ்வாசிரியர் பெருமையையும், இந்நூலின் சிறப்பையும் பாராட்டிக் கூறும் பாயிரச் செய்யுள் ஒன்று இந் நூலின் இறுதியிலே அமைந்திருக்கின்றது.

மல் இவர்தோள் மாக்காயன் மாணாக்கன் மாநிலத்துப்
பல்லவர் நோய்நீக்கும் பாங்கினால்—கல்லா
மறுபஞ்சம் தீர்மழைக்கை மாக்காரி ஆசான்
சிறுபஞ்ச மூலம் செய்தான்.

வலிமை நிறைந்த தோள்களையுடைய மாக்காயன் என்ப வருவடைய மாணாக்கன்; இம்மாநிலத்திலே உள்ள மக்கள் பலருடைய அறியாமையாகிய நோயை நீக்கும் தன்மையுடை யவன்; பஞ்சத்தை நீக்கும் மழையைப் போல, கைம்மாறு கருதாது உதவி செய்யும் குணமுள்ளவன்; மாக்காரியாசான் என்னும் பெயருள்ளவன்; பல நூல்களைக் கற்காத மக்கள் மனத்திலே உள்ள குற்றங்கள் நீங்கும்படி, சிறு பஞ்சமூலம் என்னும் இந்நூலைச் செய்தான்.

இதுவே இந்நூலின் சிறப்பை உணர்த்துவதற்குப் போது மானதாகும். பழந்தமிழ் மக்களின் சமுதாய நிலையை அறிவ தற்கு இந்நூல் பெருந்துணையாக நிற்கின்றது.

# 15. ஏலாதி

ஏலாதி என்பது ஒரு மருந்தின் பெயர். அந்த மருந்தின் பெயரே இந்த நூலுக்குப் பெயராயிற்று. திரிகடுகம், சிறு பஞ்ச மூலம் என்பவை போன்ற பெயரே ஏலாதி என்னும் பெயரும்.

ஏலம், இலவங்கம், சிறுநாவல்பூ, மிளகு, திப்பிலி, சுக்கு இந்த ஆறும் ஏலாதியாம். இதுவே பண்டை மருத்துவ நூலார் கொள்கை. இந்த ஆறு சரக்குகளையும் சேர்த்துச் செய்த சூரணம் உடல் நோய்க்கு மருந்தாகும். ஏலாதி என்னும் இந் நூலிலே ஒவ்வொரு பாட்டிலும் ஆறு செய்திகள் கூறப்படு கின்றன. இந்த ஆறு செய்திகளையும் அறிந்து பின்பற்றி வாழ்வோர் மன நோயில்லாமல் வாழ்வார்கள். இந்தக் கருத்தில்தான் இந்நூலுக்கு ஏலாதி என்று பெயர் வைத்தனர்.

இந்நூலாசிரியர் பெயர் கணிமேதையார் என்பது. கணி மேதாவியார் என்றும் வழங்குவர். இப்பெயர் காரணப் பெய ராகவே காணப்படுகின்றது. கணியாகிய மேதையார் என்று பொருள்கொண்டால் கணக்கிடுகின்றவராகிய பேரறிவு படைத்தவர் என்பது பொருள். கணக்கிலே வல்லவர். தமிழி லும் பேரறிவு படைத்தவர் இவ்வாசிரியர்.

ஏலாதியில் உள்ள வெண்பாக்கள் எண்பது. சிறப்புப் பாயிரம், கடவுள் வாழ்த்து வெண்பாக்கள் இரண்டும் ஆக 82 வெண்பாக்கள் இருக்கின்றன.

ஏலாதியின் பாடல்கள் படிப்பதற்குக் கொஞ்சம் கடபுடா வென்றுதான் இருக்கும். செய்திகளையும் சொற்களையும் எண்ணி எண்ணி எடுத்துக் கோத்திருப்பது போலவே காணப்படும். சில பாடல்களுக்கு மிகவும் முயன்றுதான் பொருள்காண வேண்டும். ஒவ்வொரு வெண்பாவிலும் ஆறு செய்திகளைச் சொல்லவேண்டும் என்னும் எண்ணத்துடன் பாடப்பட்ட பாடல்கள் இவை. ஆதலால் சரளமாகப் பாட முடியவில்லை. மிகவும் முயன்றுதான் இந்நூலாசிரியர் இவ் வெண்பாக்களைப் பாடியிருக்கின்றார். ஆயினும் சில பாடல்கள் சரளமாக அமைந்திருக்கின்றன. அவை இந்நூலா சிரியரின் ஆற்றலுக்கு அடையாளமாகும். நாலு வரிகளிலே ஆறு பொருள்களைக் கூறுவதற்குச் சிறந்த அறிவும் ஆற்ற லும் வேண்டும்.

ஏலாதியில் கூறப்படும் சில செய்திகள் இக்காலத்திற்கு ஏலாதன. வடமொழி நூல் வழக்குகள் பலவற்றை இவ் வாசிரியர் குறிப்பிட்டிருக்கின்றார். பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலே வட சொற்கள் மிகுதியாகக் கலந்திருக்கும் நூல் இது ஒன்றுதான். சொல்லியவற்றையே பல பாடல்களில் திரும்பத் திரும்பச் சொல்லப்படுகின்றன; அவை நீதியை வலியுறுத்துவதற்காகக் கூறப்படுகின்றன என்று சொல்லப் படலாம்; ஆயினும் படிப்போர்க்கு அலுப்புத் தட்டாமற் போகாது. போற்றத்தக்க பல உண்மைகளும் இந்நூலிலே காணப்படுகின்றன.

**போற்றத்தக்க பாடல்கள்**

ஒரு நாட்டின் பிரதிநிதியாக மற்றொரு நாட்டிலே சென்று அவ் வரசாங்கத்துடன் தொடர்பு கொண்டிருப்பவர் அரசாங் கத்தின் தூதர். ஒரு நாட்டின் பிரதிநிதியாகச் சென்று மற்றொரு அரசாங்கத்துடன் பேசுவோரும் தூதராவார். இத் தகைய தூதர்களுக்கு வேண்டிய தகுதிகளைப்பற்றி ஒரு வெண்பாவிலே கூறப்படுகின்றது.

மாண்டு அமைந்து ஆராய்ந்த மதி, வனப்பே, வன்கண்மை
ஆண்டு அமைந்த கல்வியே, சொல்லாற்றல்,—பூண்டு அமைந்த
காலம் அறிதல், கருதுங்கால் தூதுவர்க்கு
ஞாலம் அறிந்த புகழ்.

ஒழுக்கத்திலே சிறந்து, நூலறிவு பெற்று, தன் நாட்டு நிலைமையையும் அந்நிய நாட்டு நிலைமையையும் ஆராயத் தக்க அறிவு நிறைந்திருக்க வேண்டும்.

பார்த்தவர்கள் உள்ளத்தைக் கவரத்தக்க—மற்றவர்கள் கண்டவுடனேயே மதிக்கத்தக்க — அழகிய தோற்றம் வேண்டும்.

பகைவர்க்குப் பயந்து நடுங்காமல், உண்மையை எடுத்துக்கூறி வழக்கிடத்தக்க அஞ்சாமைக் குணம் அமைந்திருக்க வேண்டும்.

சிறந்த கல்வி—அதாவது பல துறைகளைப் பற்றியும் படித்து—அவைகளைப் பற்றித் தெளிவாகத் தெரிந்து கொண்டிருக்கும் கல்வியும் வேண்டும்.

அன்பர்கள் பகைவர்கள் அனைவர் உள்ளத்தைக் கவரும் படியும், எதிரிகள் பதில் கூறுவதற்கு அஞ்சும் படியும் ஆணித் தரமாகக் காரண காரியங்களை விளக்கிப் பேசும் சொல் வன்மையும் வேண்டும்.

இன்ன காலத்தில் இன்ன காரியத்தைச் செய்தால் வெற்றி பெறலாம், இன்ன சமயத்தில்தான் இன்ன காரியத்தைச் செய்யவேண்டும் என்று துணிந்து காலமறியும் குணம் வேண்டும்.

இத்தகைய ஆறு குணங்களும் அமைந்தவர்களே தூதராவதற்குத் தக்கவர்கள். தூதுவர்க்கு இத் தகுதி இன்றும் ஏற்றனவாயிருப்பதைக் காணலாம். தமிழர்கள் அந்நிய அரசாங்கங்களுடன் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதற்கு இச்செய்யுள் ஒரு உதாரணம்.

மக்கள் அனைவரும் திடமாக வாழவேண்டும்; உடற் பயிற்சி உரம் அளிக்கும்; உரம் உள்ளவர்கள் நோயின்றி வாழ லாம். இக்கருத்தைக் கொண்ட செய்யுள் ஒன்று உடற்பயிற்சி யைப் பற்றி உரைக்கின்றது. எந்தெந்த வகையிலே உடற் பயிற்சி செய்ய வேண்டும் என்றும் அச் செய்யுள் விளக்கிச் சொல்லுகின்றது.

எடுத்தல், முடக்கல், நிமிர்த்தல், நிலையே,
படுத்தலோடு, ஆடல், பகரின்—அடுத்துஉயிர்
ஆறுதொழில் என்று அறைந்தார் உயர்ந்தவர்
வேறு தொழிலாய் விரித்து.

கையை ஊன்றி உடம்பை மேலே தூக்குவதாகிய தண்டால், கை கால்களை முடக்கியிருத்தலாகிய ஆசனம், நிமிர்ந்து நிற்றல், தலைகீழாக நிற்றல், படுத்துச்செய்யும் பயிற்சி, குதித்தல் இவைகள் உடற்பயிற்சிகளாகும். இவைகளின் சிறப்பைக் கூறவேண்டுமானால், பெரியோர்கள் உடம்பில் உயிர் அமைதியோடு வாழ்வதற்கான தொழில்கள் என்று, இவைகளையே வேறு வேறு தொழில்களாகத் தனித்தனியே கூறினார்கள். (பா. 69) இச் செய்யுளைக்கொண்டு தமிழர்கள் நெடுங்காலமாக உடற்பயிற்சி செய்து வந்தனர், அதைச் சிறந்ததாக எண்ணி வந்தனர் என்று தெரிந்து கொள்ளலாம்.

**உதவி பெறுவதற்கு உரியவர்கள்**

இந்நூலிலே இன்னின்னார்க்கு உதவி செய்ய வேண்டும் என்பதைப்பற்றி விரிவாகக் கூறப்படுகின்றது. இதைப் பல பாடல்களிலே காணலாம். தமிழர்களின் இரக்க சிந்தையை இவைகளின் மூலம் அறியலாம். சிறப்பாக, 35, 36, 52, 53, 54, 55, 56, 57, 71, 78, 80 ஆகிய பதினோரு பாடல்கள் உதவி பெறுவதற்கு உரியவர்கள் யாவர் என்பதைத் தெளி வாகக் கூறுகின்றன.

''அநாதைகள், வலிமையற்றவர்கள், சிறுவர்கள், வீடற்றவர்கள், கண் இல்லாதவர்கள், செல்வமற்றவர்கள், உணவுப்பொருள் இல்லாதவர்கள், கடன்பட்டுச் செல்வத்தை யிழந்தவர்கள், கால் முடம் பட்டவர்கள், சம்பாதிக்க முடியாத முதியவர்கள், தம்மைத் தாம் காத்துக்கொள்ளும் வலிமை யற்றவர்கள், பிள்ளை பெறும் பெண்கள், கர்ப்பிணிகள், பித்தர்கள், வாத நோய்க்காரர்கள், விலங்கிடப் பட்டவர்கள், உணவு பெறாமல் திண்டாடுகின்றவர்கள், வழி நடப்போர், சுமை தூக்கிச் செலவோர், நோயாளிகள், தாயற்ற பிள்ளைகள், கணவனை யிழந்த பெண்கள், வியாபாரத்தால் செல்வம் இழந்து வருந்துகிறவர்கள் - இவர்களுக்கெல்லாம் உணவளிக்க வேண்டும்; உதவி செய்ய வேண்டும்; இப்படிச் செய்வதே செல்வாகளின் கடமை'' என்று அப்பாடல்களிலே காணப்படுகின்றன.

**புத்திரர்கள்**

புத்திரர்கள் பன்னிரண்டு வகைப்படுவர் என்று இவ் வாசிரியர் கூறுகின்றார். இது தமிழ் நூல்களில் காணப்படா தது. வடமொழி மிருதிகளில் உள்ள முறையையே இவ் வாசிரியர் எடுத்துக் கூறுகின்றார் என்றுதான் முடிவு செய்ய வேண்டும். 30, 31, ஆகிய இரண்டு வெண்பாக்களில் இந்தப் புத்திரர்கள் பன்னிரண்டு வகையினரின் பெயர்களும் காணப் படுகின்றன. அப்பெயர்கள் எல்லாம் வடமொழிச் சொற்கள்.

ஔரதன், கேத்திரசன், கானீனன், கூடன், கிரீதன், பௌநற்பவன், தத்தன், சகோடன், கிருத்திரமன், புத்திரி புத்திரன், அபவித்தன், உபகிருதன் என்பவைகளே அப் பன்னிரண்டு பெயர்கள்.

கணவனுக்குப் பிறந்தவன் ஔரதன். கணவன் இருக்கும் போது மற்றெருவனுக்குப் பிறந்தவன் கேத்திரன். திருமணம் ஆகாத பெண்ணுக்குப் பிறந்தவன் கானீனன். விபசாரத்திலே பிறந்தவன் கூடன். விலைக்கு வாங்கப்பட்டவன் கிரீதன்,

கணவன் இறந்தபின் மறுமணம் புரிந்துகொண்ட இரண்டாம் கணவனுக்குப் பிறந்தவன் பௌநற்பவன். சுவீகாரம் எடுத்துக்கொள்ளப்பட்டவன் தத்தன். கல்யாணம் செய்து கொள்ளும் போதே கர்ப்பத்திலிருந்து பிறந்தவன் சகோடன். கண்டெடுத்து வளர்க்கப்பட்டவன் கிருத்திரமன். மகள் வயிற்றுப் பிள்ளை புத்திரி புத்திரன். பெற்றவர்களால் கை விடப்பட்டு மற்றவரால் வளர்க்கப்பட்டவன் அபவித்தன். காணிக்கையாக வந்தவன் கிருதன்.

இவர்கள் அனைவரும் புத்திரர்கள் ஆவார்கள் என்று கூறப்பட்டுள்ளது. இச் செய்தி பண்டைக்கால மக்களின் நாகரிகத்தைக் காண இடந்தருகின்றது. மக்கள் தொகை குறைந்திருந்த அக்காலத்திலே, எந்த வகையிலே பிள்ளைகள் பிறந்தாலும், அவைகளைக் குற்றம் என்று கடியவில்லை. புத்திரர்களாகவே ஏற்றுக் கொண்டனர். மக்கள் எண்ணிக்கை வளரவேண்டும் என்பதே அவர்கள் கருத்து.

**விருந்தோம்பல்**

விருந்தோம்பல் தமிழரின் சிறந்த பண்பாடு. விருந்தினர் என்பவர் முன்பின் அறியாத புதியவர்கள். எந் நாட்டினராயினும், எம்மொழியினராயினும் நட்புக் கொள்ளும் நல்லெண்ணத்துடன் வீடுதேடி வருவார்களாயின் அவர்களை வரவேற்பார்கள் தமிழர்கள். விருந்தினரை வரவேற்று உபசரிப்பவர்கள் தாம் மறுமை யின்பத்தைப் பெற முடியும் என்ற நம்பிக்கையும் தமிழரிடம குடிகொண்டிருந்தது. விருந்தினரை எவ்வாறு வரவேற்று உபசரிக்க வேண்டும் என்பதைப் பற்றி ஏலாதியின் செய்யுள் ஒன்று விளக்கிக் கூறுகின்றது.

இன்சொல், அளாவல், இடம், இனிது ஊண் யாவர்க்கும்
வன்சொல் களைந்து வகுப்பானேல்,—மென்சொல்
முருந்து ஏய்க்கும் முட்போல் எயிற்றினாய்! நாளும்
விருந்து ஏற்பர் விண்ணோர் விரைந்து. (பா. 7)

மென்மையான சொல்லையும், மயிற்பீலியின் அடியை ஒத்த கூர்மையும் வெண்மையும் அமைந்த பற்களையும் உடைய

பெண்ணே! விருந்தினராக வருகின்றவர்கள் அனைவரிடமும் இனிய சொற்களையே பேசவேண்டும்; அவர்களுடன் உள்ளம் கலந்து உறவாடவேண்டும்; தங்குவதற்கு வசதியான இடம் கொடுக்கவேண்டும்; ஆடை அணி முதலியவைகளையும் அளிக்கவேண்டும்; இனிய உணவும் இடவேண்டும்; கடுஞ் சொல்லற்ற இனிய மொழிகளையே எந்நாளும் பேச வேண்டும்; இவ்வாறு விருந்தினர்களை உபசரிப்பவனைத் தேவர்கள் தமது விருந்தினனாக ஏற்றுக்கொள்வார்கள்.

இச்செய்யுள் விருந்தினர்க்குச் செய்யவேண்டிய கடமைகள் இன்னின்னவை என்பதை எடுத்துரைத்தது.

கள்ளருந்துவது ஒழுக்கக்கேடான செயல்; புலால் உண்ணுவதைக் கைவிடவேண்டும்; கொல்லா விரதத்தை மேற்கொள்ள வேண்டும்; கொலை செய்வாருடன் கூட்டுறவே கூடாது; இக்கருத்து பல பாடல்களில் காணப்படுகின்றன. பெண்டிர் சொல்வதைப் பின்பற்றக்கூடாது; அவர்களிடம் இரகசியங்களை வெளியிடக்கூடாது என்று உரைக்கின்றது ஒரு செய்யுள்.

பொதுமகளிர்—வேசையர்—பாடும் பாடலைக் கேட்கக் கூடாது; அவர்கள் ஆடும் நாடகத்தையும் பார்க்கக் கூடாது; அவர்கள் பாடி ஆடுகின்ற இடத்தை யடைவோர் பகையைப் பெறுவார்கள்; பழிச்சொல்லை அடைவார்கள்; பாவத்திற்கு ஆளாவார்கள்; மற்றவர்கள் அவர்களை வெறுத்துரைப் பார்கள்; சாக்காட்டுக்கும் ஆளாவார்கள் என்று கூறுகிறது ஒரு செய்யுள்.

திருக்குறளின் கருத்துக்களும் இந்நூலில் பல பாடல் களில் காணப்படுகின்றன. இந் நூலைப் படிப்போர் அவை களைக் கண்டறியலாம். தமிழர் நாகரிகத்தை அறிவதற்கு இந் நூலும் துணை செய்கின்றது.

# 16. ஆசாரக் கோவை

ஆசாரம், கோவை என்னும் இரண்டு சொற்கள் சேர்ந்து ஆசாரக் கோவை என்று ஆயிற்று. ஆசாரம் வட மொழி; கோவை தமிழ்ச் சொல். ஆசாரம் என்றால் பின் பற்றக் கூடியவை; கோவை என்றால் தொகுப்பு. பின்பற்றக் கூடிய ஒழுக்கங்களைத் தொகுத்துக் கூறுவது என்பதே ஆசாரக் கோவை என்பதன் பொருள்.

இன்ன காரியங்களைச் செய், இன்ன காரியங்களைச் செய்யாதே என்று கட்டளையிடும் நூல்களுக்கு வடமொழி யிலே ஸ்மிருதிகள் என்று பெயர். இந்த ஆசாரக் கோவை யும் ஒரு ஸ்மிருதி போலவே காணப்படுகின்றது. இன்னின்ன செயல்கள் செய்யத் தக்கவை, இன்னின்ன செயல்கள் செய்யத்தகாதவை என்று கண்டிப்பாக உத்தரவு போடுவது போலவே பல பாடல்கள் காணப்படுகின்றன.

வடமொழி ஸ்மிருதியில் உள்ள பல கருத்துக்களை இந் நூலிலே காணலாம். இது ஆயிரக்கணக்கான ஆண்டு களுக்கு முன் இயற்றப்பட்ட நூல். ஆதலால் இதில் கூறப் படும் ஒழுக்கங்களிலே சிலவற்றை இக் காலத்தார் பின்பற்ற முடியாமலிருக்கலாம்.

வடமொழியில் உள்ள ஸ்மிருதிகளிலே இன்னின்ன வருணத்தார் இன்னின்ன ஆசாரங்களைப் பின்பற்ற வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த ஆசாரக் கோவையிலே சாதிக்கொரு நீதியென்று பிரித்துக் கூறப்பட

வில்லை. மக்கள் அனைவரும் ஆசாரத்தைப் பின்பற்ற வேண்டும் என்றே பொதுவாகக் கூறப்படுகிறது. இந்த முறையே தமிழுக்குள்ள ஒரு தனிச் சிறப்பு. சாதிக்கொரு நீதி கூறும் முறையைத் தமிழ் நூலார் பின்பற்றவில்லை. பதினெண் கீழ்க்கணக்கைச் சேர்ந்த எல்லா நீதி நூல்களும் பெரும்பாலும் எல்லோர்க்கும் பொதுவான நீதிகளையே கூறு கின்றன; அறங்களையே அறிவிக்கின்றன. ஒரு சில பாடல் களில் மட்டும், அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் கடமைகளைத் தனித்தனியே வலியுறுத்துகின்றன.

ஆசாரக் கோவையை ஒரு பொதுச் சுகாதார நூல் என்றே சொல்லிவிடலாம். எல்லா மக்களும் நோயற்ற வாழ்வு வாழ்வது எப்படி? ஊரும், நாடும், பொது இடங் களும் சுகாதாரக் கேடின்றி இருப்பது எப்படி? என்பவைகளை இந் நூலிலே காணலாம். புறத்திலே தூய்மையுடன் வாழ் வதற்கு வழி கூறுவதோடு மட்டும் நின்று விடவில்லை. அகத் திலே அழுக்கின்றி வாழ்வதற்கும் வழி காட்டுகின்றது இந் நூல். இது இந் நூலுக்குள்ள பெருமை.

இந் நூலாசிரியர் பெயர் பெருவாயின் முள்ளியார் என் பது. இவர் வடமொழியிலும் புலமையுள்ளவர். ஆயினும் இவர் பாடல்களிலே வடமொழிச் சொற்கள் அதிகமாகக் கலக்க வில்லை. வெண்பாக்கள் நீரோட்டம் போலவே சரளமாக அமைந்திருக்கின்றன. இரண்டடி முதல் ஐந்தடி வரையில் உள்ள வெண்பாக்கள் இதில் காணப்படுகின்றன. ஆசாரக் கோவையில் உள்ள வெண்பாக்களின் எண்ணிக்கை நூறு.

## ஆசாரத்திற்கு விதை

மக்களுடைய நல்லொழுக்கங்களுக்கு அடிப்படையான குணங்கள் இவைகள் தாம் என்று முதற் பாட்டிலே கூறப்படு கின்றது. ஆசாரத்திற்கு விதை எட்டுக் குணங்கள்; அவை

களைப் பின்பற்றுவோரே ஒழுக்கந் தவறாமல் வாழ முடியும்; அவைகள் தாம் நல்லொழுக்கத்தை வளர்க்கும் என்று விளம்புகிறது அச்செய்யுள்.

நன்றி அறிதல்; பொறை உடைமை; இன்சொல்லோடு;
இன்னாத எவ்வுயிர்க்கும் செய்யாமை; கல்வியோடு;
ஒப்பரவு ஆற்ற அறிதல்; அறிவுடைமை
நல் இனத்தாரோடு நட்டல்; இவை எட்டும்
சொல்லிய ஆசார வித்து. (பா. 1)

பிறர் தனக்குச் செய்த நன்மையை மறவாமல் இருத்தல்; அறியாமை காரணமாகப் பிறர் செய்யும் துன்பங்களைப் பொறுத்துக் கொள்வது; யாரிடமும் கடுஞ்சொற் கூறாமல் எல்லோரிடமும் இனிமையாகப் பேசுதல்; எந்த உயிர்களுக்கும் அவை வருந்தும்படி தீமை செய்யாதிருத்தல்; சிறந்த கல்வியை மறக்காமல் கற்றல்; உலக நடையை அறிந்து அதைத் தவறாமல் பின்பற்றுவது; எதைப்பற்றியும் தானே சிந்தித்து உண்மை காணும் அறிவுடைமை; கல்வி, அறிவு, நல்லொழுக்கமுள்ள கூட்டத்தாரோடு சேர்ந்து வாழ்தல்; ஆகிய இந்த எட்டுக் குணங்களும் நல்லொழுக்கத்தை வளரச் செய்யும் விதைகளாகும்.

இந்த எட்டுப் பண்புகளையும் பெற்றவர்கள் எந்நாளும் சிறந்து வாழ்வார்கள். இது எக்காலத்திற்கும் ஏற்ற உண்மையாகும்.

### ஒன்றையும் விடவில்லை

காலையில் எழுந்தது முதல் இரவில் படுக்கையில் படுப்பது வரையில் என்னென்ன செய்யவேண்டும் என்று இந் நூல் கட்டளையிடுகிறது. பல் விளக்குவது எப்படி? வெளிக்குப் போவது எப்படி? குளிப்பது எப்படி? உடுத்துவது எப்படி? உண்பது எப்படி? படிப்பது எப்படி? யார் யாருக்கு எவ்வெவ் விதம் மரியாதை காட்டுவது? யார் யாருக்கு உதவி செய்ய

வேண்டும்? யார் யாரிடம் எப்படி எப்படி நடந்து கொள்ள வேண்டும்? படுக்கையிலிருந்து எழும்போது என்ன செய்ய வேண்டும்? படுக்கப் போகும் போதுதான் என்ன செய்ய வேண்டும்? என்பவைகளை யெல்லாம் ஒன்றுவிடாமல் தொகுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது இந்நூலிலே.

இதைப் படிக்கும்போது நமக்கு வியப்புண்டாகும். ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னே வாழ்ந்த மக்கள் பின்பற்றிய ஒழுக்கம் இன்றைய விஞ்ஞான முறையோடு ஒத் திருப்பதைக் கண்டால் யார்தான் வியக்கமாடார்கள்?

''விடியற்காலமாகிய நாலாம் சாமத்திலேயே தூக்கத் திலிருந்து விழித்தெழ வேண்டும்; அதாவது கதிரவன் புறப் படுவதற்கு முன்பே கண் விழிக்கவேண்டும். அன்றைக்குத் தான் செய்யவேண்டிய நல்லறங்களைப் பற்றியும், பொருள் தேடும் முயற்சிக்கான வேலையைப் பற்றியும் சிந்தித்து முடிவு செய்துகொள்ள வேண்டும்; அதாவது இன்றைக்கு இன்னின்ன காரியங்களைச் செய்வது என்று திட்டம் வகுத்துக் கொள்ளவேண்டும். பிறகு தந்தை தாயரை வணங்கித் தன் காரியங்களைப் பார்க்கத் தொடங்க வேண்டும்'' (பா. 4)

இவ்வாறு படுக்கையை விட்டு எழுந்தபின் செய்ய வேண்டியவைகளைப் பற்றி கூறுகிறது.

''படுக்கும்பொழுது தம் வழிபடு தெய்வத்தைக் கைகூப்பி வணங்கவேண்டும்; வடதிசையிலோ, மூலைகளிலோ தலை வைத்துப் படுக்கக்கூடாது; போர்வையால் போர்த்திக் கொண்டு படுக்கவேண்டும்.'' (பா. 30)

இவ்வாறு படுக்கவேண்டிய முறையைப் பற்றிக் கூறு கின்றது. இன்றும் பலர் இம்முறையைப் பின்பற்றி வரு கின்றனர்.

''உண்ணும்போது இனிப்பான பண்டங்களை முதலில் உண்க; கசப்பான கறிகளை இறுதியில் உண்க; ஏனைய சுவையுள்ள பண்டங்களை இடையில் உண்க.''(பா. 25)

என்று சாப்பாட்டைப் பற்றி உத்தரவு போடுகிறது ஒரு செய்யுள்.

காலையிலே எழுந்தவுடன், வீட்டு வேலையை எந்த முறைப்படி செய்யவேண்டும் என்று கட்டளையிடுகிறது ஒரு செய்யுள்.

''காலையிலே துயில் எழ வேண்டும்; வீடு விளங்கும்படி வீட்டைக் கூட்டிச் சுத்தம் பண்ணவேண்டும்; பாத்திரங்களைத் துலக்கவேண்டும்; பசுவின் சிறுநீரைத் தெளித்து வீட்டைப் புனிதமாக்க வேண்டும்; தண்ணீர்ச் சாலுக்கும். குடத்துக்கும் பூச்சூட்ட வேண்டும்; இதன் பிறகுதான் அடுப்பிலே தீ மூட்டிச் சமைக்கத் தொடங்க வேண்டும்; இப்படிச் செய்யும் இல்லங் களில்தான் நன்மை நிறைந்திருக்கும்.'' (பா. 46)

குடித்தனம் பண்ணும் பெண்களுக்கு இவ்வாறு அறிவுறுத்து கிறது இச்செய்யுள்.

''தலையிலே தடவிக்கொண்ட எண்ணெயால் வேறு எவ் வுறுப்பையும் தொடக்கூடாது. பிறர் கட்டிக்கழித்த அழுக்குத் துணியையும் தொடக்கூடாது. எவ்வளவு அவசரமானாலும் பிறர் தரித்த செருப்பை மாட்டிக் கொண்டு நடத்தல் கூடாது.''
(பா. 12)

இவ்வாறு கூறுகிறது ஒரு செய்யுள். சுகாதாரத்தை வலியுறுத்தும் சிறந்த செய்யுள் இது.

தலையிலே தடவிக்கொண்ட எண்ணெயை வழித்து எந்த இடத்தில் தடவிக்கொண்டாலும் சுகாதாரக் கேடு தான். தலையின் அழுக்கும் எண்ணெயுடன் கலந்து உடம்பிலே படியும். பிறர் உடுத்த அழுக்காடையைத் தொடுவதால் அவர்

நோய் நம்மையும் பற்றும். பிறர் செருப்பை மிதித்தால், அவர் காலிலிருந்து அச் செருப்பிலே படிந்திருக்கும் அழுக்கு நமது காலிலும் படியும். இது நோய்க்கு இடமாகும். இக் கருத்துடன் தான் இம் மூன்று செயல்களும் தடுக்கப்பட்டிருக்கின்றன.

நீராடும்போது என்னென்ன காரியங்களைச் செய்யக் கூடாது என்று கட்டளை யிடுகிறது ஒரு செய்யுள்.

> நீராடும் போழ்தில் நெறிப்பட்டார் எஞ்ஞான்றும்
> நீந்தார், உமியார், திளையார், விளையாடார்,
> காய்ந்தது எனினும் தலைஒழிந்து ஆடாரே,
> ஆய்ந்த அறிவி னவர். (பா. 14)

ஒழுக்க நெறியிலே நின்றவர்கள் தினந்தோறும் குளிக்கும் போது, தண்ணீரிலே நீந்த மாட்டார்கள்; நீரை வாயில் கொப்பளித்து உமிய மாட்டார்கள்; நீரைக் கலக்க மாட் டார்கள்; நீரிலே விளையாட மாட்டார்கள்; உடம்புக்குக் காயச்சலா யிருந்தாலும் தலை முழுகாமல் உடம்பு மட்டும் குளிக்க மாட்டார்கள்.

இச் செய்யுள் நகர மக்களுக்குத் தேவையில்லை. பெரும் பாலும் குளத்தில் குளிக்கும் கிராமாந்தர மக்கள் பின்பற்ற வேண்டிய செய்யுளாகும். குளிப்போர் குளிக்கும் நீர் நிலையைத் துய்மையாக வைத்துக்கொள்வது எப்படி என்பதே இச்செய்யுளில் கூறப்பட்டுள்ளது. இதில் ''காய்ந்தது எனினும் தலை ஒழிந்து ஆடாரே'' என்பது மருத்துவ நூலார்க்கு மாறு பட்டதாகும். தலையை நனைத்துக் கொள்ளாமல் உடம்பு மட்டும் குளிக்கலாம் என்பது மருத்துவர் முடிபு. இதை ''கண்ட ஸ்நானம்'' என்பர்.

தம் அழகு கெடாமல் இருக்க வேண்டுவோர் என்ன செய்யவேண்டும் என்று ஒரு செய்யுள் குறிப்பிடுகின்றது.

> மின் ஒளியும், வீழ்மீனும், வேசையர்கள் கோலமும்
> தம் ஒளி வேண்டுவோர் நோக்கார்; பகல் கிழவோன்
> முன் ஒளியும் பின் ஒளியும் அற்று. (பா. 51)

மின்னல் ஒளியைப் பார்க்கக்கூடாது; எரிந்து விழுகின்ற நட்சத்திரத்தைப் பார்க்கக் கூடாது; விலைமாதர்களின் அழகிலே ஈடுபட்டு விடக்கூடாது; இவைகளைப் போலவே காலைக் கதிரவன் ஒளியையும், மாலைக் கதிரவன் ஒளியையும் காணக்கூடாது. தம் உடல் வனப்புக் கெடாமலிருக்க விரும்புவோர் இவ்வாறு செய்வார்கள்.

இன்றும் பல மக்கள் இச்செய்யுளில் கூறியிருப்பதை நம்புகின்றனர். மின்னலைப் பார்த்தால் கண்பார்வை குன்றும்; எரிந்து விழும் நட்சத்திரத்தைப் பார்த்தால் மறதி உண்டாகும்; வேசையர்களின் கோலத்தை உற்று நோக்கினால் மனம் அவர்கள்பால் செல்லும்; காலைக் கதிரையோ மாலைக் கதிரையோ கண்களால் உற்று நோக்கினால் கண்ணொளி குறையும். இவ்வாறு நம்புகின்றனர். ஆகவே இச் செய்யுளில் கூறுவன இன்னும் வழக்கத்தில் இருப்பதைக் காணலாம்.

### ஆசாரத்தைப் பின்பற்றுவோர் யார்?

சோம்பேறிகள் ஆசாரம் உள்ளவர்களாயிருக்க முடியாது. அவர்கள் எக்காரியத்திலும் வெற்றிபெற மாட்டார்கள். அவர்கள் வாழ்க்கையே துன்ப வாழ்க்கையாகத்தான் இருக்கும். முயற்சியுள்ளவர்களே எல்லாவற்றிலும் வெற்றி பெறுவார்கள். வாழ்க்கையிலும் இன்பம் பெறுவார்கள். ஆதலால் ஒவ்வொருவரும் தங்கள் கடமையை உணர வேண்டும். அக்கடமையைத் தவறாமல் ஊக்கத்துடன் செய்ய வேண்டும். இவர்களிடந்தான் ஆசாரம் நிலைத்து நிற்கும். இச்செய்தியை உதாரணத்துடன் உரைக்கின்றது ஒரு வெண்பா.

> நந்தெறும்பு தூக்கணம்புள் காக்கை என்றிவைபோல்
> தம்கருமம் நல்ல கடைப்பிடித்துத்—தம் கருமம்
> அப்பெற்றியாக முயல்பவர்க்கு ஆசாரம்
> எப்பெற்றியானும் படும். (பா. 96)

சுறு சுறுப்புள்ள எறும்பு, தூக்கணங்குருவி, காக்கை என்ற இவைகளைப்போல் ஒவ்வொருவரும் தங்களுடைய நல்ல கடமைகளைப் பின்பற்றி அவைகளைச் சோர்வில்லாமல் செய்யவேண்டும்; தமது கடமைகளை அவ்வாறு செய்பவர் களிடந்தான் எவ்வகையிலும் ஆசாரம் பெருகி நிற்கும்.

ஒவ்வொருவரும் தங்கள் காரியங்களை எறும்பைப் போல் சுறு சுறுப்புடன் முயன்று முடிக்கவேண்டும். தூக்கணங்குருவி, தன் கூட்டைத் திறமையுடன் கட்டும்; கூடுகட்டத் தொடங்கி னால் அரைகுறையாக விட்டுவிடாது; முடித்தே தீரும். காக்கை கூடி வாழும் குணம் உள்ளது; தனித்துண்ணாது; தன் இனத்தையும் கரைந்து அழைத்து ஒன்றுகூடி உண்ணும். இந்த மூன்று பிராணிகளின் பண்பை மக்கள் பின்பற்ற வேண்டும். சுறுசுறுப்பு, தொட்டதை நிறைவேற்றுதல், ஏனை மக்களுடன் இணைந்து வாழ்தல், இந்த முக்குணமும் பொருந்தியவர்களிடமே ஆசாரம் வளரும்.

### ஆசாரத்திற்கு விலக்கானவர்கள்.

யார் யார் ஆசாரத்திற்கு விலக்கானவர்கள்; ஆசாரத் தைப் பின்பற்ற முடியாதவர்கள்; என்று இந்நூலின் இறுதி வெண்பாவில் கூறப்பட்டுள்ளது. ஆசாரத்தைப் பின்பற்ற முடியாதவர்கள் ஒன்பது பேர். அவர்கள்: அந்நிய நாட்டான், வறியவன், மூத்தோன், சிறுவன், உயிர் இழந்தோன், பயந் தவன், அளவுக்குமேல் உண்பவன், அரசாங்க அலுவல் பார்ப்போன், மணமகன், ஆகிய இவர்கள்.

அறியாத தேயத்தான், ஆதுலன், மூத்தான்,
இளையான், உயிர் இழந்தான், அஞ்சினான், உண்பான்,
அரசன் தொழில் தலை வைத்தான், மணாளன் என்று
ஒன்பதின்மர் கண்டீர் உரைக்குங்கால் மெய்யான
ஆசாரம் வீடு பெற்றார். (பா. 100)

இந்த ஒன்பதின்மரும் ஆசாரத்திலிருந்து விடுதலை பெற்ற வர்கள்.

இந்த நாட்டு ஆசாரங்களை அறியாத அந்நிய நாட்டான் இந்த நாட்டு ஆசாரங்களை அறிந்து பின்பற்ற முடியாது.

வறுமையுள்ளவனும் இந்நூலிலே கூறப்பட்டுள்ள ஆசாரங்களைப் பின்பற்ற முடியாது. வயிற்றுப் பிழைப்பிற் காக உழைப்பதற்கே அவனுக்கு நேரம் போதாது.

மறதி, உடல் சோர்வு, சுறுசுறுப்பாக நடந்து காரியம் செய்ய முடியாமை, இவைகள் எல்லாம் வயதேறியவன் இயல்பு. இவைகள் முதுமையின் துணைகள். ஆகையால் முதியவனாலும் ஆசாரத்தைப் பின்பற்ற முடியாது.

ஆசாரம் இன்னது, அநாசாரம் இன்னது என்று பகுத்தறிய முடியாத சிறுவர்களாலும் ஆசாரத்தைப் பின்பற்ற முடியாது.

உயிர்போன பிணத்தினால் எந்த ஆசாரத்தைத் தான் பின்பற்ற முடியும்?

பயந்தாங் கொள்ளியும், ஆசாரத்தைக் கைவிட்டு விடு வான். அவனால் ஒன்றையும் உருப்படியாகச் செய்ய முடியாது.

மிகுதியாகச் சாப்பிடுகின்றவன் எப்பொழுதும் உண்ப திலேயே நாட்டங் கொண்டிருப்பான். உணவு கிடைத்தால் போதும். ஆசாரங்களைப்பற்றி அவனுக்குக் கவலையில்லை.

அரசாங்க வேலையில் ஈடுபட்டிருப்பவனுக்கும் போது மான ஓய்வு கிடக்காது. ஆதலால் அவனாலும் ஆசாரத்தைப் பின்பற்ற முடியாது.

மணமகனாக இருப்பவனும், ஆசாரத்திலே கருத்தைச் செலுத்த முடியாது. மற்றவர்கள் விருப்பப்படி தான் ஆட வேண்டும்,

இவ்வாறு ஒன்பது பேரை ஆசாரத்தைப் பின்பற்ற முடியாதவர்கள்; ஆசாரத்திலிருந்து விடுதலை பெற்றவர்கள்' என்று குறித்திருப்பது மிகவும் பொருத்தமானதாகும்.

இந்த நூலில் கூறப்படும் ஒழுக்கங்களில் ஒரு சில வற்றைத் தவிர மற்றவையெல்லாம் உண்மையானவை; பின் பற்றக்கூடியவை; இதில் ஐயம் இல்லை. ஆனால் இக்காலத் தில் எல்லா மக்களும், ஆசாரக் கோவையில் சொல்லுகிற படியே நடக்க முடியாது. ஓயாது உழைப்பவர்களுக்கு ஆசாரத்தைப் பற்றி நினைக்க நேரம் ஏது? நகரில் வாழ்வோர் பலர்க்கு ஆசாரக் கோவையின் உரைகள் ஒத்து வராமல் இருக்கலாம். ஆயினும், இந்நூலில் உள்ளவைகளிலே பல, விஞ்ஞானத்திற்கு ஒத்து வருவன. இவ்வுண்மையை ஆசாரக் கோவையை ஒருமுறை படித்தாலே உணர்ந்து கொள்ளலாம்.

# 17. பழமொழி

பழமொழி அல்லது பழமொழி நானூறு என்பது இந் நூலின் பெயர். நானூறு பாட்டுக்களைக் கொண்டது. ஒவ்வொரு பாட்டும் ஒரு பழமொழியை வைத்துக் கொண்டு பாடப்பட்டது. எல்லாம் வெண்பாக்களே. ஒவ்வொரு பாட்டின் முடிவும் ஒரு பழமொழியைக் கொண்டு முடிகிறது.

இப் பழமொழிகளிலே பல இக்காலத்தில் விளங்கத் வில்லை; அவைகள் வழக்கிழந்து விட்டன. ஆயினும் பல பழ மொழிகள் இன்றும் வழக்கத்தில் உள்ளவை.

இந்நூலாசிரியர் பெயர் முன்றுறையர் என்பது. இவர் வரலாற்றைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலே மூன்று நூல்கள் சிறந்தனவென்று கருதப்படுகின்றன. அவை முப்பால், நாலடி, பழமொழி என்பன. இம்மூன்றும் மற்ற நூல்களைவிட உருவில் பெரியவை; பாட்டுக்களின் தொகை அதிகம். அறம், பொருள், இன்பம், வீட்டு நெறி இவைகளைப் பற்றி விரி வாகக் கூறுகின்றன. இம்மூன்று நூல்களில் பழமொழியை மூன்றாவதாகக் கூறலாம்.

பழமொழியைப் பற்றி வழங்கும் கதை ஒன்று உண்டு. அது நாலடியாரோடு ஒட்டிய கதை. சமண முனிவர்களின் பாடல்களிலே சிறந்த நானூறு வெண் பாக்களை நாலடியாராகத் தொகுத்தனர். ஏனைய நானூறு வெண்பாக்களைப் பழமொழியாகத் தொகுத்தனர். இவ்

வரலாற்றை நாலடியாரைப் பற்றிக் கூறும் இடத்திலே காண லாம். சிறப்பிலே நாலடியாருக்கு அடுத்தபடி தான் பழமொழி என்பதைக் காட்டுவதற்கே இக்கதை வழங்குகின்றது.

பழமொழிப் பாடல்கள் அனைத்தும் ஒருவரால் பாடப் பட்ட பாடல்கள் போலவே காணப்படுகின்றன. இதன் ஆசிரியர் பெயரும் முன்றுரையர் என்று குறிக்கப்பட்டுள்ளது. ஆதலால் பழமொழி நூலைப்பற்றி வழங்கும் அக்கதை புனைந்துரையே ஆகும்.

இந்நூலின் வெண்பாக்கள் கொஞ்சம் கடினமானவை; பல வெண்பாக்களுக்கு எளிதிலே பொருள் தெரிந்து கொள்ள முடியாது. முயன்றுதான் பொருள் கண்டுபிடிக்க வேண்டும். நாலடியார் வெண்பாக்களைப் போல நயமுள்ளவை அல்ல. ஆகையால் தான் இந்நூல் நாலடியாரைப்போல் அவ்வளவு பெருமை யடையவில்லை.

திருக்குறளில் கூறப்படுவது போலவே சிறந்த பல அறங்கள் இந்நூலிலே கூறப்படுகின்றன. திருக்குறளின் கருத்துக்களும் நிரம்பக் காணப்படுகின்றன. பல பாடல்களிலே கதைகளும் உதாரணமாகக் காட்டப்படுகின்றன. இராமாயணம், பாரதம் முதலிய கதைக்குறிப்புக்களை இந் நூலிலே காணலாம். தமிழ்நாட்டு வரலாறுகள் பலவற்றைக் காணலாம்.

**கதைகள்**

மாபலிச் சக்கரவர்த்தி, அகங்காரத்தால் தன் அரசை யிழந்தான். 'வாமனனுக்கு மூன்றடி மண் கொடுக்காதே; அது உன்னால் முடியாத காரியம்' என்று அவனுடைய குரு தடுத்தும் கேட்கவில்லை; என்னால் ஆகும் என்று அகங்காரம் கொண்டதால் அழிந்து போனான்.

கண்ணனைப் பற்றிய குறிப்பும், பலராமனைப் பற்றிய குறிப்பும் இந்நூலிலே காணப்படுகின்றன.

இந்நூலிலே பாரதக் கதையும் குறிக்கப்பட்டிருக்கின்றது. 'துரியோதனாதியரும், பாண்டவர்களும், சூதாடினார்கள்; தங்கள் தாயபாகத்தையே பணையப் பொருளாக வைத்துச் சூதாடினர்கள். இதன் காரணமாகச் சகோதரர்களான, நூற்றுவரும், ஐவரும்! பகைவர்களாயினர்; போர் செய்தனர். ஆதலால் உறவினருடன் சூதாடக் கூடாது' என்று கூறுகிறது ஒரு செய்யுள்.

பெரியோரைச் சேர்ந்தவர்கள் கட்டாயம் பயன் பெறு வார்கள் இக் கருத்தை விளக்க இராமயணம் வரலாறு குறிப் பிடப்பட்டிருக்கின்றது.

> பொலந்தார் இராமன் துணையாகப் போதந்து
> இலங்கைக் கிழவற்கு இளையான்— இலங்கைக்கே
> போந்து இறை ஆயதூஉம் பெற்றான்; பெரியாரைச்
> சார்ந்து கெழீஇ இலார் இல்

இலங்கைக்குரியவன் இராவணன்; அவன் தம்பி விபீஷணன்; அவன் இராமனே தனக்குத் துணையாவான் என்று எண்ணி அவனிடம் வந்தான். பின்பு இலங்கைகே அந்த இளையவன் மன்னவனாகி விட்டான். ஆகையால் பெரியோரைச் சார்ந்து பயன் பெறாதவர்கள் யாரும் இல்லை.

இச் செய்யுள் இராமயணத்தின் ஒரு பகுதி. இதிலே விபீஷணன் இராமனைச் சேர்ந்ததன் நோக்கம் இன்ன தென்று குறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இத்தகைய கதைக் குறிப்புக்கள் பல பழமொழிப் பரடல்களிலே காணப் படுகின்றன.

### தமிழ் நாட்டு வரலாறுகள்

குலத்தொழில் போதிக்கப்பட வேண்டாம்; தானே வந்து விடும். இதைக் குறிக்கும் பழமொழி 'குலவிச்சை கல்லாமல் பாகம் படும்' என்பது. மீன் குஞ்சுக்கு நீச்சுப் பழக்க

வேண்டுமா? என்பதும் இக்கருத்துள்ள பழமொழி தான். குலவித்தை கல்லரமலே வந்துவிடும் என்பதற்கு உதாரண மாகக் கரிகாற்சோழனுடைய வரலாறு ஒன்று ஒரு வெண் பாவில் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றது.

உரை முடிவு காணான் இளமையோன், என்ற
நரைமுது மக்கள் உவப்ப,—நரை முடித்துச்
சொல்லால் முறைசெய்தான் சோழன், குலவிச்சை
கல்லாமல் பாகம் படும்.

இவன் இளமைப் பருவம் உள்ளவன்; நாம் உரைக்கும் வழக்கைக் கேட்டுச் சரியான முடிவு கூறுவதற்குத் திறமை யற்றவன் என்று நினைத்தனர் நரைத்த முதியவர்கள்; அவர்கள் ''சரியான நீதிதான்'' என்று உவக்கும்படி, நரை முடித்துக்கொண்டு வந்து உட்கார்ந்து அவர்கள் வழக்கைக் கேட்டுத் தீர்ப்புக் கூறினான் சோழன். ஆதலால் தம் குலத் திற்குரிய வித்தைகள், கற்பதற்கு முன்பே நன்றாக வந்து விடும்.

இச்செய்யுளிலே கரிகாற் சோழனுடைய வரலாறு சுட்டப் படுகின்றது. கரிகாற் சோழன் இளம் பருவத்திலே பட்டத் திற்கு வந்துவிட்டான். அக்காலத்தில் ஒரு நிகழ்ச்சி நடந்தது. வயதேறிய இருவர் தங்களுக்குள் மாறுபட்டனர். கரிகால னிடம் வழக்குரைக்க வந்தனர். அவன் இளைஞனா யிருப்ப தைக் கண்டனர். இவனால் நமது வழக்கிலே நீதி காண முடியுமா என்று ஐயுற்றனர். அவர்கள் ஐயத்தை குறிப்பால் அறிந்த கரிகாலன், அந்தப்புரம் சென்றான். நரைத்த, தாடி, மீசை, தலைமயிருடன் திரும்பி வந்தான். அவர்கள் வழக்கைக் கேட்டான். சரியான தீர்ப்பளித்தான். அவர் களும் மகிழ்ந்தனர். பிறகு அவ்வாறு தீர்ப்பளித்தவன் கரிகாலனே என்பது கண்டு வியந்தனர். இவ்வரலாற்றையே இந்நூல் குறித்தது.

கரிகாற் சோழனுடைய மற்றொரு வரலாறும் இந் நூலிலே காணப்படுகின்றது. பகைவர்களின் சூழ்ச்சிக்கு இரையாகாமல் உயிர் தப்பினவர்கள், முயற்சியுடையவர்களா யிருந்தால் தம் காரியத்திலே வெற்றி பெறுவார்கள். இக் கருத்துடைய பழமொழியை விளக்கும் பாடல் அது.

சுடப்பட்டு உயிர் உய்ந்த சோழன் மகனும்,
பிடர்த்தலைப் பேரானைப் பெற்றுக்—கடைத்தலை
செயிர்அறு செங்கோல் செலீஇனான், இல்லை
உயிர் உடையார் எய்தா வினை.

பகைவரால்தான் இருந்த மாளிகை கொளுத்தப்பட்டது; ஆனால் அதில் அகப்பட்டு மாளாமல் உயிர் தப்பினான் கரிகால்சோழன். அவன் தன் முயற்சியினால், தன் மாமனா கிய இரும்பிடர்த் தலையார் என்பவனுடைய துணையைக் கொண்டு, தன் அரசாட்சியைப் பெற்றான்; குற்றமற்ற நெறி யிலே செங்கோல் செலுத்தினான். ஆதலால் உயிருள்ளவர் வெற்றி பெறாத வினையில்லை.

இதுவும் கரிகாற்சோழனுடைய சிறப்பைக் காட்டும் வரலாறு.

சோழ மன்னர்களின் வரலாற்றிலே தூங்கெயில் எறிந்த தொடித்தோள் செம்பியன் என்பவன் பெயர் காணப்படு கின்றது. இவன் வாலாற்றுக் குறிப்பு பழமொழியிலும் காணப்படுகின்றது. அசுரர்களுக்கு ஒரு கோட்டை யிருந்தது. அதன் மதில்கள் மிகவும் அழுத்தமானவை. அக்கோட்டை வானத்தில் உலவுந் தன்மையுள்ளது. அதிலே அசுரர்கள் வாழ்ந்தனர். அவர்கள் தேவர்களைத் துன்புறுத்தி வந்தனர். தேவர்கள் வேண்டுகோளின்படி தொடித்தோள் செம்பியன் அக் கோட்டையை அழித்தான்; தேவர்களைக் காப்பாற்றி னான். இதனால் அவன் தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் என்று பெயர் பெற்றான்.

வீங்கு தோள் செம்பியன் சீற்றம், விறல் விசும்பில்
தூங்கும் எயிலும் தொலைத்தலால்

உயர்ந்த தோள்களையுடைய சோழனது கோபம் வலிமையுடன் வானத்தில் அசைந்து கொண்டிருக்கும் மதில் பொருந்திய கோட்டையைத் தொலைத்தலால் இச் செய்யுட் பகுதி இக்கதையைக் கூறுகின்றது.

மநுநீதிகண்ட சோழன் வரலாறும் இப் பழமொழியில் கூறப்படுகின்றது. குற்றவாளிக்கு மன்னிப்பில்லை. அவன் மீதுள்ள வழக்கிற்குக் காலக்கெடு கிடையாது. குற்றவாளியில்மேல் உள்ள குற்றம் எவ்வளவு காலம் கழித்து வெளிப் பட்டாலும் அவனைத் தண்டிக்கலாம். இதற்கு உதாரணமாகவே மநுநீதிகண்ட சோழன் வரலாறு சொல்லப்படுகிறது. பெரியபுராணத்தில் கூறப்படும் மனுநீதிகண்ட சோழன் வரலாற்றுக்கும் பழமொழியிலே சொல்லப்படும் இவ் வரலாற்றுக்கும் மிகுந்த வேறுபாடு காணப்படுகின்றது.

''மனுநீதிகண்ட சோழன் திருவாரூரிலே அரசாட்சி செய்தவன். அவன் மகன் வீதிவிடங்கன் ஒரு நாள் தேரில் ஏறிக்கொண்டு போனான். அப்போது ஒரு பசுங்கன்று துள்ளி ஓடிவந்து அவனுடைய தேர்ச்சக்கரத்திலே மாட்டிக்கொண்டு மாண்டது. அதைக் கண்ட தாய்ப்பசு துக்கந் தாங்க முடியாமல் அரண்மனை வாயிலை யடைந்தது; ஆராய்ச்சி மணியைக் கொம்பினால் ஆட்டியது. அந்த மணியோசை கேட்ட மன்னவன் வெளியில் வந்தான்; பசுவின் துயரைக் கண்டான்; உடனே மந்திரிகளை அழைத்து உண்மையைத் தெரிந்து கொண்டான். இப் பசுவைப்போலவே நானும் என் மகனை இழந்து வருந்துவேன் என்று முடிவு செய்தான். மந்திரிகள் எவ்வளவு தடுத்தும் கேட்கவில்லை. தன் மகனைக் கிடத்தி அவன்மீது தேரையேற்றிக் கொன்றான்'' இதுதான் பெரிய புராண வரலாறு.

''சோழன் மகன் தன் தேர்ச்சக்கரத்தால் ஒரு பசுங் கன்றைக் கொன்றுவிட்டான். அமைச்சர்களும் மற்றவர்களும் சேர்ந்து இச்செய்தியை அரசனுக்குத் தெரியாமல் மறைத்து விட்டனர். பல்லாண்டுகள் கடந்தபின் எப்படியோ மன்னவ னுக்குத் தெரிந்துவிட்டது. உடனே அவன் தன் மகன்மீது தேர்ச்சக்கரத்தை யேற்றிக் கொன்றான். நீதி செய்வதற்குக் காலக்கெடு இல்லை என்பதை மெய்ப்பிக்கவே இவ்வாறு செய்தான்.'' இதுவே பழமொழியில் கூறப்படும் வரலாறு.

சால மறைத்துஓம்பிச் சான்றவர் கைகரப்பக்
காலை கழிந்ததன் பின்றையும் — மேலைக்
கறவைக் கன்று ஊர்ந்தானைத் தந்தையும் ஊர்ந்தான்
முறைமைக்கு மூப்புஇளமை இல்.

மிகவும் பாதுகாத்து அறிவுள்ள மந்திரிகள் ஒளித்து விட்ட தனால், அதிக நாள் கடந்த பிறகும், முன்பு பசுவின் கன்றின் மேல் தேரைச் செலுத்திக் கொன்ற தன் மகனைத் தந்தையும் தேரை ஓட்டிக் கொன்றான். (ஆகையால்) நீதிக்கு அதிக நாள் குறைந்த நாள் என்ற எல்லையில்லை.

முல்லைக்குத் தேர் கொடுத்தவன் பாரி வள்ளல்; மயிலுக் குப் போர்வை தந்தவன் பேகன் என்னும் வள்ளல்; இவர்கள் சங்க நூல்களில் பாராட்டப்பட்டிருக்கின்றனர். கொடுப்ப தையே கடமையாகக் கொண்டவர்கள். இன்னார்க்கு இன்னது கொடுக்க வேண்டும் என்று எண்ணமாட்டார்கள். ''பாத்திரம் அறிந்து பிச்சையிடு'' என்ற பழமொழியை அவர்கள் பின் பற்றமாட்டார்கள். யார் எது வேண்டுமானாலும் கொடுப் பார்கள். இவர்கள் செயலைக் ''கொடை மடம்'' என்று தமிழ் நூல்கள் கூறுகின்றன.

படர்வதற்கு ஆதரவில்லாமல் தனித்துத் தளர்ந்து கொண்டிருந்த ஒரு முல்லைக்கொடியைக் கண்டான் பாரி வள்ளல். அவன் தேரில் வந்து கொண்டிருக்கும்போது இது

அவன் கண்ணில் பட்டது. உடனே முன்பின் எண்ணாமல் தான் ஏறி வந்த தேரையே அக்கொடி படரும்படி நிறுத்தினான். சிறிது யோசனை செய்திருப்பானாயின், அதற்கு ஒரு கொம்பைத் துணையாக நட்டிருப்பான். உடனே உதவி செய்யவேண்டும் என்ற அவன் கருணையுள்ளம் சிறிதும் காலந் தாழ்த்தவில்லை. ஆதலால் இதைச் செய்வதைத் தவிர அவனுக்கு வேறு வழியில்லை. அவனுடைய கொடை மடமே இவ்வாறு அவனைச் செய்யத் தூண்டியது.

பேகன் என்பவனும், துன்புறுவோர்க்கு உடனே உதவி செய்யவேண்டும் என்னும் கொள்கையுடையவன். அவன் காட்டின் வழியே வரும்போது அங்கே குளிர்காலத்தில் ஆடிக் கொண்டிருந்த ஒரு மயிலைக் கண்டான். அது குளிரால் நடுங்குவதாக நினைத்துக்கொண்டான். மயிலுக்குக் குளிரைத் தாங்கும் வல்லமையுண்டு; குளிர்காலத்தில் மயில் ஆடுவது இயற்கை என்பதை எண்ணிப் பார்க்க அவனுக்கு நேரமில்லை. மயில் குளிரால் நடுங்குகிறதென்று நினைத்த உடனேயே தன்னுடைய போர்வையை எடுத்து அதற்குப் போர்த்தினான். இதுதான் கொடை மடமாகும்.

பாரியும் பேகனும் அறிவுள்ளவர்கள்தாம். ஆனால் அவர்களுடைய கருணை யுள்ளம்—கொடுக்கும் தன்மை—உண்மையை உணரவில்லை. அறியாதவர்களாய் நடந்து கொண்டனர். அத்தகைய அறியாமையும் அவர்களுக்கு ஒரு அழகாக—அணியாக அமைந்து விட்டது.

> முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
> தொல்லை அளித்தாரைக் கேட்டறிதும்;—சொல்லில்
> நெறிமடல் பூந்தாழை நீடுநீர்ச்சேர்ப்ப!
> அறிமடமும் சான்றோர்க்கு அணி.

நெருங்கிய மடல்களையும், பூக்களையும் உடைய தாழைகள் நிறைந்த கடற்கரையின் தலைவனே! முல்லைக் கொடி படர்

வதற்காகத் தான் ஏறிவந்த தேரினையும், குளிர்காலத்திலே மயிலுக்குப்போர்வையையும், முன்பு கொடையாகக் கொடுத்த வர்களைப் பற்றி நாம் கேட்டறிந்திருக்கின்றோம். இதைப் பற்றிச் சொல்லப் போனால் அறிவிலே மடமையும் சான் றோர்க்கு அணியாகும்.

இச்செய்யுள் பாரியின் பெருமையையும், பேகனுடைய பெருமையையும் எடுத்துக்காட்டியது. அவர்கள் செய்கை அறியாமை நிறைந்தது; ஆயினும் அது அவர்களுக்குப் பெருமை அளித்தது. அச்செயல் அவர்களுடைய சிறந்த பண்பின் அடையாளமாகத் திகழ்கின்றது. இவ்வுண்மையை உணர்த்தியது இச்செய்யுள்.

ஒரு செய்யுளிலே, பாரி வள்ளல் மனைவியின் கொடைத் தன்மையைப் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. ''மாரி வறண்டு போன காலத்தில், பாண் மகன் ஒருவன் பாரியின் மனைவி யிடம் வந்து இரந்தான். அவனுக்குச் சோறுபோடுவதைப் போலவே, உலைப்பானையுள் பொன்னை நிறைத்து, அதைச் சோறாகப் போட்டாள்''. இவ் வரலாறு ஒரு வெண்பாவிலே காணப்படுகின்றது. இதுபோல் இன்னும் சில வரலாறுகளும் இந்நூலிலே காணப்படுகின்றன.

### பழமொழிகள்

சிறந்த பழமொழிகள் பலவற்றை இந்நூலிலே காணலாம். அப் பழமொழிகள் இன்றும் மக்களால் வழங்கப் பட்டு வருகின்றன. அவைகளிற் சிலவற்றை மட்டும் பார்த் தால் போதும்; இந்நூலின் பெருமை விளங்கும்.

'இருதலைக் கொள்ளி' என்பது ஒரு பழமொழி. இரண்டு பக்கமும் நெருப்புள்ள கட்டை இருதலைக் கொள்ளி. அது எப் பக்கம் பட்டாலும் சுடும். ஆதலால் இரண்டு பக்கத்தில் உள்ள வர்களும் பாதுகாப்புடன் இருக்க வேண்டும். இந்த இரு

தலைக் கொள்ளியைப் போன்ற மனிதர்களும் சிலர் இருப்பார்கள். அவர்களிடம் நாம் அளவோடு பழக வேண்டும். இன்றேல் அவரால் நாம் தீமையடைவோம். இத்தகைய இரு தலைக் கொள்ளிகள் யார் என்பதை எடுத்துரைக்கின்றது வெண்பா. அது கீழ்வருமாறு:

தம்முடைய நட்பினரிடம் போவது; அவர்கள் மகிழும்படி பேசுவது; குற்றமில்லாதவர்போல நடிப்பது; இதைப்போலவே பகைவர்களிடமும் போவார்; அவர்களிடமும் பேசுவார்; குற்றமற்றவர்களைப்போல நடிப்பார்; இவர்கள் இருவருள் யாருடனும் ஒட்டமாட்டார்; ஒருவரிடமும் ஒன்றுபட்டிருக்க மாட்டார். இவர்தான் இருதலைக் கொள்ளியாவர்.

> பெரிய நட்டார்க்கும் பகைவர்க்கும் சென்று
> திரிவுஇன்றித் தீர்ந்தார்போல் சொல்லி, அவருள்
> ஒருவரோடு ஒன்றி ஒருப்படாதாரே
> இருதலைக்கொள்ளி என்பார்.

'கிணற்றுத் தவளை நாட்டு வளப்பம் அறியாது' என்பது ஒரு பழமொழி. குறுகிய அறிவு கூடாது, பரந்த அறிவு பெற வேண்டும் என்பதே இப் பழமொழியின் கருத்து. மக்கள் கிணற்றுத் தவளையாக வாழக்கூடாது என்று கூறுகிறது ஒரு வெண்பா.

''உண்ணுதற்கினிய தண்ணீர் இதுதான், இது போன்ற தண்ணீர் வேறிடத்தில் இல்லை என்று கிணற்றிலே உள்ள தவளை சொல்லிக்கொண்டிருக்கும்; மக்களும் அத்தவளை போல் ஆகிவிடக்கூடாது. ஒரே புத்தகத்தை நாள் முழுவதும், வெறுப்பில்லாமல் ஓதிக்கொண்டிருப்பதனால் பயன் இல்லை. அந்நூலைமட்டுமே ஆராய்ந்து ஆராய்ந்து கற்பதனால் மட்டும் பரந்த அறிவு வளர்ந்து விடாது. இவ்வாறு ஒரு நூலை மட்டும் எப்பொழுதும் படித்துக்கொண்டிருப்பதைக் காட்டிலும் பல நூல்களையும் கற்றவர்களிடமிருந்து அரும் பொருள்கள் பலவற்றைக் கேட்பதே சிறந்ததாகும்.

உணற்குஇனிய இந்நீர் பிறிதுழி இல் என்னும்
கிணற்றகத்துத் தேரைபோல் ஆகார்;—கணக்கினை
முற்றப் பகலும் முனியாது இனிது ஓதிக்
கற்றலில், கேட்டலே நன்று.

பல நூல்களையும் படிக்க வேண்டும்; பல நூல்களைக் கற்றவர்களிடமிருந்து பல செய்திகளையும் கேட்டறிந்து கொள்ள வேண்டும்; அப்பொழுதுதான் அறிவு வளரும்; உலக வாழ்க்கையைப்பற்றி நன்றாக அறியலாம். இப்படியில்லாமல் ஒன்றைமட்டும் திருப்பித் திருப்பி மனப்பாடம் பண்ணிக் கொண்டும்,துருவித் துருவி ஆராய்ந்து கொண்டும் இருப்பவர் பரந்த அறிவைப் பெற முடியாது. கிணற்றுத் தவளை போல் தான் இருப்பர்.

தமிழிலே உள்ள பல நூல்களை மட்டும் படிப்பது போதாது. வேறு மொழிகளில் உள்ள சிறந்த பல நூல்களையும் படித்தறிய வேண்டும். இதுவே சிந்தனா சக்தி சிறப்படைவதற்கு வழி செய்வதாகும். அறிவுச் செல்வத்தை ஈட்டுவதற்கு அருந்துணை புரிவதாகும். இக்கருத்தும் இப்பழமொழி வெண்பாவில் அமைந்திருக்கின்றது.

'சந்திரனைப் பார்த்து நாய் குரைப்பது போல்' என்றொரு பழமொழி உண்டு. குற்றமற்றவர்கள் மேல் அற்பர்கள் பழி பேசும்போது இப் பழமொழியைச் சொல்லுவார்கள். நல்லவர்கள் மேல் எரிந்து வீழ்ந்து எந்தப் பழியைச் சுமத்தினாலும், அது அவர்களை ஒன்றும் செய்து விட முடியாது. நல்லவர்களை நல்லவர்கள் என்றுதான் உலகம் கூறும். சந்திரனைப் பார்த்து நாய்கள் குரைத்தால் அதனால் நிலவொளி குறைந்து விடாது. இந்தப் பழமொழியைக் கொண்ட செய்யுள் ஒன்று இந்நூலிலே உண்டு.

''சிறியவர்கள் பெரியவர்களை முறைப்படி தெரிந்து கொள்ளமாட்டார்கள்; தெரிந்து கொள்ளக்கூடிய தகுதியும் அவர்களிடம் இருக்காது; பெரியவர்கள் எளியவர்கள் போலத்

தான் காணப்படுவார்கள். ஆதலால் அவர்களை எளியவர்கள் என்று நினைத்துக்கொண்டு தங்களுக்குச் சமமாகக் கருதுவர்; தகாத சொற்களை அவர்களிடம் பேசுவர். இப்படிப் பேசுதல், சந்திரனைப் பார்த்து நாய் குரைப்பது போன்றதாகும்.

நெறியால் உணராது நீர்மையும் இன்றிச்
சிறியார் எளியார்ஆல் என்று பெரியாரைத்
தங்கள் நேர் வைத்துத் தகவுஅல்ல கூறுதல்
திங்களை நாய்குரைத்து அற்று.

'புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது' என்பது ஒரு பழமொழி. இதனை உயர்ந்தோர்க்கு உதாரணமாக எடுத்துக் காட்டுகின்றார் இந்நூலாசிரியர். உயர்ந்தவர்கள் வறுமையால் எவ்வளவு துன்பம் அடைந்தாலும் தமது நிலையிலே தவறமாட்டார்கள். இழிந்த செயல்களைச் செய்ய மாட்டார்கள். புலி எவ்வளவு பசியால் வாடினாலும் தனது நிலையிலே தவறாது. வழக்கமாகத் தான் உண்ணும் புலால் கிடைத்தால் தான் உண்ணும்; புல்லைத் தின்னாது.

'நாய்க்கு முழுத்தேங்காய் கிடைத்ததுபோல்' என்றொரு பழமொழி உண்டு. முழுத்தேங்காயை நாயிடம் போட்டால் அதனை அது என்ன செய்யும்? தானும் அதைத் தின்னாது; பிறரையும் அதை எடுக்கவிடாது; சும்மா காத்துக் கொண்டு தான் கிடக்கும். ஒருவன் செல்வத்தை நிரம்பச்சேர்த்து வைத்துக்கொண்டிருக்கின்றான். அவன் அச்செல்வத்தைப் பிறர்க்கும் உதவுவதில்லை; தானும் அனுபவிப்பதில்லை. ஆதலால் அச்செல்வம் நாய்க்குக் கிடைத்த முழுத்தேங்காயைப் போன்றதுதான் என்று கூறுகிறது ஒரு செய்யுள். 'நாய் பெற்ற தெங்கம் பழம்' என்று பண்டைக்காலத்தில் வழங்கியது இப் பழமொழி.

'நுணலும் தன் வாயால் கெடும்' என்பது ஒரு பழமொழி. தவளை தன் வாயினாலேயே கெட்டுப்போகும் என்பதே இதன் பொருள். மழை பெய்து தண்ணீர் நிரம்பிவிட்டால்

தவளைக்கு ஆனந்தம். அது தானாகவே கத்திக் கொண் டிருக்கும். தவளையை உணவுக்காகத் தேடித் திரியும் பாம்பு, அது இருக்கும் இடத்தை எளிதிலே தெரிந்து கொள்ளும்; சென்று அதைப் பிடித்து விழுங்கிவிடும். இதனால் தான் நுணலும் தன் வாயால் கெடும் என்ற பழமொழி உண்டாயிற்று.

''பிறர் மேல் பொல்லாங்கு சொல்லிக்கொண்டு ஒளிந்து திரியும் அறிவிலிகள் சிலர் உண்டு. அவர்களை யாரும் தேடிப்பிடிக்க வேண்டுவதே யில்லை. அவர்களே அகப்பட்டுக் கொள்ளுவார்கள். அவர்களுடைய சொற்களே அவர்களைக் காட்டிக் கொடுத்துவிடும். நுணலும் தன் வாயால் கெடும் என்ற பழமொழிக்கு ஏற்றவர்கள் இவர்கள்தாம்'' என்று கூறுகிறது அச்செய்யுள்.

இவ்வாறு பல சிறந்த பழமொழிகள் அமைந்த பாடல் களை இந்நூலிலே படித்தறியலாம்.

### நம்பிக்கைகள்

கனவிலே, காணப்படுவது பொய்யன்று. அது பின்னால் நடைபெறுவதை முன்னே அறிவிக்கும் அறிகுறியேயாகும் என்பது ஒரு பழமொழிப் பாட்டின் கருத்து. கனவில்லாமல் ஒரு நிகழ்ச்சியும் நடைபெறாது என்றே இந்நூல் கூறு கிறது.

> வினா முந்துறாத உரையில்லை; இல்லைக்
> கனா முந்துறாத வினை

கேள்வியில்லாமல் விடை பிறக்காது; அதுபோல கனா நிகழா மல் எந்தக் காரியமும் நடைபெறுவதில்லை.

பெண்கள் தம்முடைய கற்பைத் தாமே தான் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். தாயின் வாலை நிமிர்த்த முடியாது. அதுபோலத் தமது கற்பைக் காப்பாற்றிக் கொள்ள எண்ணாத

பெண்களைக் காவலிலே வைத்து அவர்களைக் கற்புள்ளவர்க ளாக்கிவிட முடியாது என்று நம்பி வந்தனர்.

நிறையான் மிகுகில்லா நேரிழையாரைச்
சிறையான் அகப்படுத்தல் ஆகா;—அறையோ!
வருந்த வலிதினின் யாப்பினும், நாய்வால்
திருந்துதல் என்றுமே இல்.

கற்பினால் சிறந்து நிற்காத பெண்களைக் காவலிலே பிடித்து வைத்துக் கற்புள்ளவர்களாக ஆக்கிவிடுதல் என்பது ஆகாத காரியம்; நான் இதை அறைகூவிச் சொல்லுகின்றேன். வருந் தும்படி உறுதியாக நிமிர்த்திக் கட்டி வைத்தாலும் நாய் வால் எந்தக் காலத்திலும் நேராகி விடாது.

பிறப்பினால் உயர்வு தாழ்வு உண்டு என்ற கொள்கையை இந்நூல் வலியுறுத்துகின்றது. கல்வியினால் வரும் சிறப்பைக் காட்டிலும் குடிப்பிறப்பால் உள்ள குணமே உயர்ந்தது என்று கூறுகிறது ஒரு பாட்டு.

கற்றது ஒன்று இன்றி விடினும், குடிப்பிறந்தார்
மற்றொன்று அறிவாரின் மாண மிகநல்லர்

நற்குடியிலே பிறந்தவர் கல்வி கற்றிருப்பதாகிய சிறப்பு ஒன்று இல்லாவிடினும், தாழ்ந்த குடியிலே பிறந்த கற்றாரைக் காட்டினும் மிகவும் உயர்ந்தவர்கள்.

நிரந்து வழிவந்த நீசருள் எல்லாம்
பரந்து ஒருவர் நாடுங்கால் பண்புடையார்
தோன்றார்.

''தொன்று தொட்டுக் கீழான பரம்பரையிலே பிறந்து வந்த நீசர்களுக்குள் எவ்வளவு தேடினாலும் நற்குணம் உடையவர் காணப்படமாட்டார்.''

'பிறப்பில் சிறியார்', 'பிறப்பினால் சாலவும் மிக்கவர்' என்ற தொடர்கள் பழமொழி வெண்பாவிலே காணப்படு கின்றன. இவைகளைக்கொண்டு இந்நூலாசிரியர் காலத்தி லேயே பிறப்பிலே உயர்வு தாழ்வு உண்டு என்ற கொள்கை

தமிழகத்திலே நிலைத்து வேரூன்றி விட்டதென்று தெரிந்து கொள்ளலாம்.

ஊழ்வினையிலும் இந்நூலாசிரியர்க்கு நம்பிக்கையுண்டு. ஊழ்வினையை வலியுறுத்தும் வெண்பாக்கள் பல உண்டு. ஆனால் முயற்சியினால் ஊழ்வினையின் கொடுமையைத் தவிர்க்க முடியும் என்ற கொள்கையையும் பழமொழி நூல் ஒப்புக் கொள்கிறது.

### திருக்குறளும் பழமொழியும்

பழமொழியின் பாடல்களிலே பலவற்றில் திருக்குறளின் கருத்துக்கள் காணப்படுகின்றன. பழமொழிப் பாடல்களின் அமைப்பு சங்கநூல் பாடல்களைப்போல் காணப்படுகின்றது. இதைக்கொண்டு, பழமொழி திருக்குறளுக்கு முன் பிறந்த நூலாக இருக்குமோ என்று ஐயுறவும் இடம் உண்டு. இது நன்றாக ஆராயத்தக்கது.

> நிறையான் மிகுகில்லா நேரிழை யாரைச்
> சிறையால் அகப்படுத்தல் ஆகா.

கற்பிலே சிறந்து நின்று, தம்மைத்தாமே காத்துக் கொள்ளாத பெண்களைச் சிறையிலே வைத்து அவர்கள் கற்பைக் காப் பாற்றிவிட முடியாது.

இது பழமொழிப் பாட்டு. இப்பாட்டின் பொருள் கீழ்வரும் திருக்குறளோடு ஒத்திருக்கினறது.

> சிறை காக்கும் காப்பு எவன் செய்யும் மகளிர்
> நிறை காக்கும் காப்பே தலை.

பெண்களைக் காவல் வைத்துக் காப்பதால் என்ன பயன் உண்டாகும்? அவர்கள் தங்கள் கற்பால் தம்மைத் தாமே காத்துக் கொள்வதுதான் சிறந்தது.

மேலே காட்டிய பழமொழிப் பாட்டும், இத்திருக்குறளும் ஒரே கருத்துடன் அமைந்திருப்பதைக் காணலாம்,

ஆற்றவும் கற்றார் அறிவுடையார்; அஃதுடையார்
நாற்றிசையும் செல்லாத நாடில்லை— அந்நாடு
வேற்று நாடாகா; தமவேயாம்; ஆயினால்
ஆற்றுணா வேண்டுவது இல்.

மிகவும் கற்றவர்கள் அறிவுள்ளவர்கள்; அவ்வறிவுள்ளவர்களின் பெருமை நான்கு திசைகளில் உள்ள நாடுகளிலும் செல்லும்; எந்நாடும் அவர்களை ஏற்றுக்கொள்ளும்; அவர்கள் எந்த நாட்டுக்குச் சென்றாலும் அந்நாடு அவர்களுக்கு வேற்று நாடாகக் காணப்படாது; தம்முடைய நாடாகவே காணப்படும். அப்படியானால் அவர்கள் எந்த ஊருக்குச் சென்றாலும் கட்டுச்சோறு கட்டிக்கொண்டு போக வேண்டாம்.

இது கல்வியின் பெருமையைக் குறித்தது. கற்றவர்கள் நாடு, மொழி, இனபேதம் பாராட்டமாட்டார்கள். இந்த உண்மையை எடுத்துரைத்தது இப்பழமொழிச் செய்யுள்.

யாதானும் நாடாமால், ஊர் ஆமால் என் ஒருவன்
சாந்துணையும் கல்லாத ஆறு.

கற்றவனுக்கு எந்நாடும் தன்நாடே; எவ்வூரும் தன்னூரே; இவ்வாறிருக்க ஒருவன் இறக்கும் வரையிலும் கல்வி கற்காமல் காலம் கடத்துவது ஏன்?

இத்திருக்குறளும், மேலே காட்டிய பழமொழிப் பாடலும் ஒரே கருத்தைக் கொண்டிருக்கின்றன. இக் குறளின் விரிவுரைபோல் அமைந்திருக்கின்றது இப்பழமொழிப் பாட்டு. இப்பழமொழிப் பாட்டின் கருத்துப்போல் காணப் படுகின்றது குறள்.

கறுத்தாற்றித் தம்மைக் கடிய செய்தாரைப்
பொறுத்தாற்றிச் சேறல் புகழ்ஆல்—ஒறுத்துஆற்றின்
வான் ஓங்கு மால்வரை வெற்ப! பயன் இன்றே
தான்நோன்றிட வரும் சால்பு.

வானை முட்டிய உயர்ந்த மலையையுடைய மன்னவனே! சினந்து நின்று தமக்குக் கொடுமை செய்தவர்களின்

குற்றங்களைப் பொறுத்துக் கொண்டு நேர்மையான நெறியிலே நடப்பதுதான் பெருமையாகும்; புகழாகும். அப்படியில்லாமல் தாமும் சினங்கொண்டு அவர்களைத் தண்டிப்பதனால் பயன் இல்லை. பொறுமையினால்தான் நல்ல பண்புகள் வளரும். இது பழமொழிச் செய்யுள்.

ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம்; பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ்.

தமக்குத்தீமை செய்தவரை எதிர்த்துத் தண்டித்தவர்க்கு ஒரே நாள் இன்பந்தான் உண்டு. தீமையைப் பொறுத்துக் கொண்டவர்க்கு உலகம் அழியும் வரையினும் புகழ் உண்டு.

இத் திருக்குறளும், மேலே காட்டிய பழமொழிப் பாடலும் ஒரே கருத்தமைந்தவை.

முற்பெரிய நல்வினை முட்டின்றிச் செய்யாதார்
பிற்பெரிய செல்வம் பெறலாமோ?

முன் பிறப்பிலே நல்ல வினைகளைத் தாராளமாகச் செய்யாதவர்கள், பின்வரும் பிறப்பிலே பெரிய செல்வத்தைப் பெற முடியுமா? முன் பிறப்பிலே நல்லறங்களைச் செய்தவர்கள் தாம், இப்பிறப்பிலே செல்வங்களைப் பெற்றுச் சிறந்து வாழ முடியும் என்று கூறியது இப் பழமொழிப் பாட்டு.

இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்
சிலர், பலர் நோலா தவர்.

இவ்வுலகில் தவம் புரிவோர் சிலர்; தவம் புரியாதவர்கள் பலர்; ஆதலால்தான் செல்வம் உள்ளவர்கள் சிலராகவும், வறுமை யுள்ளவர்கள் பலராகவும் இருக்கின்றனர்.

முன் பிறப்பில் செய்த தவமே இப்பிறப்பில் செல்வம் எய்திச் சிறந்து வாழ்வதற்குக் காரணம். முன் பிறப்பில் தவம் செய்யாமையே இப்பிறப்பில் வறுமையுற்று வருந்தி வாழ்வதற்குக் காரணம் என்று கூறுகிறது இக்குறள். இக்குறளும், மேலே காட்டிய பழமொழிப் பாட்டும், ஒத்த கருத்துள்ளவை.

இவ்வாறு திருக்குறள் கருத்துடன் ஒத்துக் காணப்படும் பழமொழிப் பாடல்கள் பல உண்டு.

**பழக்க வழக்கங்கள்**

இந்த நூலிலே ஒரு வெண்பாவில் 'நாய்கொண்டால் பார்ப்பாரும் தின்பார் உடும்பு' என்ற பழமொழி காணப்படு கின்றது. கீழோரிடமிருந்து நல்ல சொற்கள் பிறந்தால் அதை இகழாமல் ஒப்புக்கொள்ள வேண்டும் என்று கூறுகிறது அச் செய்யுள். நாய் கௌவிய உடும்பை நாய் கவ்வியது என்று இகழாமல், பார்ப்பாரும் தின்பார்கள். ஆதலால் கீழோர் வாயிலிருந்து பிறந்தது என்பதற்காக நல்ல சொல்லை இகழாமல் ஒப்புக்கொள்ள வேண்டும். இதனை,

> எள்ளல் கயவர்வாய் இன்உரையைத்—தெள்ளிதின்
> ஆர்க்கும், அருவி மலைநாட! நாய்கொண்டால்
> பார்ப்பாரும் தின்பார் உடும்பு.

என்பதனால் காணலாம்.

''நாய்கொண்ட உடும்பினைப் பார்ப்பாரும் தின்பர் அது போல என்றது, வேட்டைநாய் பற்பதியக் கௌவிப்பிடித்த தாயினும் உடும்பின் தசைஉண்பார்க்கு நன்மை பயத்தலால், அதனை நாய் வாய்ப்பட்டதென்று இகழாது, பார்ப்பாரும் விரும்பிக் கொள்வர்; அதுபோலக் கயவர் ஒரு செய்தி சொல்லு மிடத்து நல்லுரை தோன்றின் அதனைக் கயவர் வாய்ப் பட்டது என்று இகழாது உயர்ந்தோரும் விரும்பிக் கொள்வர் என்றவாறு. பார்ப்பாரும் என்னும் உயர்வுச் சிறப்பும்மையால் எல்லோரும் என்பது குறிப்பு'' இவ்வாறு வடமொழியிலும் தமிழிலும் வல்லுநரான—மதுரைத் தமிழ்ச் சங்கக் கல்லூரியின் தலைமையாசிரியராயிருந்த திருநாராயணய்யங்கார் அவர்கள் கூறுகின்றார். பழமொழியின் பழைய வுரைக்கு அவர் எழுதி யிருக்கும் விளக்க உரையிலே இவ்வாறு எழுதி யுள்ளார்,

இதனால் தமிழர்கள் உடும்புக் கறியைச் சிறந்த கறியாகக் கருதி வந்தனர் என்று தெரிகின்றது.

எருமையை அடித்து அதைக் கறி சமைத்துச் சாப்பிடும் வழக்கமும் தமிழ் நாட்டில் இருந்தது. இதை இந்நூலின் வெண்பாவினால் அறியலாம்.

பழங்காலத்திலே குற்றங்களுக்குக் கடுமையான தண்டனைகள் விதிக்கப்பட்டன. கடன் பெற்றவன், அக் கடனைத் திருப்பிக் கொடுக்காவிட்டால் - தான் கடன் வாங்க வில்லை என்று மறுத்தால்—அவனை நல்லபாம்பை அடைத்த குடத்திலே கைவிடச் சொல்லுவார்கள். அவன் உண்மையிலே கடன் வாங்காவிட்டால், குடத்தில் உள்ள பாம்பு அவன் கையைக் கடிக்காது; அவன் கடன் வாங்கியிருந்து, வாங்க வில்லை என்று பொய் புகல்வானாயின் அப்பாம்பு அவன் கையைக் கடித்து விடும். இதுவே அக்கால மக்கள் நம்பிக்கை. இதனைக் ''கடம் பெற்றான் பெற்றான் குடம்'' என்ற பழ மொழியில் முடியும் பாட்டால் அறியலாம்.

அக்காலத்திலே மன்னர்கள் தனி அதிகாரம் செலுத்தி வந்தனர். அவர்கள் அநீதி செய்தாலும்கூட அவர்கள் நெஞ் சிலே சினம் உண்டாகும்படி எக்காரியமும் செய்யக்கூடாது. மன்னர்களின் மனத்திலே சினம் மூளும்படி நடந்து கொள்ளு வது, தூங்குகின்ற புலியைத் தூக்கத்திலிருந்து எழுப்புவது போல் ஆகிவிடுமாம்.

> வெஞ்சின மன்னவன் வேண்டாதவே செயினும்
> நெஞ்சத்துள் கொள்வ சிறிதும் செயல் வேண்டா;
> என்செய்து அகப்பட்டக் கண்ணும் எழுப்புபவோ
> துஞ்சு புலியைத் துயில்

கடுங்கோபத்தையுடைய அரசன், நாம் வெறுக்கத்தக்க செயல் களைச் செய்தாலும் பொறுத்துக் கொண்டுதான் இருக்க வேண்டும். அவன் நெஞ்சிலே கோபம் கொள்ளும்படியான

செயல்களைச் சிறிதாவது செய்யக்கூடாது. என்ன தந்திரங் களைச் செய்து, தம்மிடத்திலே அகப்பட்டபோதும், தூங்கு கின்ற புலியைத் தூக்கத்திலிருந்து எழுப்புவார்களா? எழுப்ப மாட்டார்கள். எழுப்பினால் அதற்குக் கோபம் வரும்; தீமை செய்யும்.

இவ்வாறு அரசர்களைப்பற்றிப் பத்தொன்பது பாடல்கள் காணப்படுகின்றன. அவை அனைத்தும் அரசர்களுடைய சர்வாதிகாரத்தை—தனி அதிகாரத்தை ஆதரிக்கும் செய்யுட் களாகவே இருக்கின்றன. இதனால் பழமொழி நூல் தோன்றிய காலத்தில் மன்னர்களின் ஆட்சியே நிலைத்திருந் தது; அவர்கள் சர்வாதிகாரம் படைத்தவர்களாகவே விளங் கினார்கள் என்று எண்ண இடம் இருக்கின்றது.

பழைய பழக்க வழக்கங்கள் பலவற்றைப் பற்றியும் பழமொழியிலே படித்தறியலாம். இந்நூலிலே காணப்படும் பழமொழிகளிலே பல, நகைச்சுவை யுடையனவாகவும் காணப்படுகின்றன. படித்தறிய வேண்டிய நீதி நூல்களிலே பழமொழி நானூறும் ஒரு சிறந்த நூல். பழந்தமிழர் பண் பாட்டைக் காணுவதற்கு இந்நூல் பெருந்துணை செய்யும்.

# 18. நாலடியார்

நாலடியார் ஒரு சிறந்த நூல். இது ஒரு நீதி நூல். நானூறு வெண்பாக்கள் அமைந்திருக்கின்றன. நாலடி நானூறு என்ற மற்றொரு பெயரும் இதற்கு உண்டு.

'ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி: நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி'. இப்பழமொழி நாலடியாரின் பெருமையைக் காட்டும், திருக்குறளின் சிறப்பையும் உணர்த்தும். 'நாலு' என்பது நாலடியார்; 'இரண்டு' என்பது திருக்குறள்.

''பழகு தமிழ்ச்சொல் அருமை நாலிரண்டில்'' என்பதும் நாலடியின் சிறப்பையும், திருக்குறளின் பெருமையையும் காட்டும்.

இந்த நாலடியாரின் மாண்பை விளக்கும் மற்றொரு கதையும் உண்டு. ஒரு காலத்திலே வட நாட்டிலே பெரும் பஞ்சம் உண்டாயிற்று; எண்ணாயிரம் சமண முனிவர்கள் பஞ்சம் பிழைக்கப் பாண்டிய நாட்டுக்கு வந்தனர். அவர்கள் மதுரையிலேயே தங்கினர். பாண்டிய மன்னன் அவர்களை ஆதரித்து வந்தான்.

பஞ்சம் தீர்ந்தது; நாடு செழித்தது; முனிவர்கள் தங்கள் நாட்டிற்குப் போக விரும்பினர். பாண்டியன் அவர்கள் செல்வதை விரும்பவில்லை. தன்னுடைய நாட்டிலேயே அவர்கள் தங்கியிருக்க வேண்டும் என்று விரும்பினான்.

அந்தச் சமண முனிவர்கள் தமிழ் நாட்டில், பாண்டியன் பாதுகாப்பில் பன்னிரண்டு ஆண்டுகள் தங்கியிருந்தனர்.

இதற்குள் அவர்கள் தமிழை நன்றாகக் கற்றிருந்தனர். கவி பாடும் ஆற்றலும் பெற்றிருந்தனர்.

இறுதியில் அவர்கள், தாங்கள் தங்கியிருந்த குடிசை களில், தங்கள் ஆசனங்களுக்கு அடியில் ஒவ்வொரு வெண் பாக்களை எழுதி வைத்தனர். இரவோடு இரவாகப் பாண்டிய னிடம் சொல்லிக்கொள்ளாமலே புறப்பட்டுப் போய் விட்டனர்.

அவர்கள் போய்விட்டதை அறிந்தான் பாண்டியன். அவர்கள் இருந்த குடிசைகளைச் சோதனையிட்டான். அவர்கள் எழுதி வைத்த ஏடுகள் கிடைத்தன.

எல்லாவற்றையும் படித்துப் பார்க்கும்படி புலவர்களுக்குக் கட்டளையிட்டான். அப்பாடல்கள் ஒன்றிற்கு ஒன்று தொடர் பில்லாமல் தனித்தனிப் பாடல்களாகக் காணப்பட்டன. இதை அறிந்த பாண்டியன் அவைகளை வைகை யாற்றிலே போட்டு விடும்படி கூறினான்.

அரசன் கட்டளைப்படி அவைகள் வைகை வெள்ளத்தில் விடப்பட்டன. அவைகளில் நானூறு வெண்பாக்கள் வெள்ளத் தோடு போகாமல் எதிர்த்து வந்தன. அந்த நானூறு ஏடுகளை யும் பொறுக்கினர். அவைகளில் இருந்த நானூறு பாடல் களையும் சேர்த்தனர். நாலடியார் என்ற நூலாக்கினர். இது தான் நாலடியாரைப் பற்றிய கதை.

அந்த எண்ணாயிரம் ஏடுகளில், வெள்ளத்திலே போய் விடாமல் அங்கங்கே பல ஏடுகள் தங்கிக் கிடந்தன. அவை களையும் ஒன்று சேர்த்தனர்; நானூறு ஏடுகள் தேறின. அந்த நானூறு ஏடுகளில் இருந்த நானூறு வெண்பாக்களையும் சேர்த்துப் பழமொழி என்ற நூலாக்கினர். இக்கதை, பழ மொழியைவிட நாலடியார் சிறந்த நூல் என்பதற்காகவே எழுந்தது.

நாலடியாரைப்பற்றிய இக்கதை கட்டுக் கதை தான். ஆனால் நாலடியாரின் பெருமையை விளக்கவே இக்கதை

பிறந்திருக்க வேண்டும். இக்கதையில் உள்ள இரண்டு உண்மைகளை மறுக்க முடியாது. ஒன்று, நாலடியாரில் உள்ள வெண்பாக்கள் சமண சமயத்தவரால் செய்யப் பட்டவை. இரண்டு, நாலடியார் ஒரே ஆசிரியரால் இயற்றப் பட்ட நூல் அன்று; பல ஆசிரியர்கள் பாடிய பாடல்களின் தொகுப்பு. இந்த இரண்டு உண்மைகளும் அக் கதையிலிருந்து விளங்குகின்றன.

திருக்குறளிலே உள்ள பல கருத்துக்களை நாலடியாரிலே காணலாம். திருக்குறளைப் போலவே நாலடியாரும் மூன்று பால்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அவை அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்பவை. துறவறத்தைப் பாராட்டிப் பேசுதல்; உலக இன்பத்தை வெறுத்துரைத்தல்; பெண்ணின்பத்தை நிலையற்றதென்று மறுத்துப் பேசுதல்; ஊழ்வினை, மறு பிறப்பு, புலால் உண்ணாமை, உயிர்க் கொலை புரியாமை முதலியவைகளை வலியுறுத்துதல்; இவைகள் சமண சமயத்தாரின் சிறந்த கொள்கைகள். நாலடி யாரிலே இக்கொள்கைகள் வலியுறுத்திக் கூறப்படுவதைக் காணலாம்.

நாலடியாரைத் தொகுத்தவர் பதுமனார் என்னும் புலவர். இவரும் சமண சமயத்தவர். இவர் நாலடியாரைப் பால், இயல், அதிகாரங்களாக வகுத்தார். அதற்கொரு பொழிப்புரையும் இயற்றினார்.

அறத்துப்பாலில் முதலில் துறவறத்தைப் பற்றிய பாடல் களே தொகுக்கப்பட்டிருக்கின்றன. முதல் அதிகாரம் செல்வம் நிலையாமை; இரண்டாவது அதிகாரம் இளமை நிலை யாமை; மூன்றாவது அதிகாரம் யாக்கை நிலையாமை. ''செல்வம் நிலைக்காது; அழிந்துவிடும்; இளமைப் பருவமும் சில நாட்கள்தாம்; இளமைப் பருவம் கழிந்தால் கிழப்பருவம் வந்துவிடும்; நீர்மேல் குமிழி போன்றது உடம்பு; திடீரென்று மறைந்துவிடும். ஆகையால் செல்வம் உள்ளபோதே—

இளமைப்பருவம் இருக்கும்போதே—உயிரோடு வாழும் போதே—உலக மக்களுக்கு நன்மை செய்யுங்கள். தந்நலந் துறந்து வாழுங்கள். இந்தக் கருத்தையே முதல் மூன்று அதி காரங்களிலும் உள்ள முப்பது பாடல்களும் மொழிகின்றன.

திருக்குறளில் ஒரு அதிகாரத்தில் பத்துப் பாடல்கள் இருப்பது போலவே நாலடியாரிலும் ஒரு அதிகாரத்தில் பத்துப் பாடல்கள் இருக்கின்றன. இவ்வாறு நாற்பது அதி காரங்களைக் கொண்ட நானூறு பாடல்களே நாலடியார். ஒவ் வொரு அதிகாரத்திற்கும் தலைப்பெயர்கள் உண்டு.

பழைய நூல்களிலே—சிறப்பாகப் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களிலே உள்ள வெண்பாக்களில் நாலடியாரின் வெண்பாக்கள் மிகவும் இனிமையானவை. இந்நூலை இரண்டு மூன்று பொருள் உணர்ந்து படித்தால் போதும்; அவ்வளவு வெண்பாக்களும் மனப்பாடமாகிவிடும். இதுதான் உயர்ந்த பாடல்களின் தன்மை.

## சொல்லும் திறமை

சொல்லும் பொருளைத் தெளிவாக விளக்கிக் கூறுவ திலே நாலடிப் பாடல்கள் மிகவும் சிறந்தவை. அப்பாடல் களிலே காட்டப்படும் உவமானங்கள் அப்படியே உள்ளத்தைக் கவர்வனவாக இருக்கும்.

ஒரு மாமரம். அது நன்றாகக் காய்த்துப் பழுத்துக் குலுங்கி யிருக்கின்றது. ஒரே கிளையில் பழங்களும் இருக் கின்றன; காய்களும் இருக்கின்றன. இச்சமயத்தில் ஒரு பெருங்காற்று வீசுகின்றது. இந்தக் காற்றிலே கனிகள் உதிர்ந்து விடும்; காய்கள் உதிராமல் கிளைகளில் தங்கி விடும்; என்று எதிர்ப்பார்க்கலாம். ஆனால் அப்படி நடக்கவில்லை. கனிகளிலே சில உதிராமல் தங்கிவிட்டன; காய்கள் பல

உதிர்ந்துவிட்டன, இந்த இயற்கை நிகழ்ச்சியை மனித வாழ்வோடு இணைத்துக் காட்டுகின்றது ஒரு பாட்டு.

மற்றுஅறிவாம் நல்வினை;யாம் இளையம்; என்னாது
கைத்து உண்டாம் போழ்தே கரவாது அறம் செய்ம்மின்
முற்றியிருந்த கனி ஒழியத், தீவளியால்
நற்காய் உதிர்தலும் உண்டு

நல்வினைகள் செய்வதைப் பற்றிப் பிறகு எண்ணிப் பார்க்கலாம். இப்பொழுது நாம் இளமைப் பருவம் உள்ளவராகத்தானே இருக்கின்றோம். இப்பொழுதென்ன அவசரம் என்று நினைக்காதீர்கள்! கையில் பொருள் உள்ள போதே ஒளிக்காமல் நல்லறங்களைச் செய்யுங்கள். முற்றியிருந்த கனி உதிராமல் அப்படியே தங்கியிருக்கும்; கொடுங்காற்றால், பழுக்காத நல்லகாய் உதிர்ந்து போவதும் உண்டு (பாட்டு 19) இச் செய்யுள் மிகவும் அருமையான செய்யுள். வயதேரியவர்கள் வாழ்வதும், இளையவர்கள் இறப்பதும் இயற்கை என்பதை எடுத்துக் காட்டிற்று. இதன் மூலம் இளமைப் பருவத்தை நம்ப வேண்டாம் என்றும் உரைத்தது.

மற்றொரு பாடல், மக்கள் அனைவருக்கும் தெரிந்த ஒரு செய்தியை உதாரணமாகக் காட்டி ஒரு நீதியை உணர்த்துகின்றது.

நாய் கடித்தால் அதைத் திருப்பிக் கடிப்பவர் யாரும் இல்லை. கடித்த நாயைத் திருப்பிக் கடிக்க வேண்டும் என்று எந்தப் பைத்தியக்காரனும் கருதமாட்டான்.

கெட்ட குணம் உள்ள சில அற்பர்கள். மனிதத் தன்மையின்றிச் சில நல்ல மனிதர்களின் மேல் வசைமாரி பொழியலாம். நல்ல மனிதர்கள் அவர்களுக்கு எதிர்மாற்றம் கொடுக்கமாட்டார்கள்; ஒதுங்கித்தான் போவார்கள். இக் கருத்தை விளக்குகிறது அச் செய்யுள்.

கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டும் தம் வாயால்
பேர்த்துநாய் கௌவினார் ஈங்கில்லை—நீர்த் தன்றிக்
கீழ்மக்கள் கீழாய சொல்லியக்கால் சொல்பவோ
மேன்மக்கள் தம் வாயால் மீட்டு

கோபங்கொண்டு நாய் தன் வாயால் கடிப்பதைக் கண்டும், மீண்டும் அந்த நாயைத் நம் வாயினால் கடிப்பவர் யாரும் இல்லை. அதுபோல மனிதத் தன்மை யில்லாமல், கீழ்ப்பட்ட மக்கள் கீழான வார்த்தைகளைக் கூறினால், உயர்ந்தவரகள், அவைகளுக்கு மாறாகத் தாமும் கீழான சொற்களைச் சொல்ல மாட்டார்கள்.

மனிதத் தன்மையற்ற முறையில் வசை மொழிகளை அள்ளி இறைப்பவர்களை, நாய்கள், என்று சொல்லிற்று இச் செய்யுள்.

மற்றொரு பாட்டு உலக இயற்கையை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது. மக்களுடைய சுயநலத் தன்மையைத் தெளிவாக விளக்கிக் காட்டுகின்றது.

கால் ஆடு போழ்தில் கழிகிளைஞர் வானத்து
மேல் ஆடு மீனில் பலர் ஆவார்;—ஏலா
இடர் ஒருவர் உற்றக்கால் ஈர்ங்குன்ற நாட!
தொடர்பு உடையேம் என்பார் சிலர்.

ஒருவர் செல்வம் உள்ளவராய்த் திரியும்போது, அவருக்கு உறவினர்கள் மிகுதியாக இருப்பார்கள். அவர்கள் வானில் மின்னுகின்ற நட்சத்திரங்களைக் காட்டிலும் அதிகமாயிருப் பார்கள். குளிர்ந்த குன்றுகளையுடைய பாண்டியனே! ஒருவர் தாங்க முடியாத துன்பங்களை அடைந்தபோது அவருக்கு உறவினர்கள் மிகுதியாக இருக்கமாட்டார்கள்; ஒரு சிலர்தான் உறவினர் என்று சொல்லிக் கொள்ளுவார்கள்.

இன்றைய உலகிலே தமக்கென்று ஏதாவது சேர்த்து வைத்துக் கொண்டிருக்கும் மக்கள் தாம் வாழமுடியும். ஒன்று மில்லா ஏழைகள் வாழமுடியாது. செல்வம் படைத்தவர்களைத்

தான் பலர் உறவு முறை பாராட்டிச் சுற்றிக் கொண்டிருப்பார்கள். ஏழைகளை எவரும், தங்கள் உறவினர் என்று சொல்லிக் கொள்ளமாட்டார்கள். இந்த இயற்கை உண்மையை எடுத்துக் காட்டிற்று இவ்வெண்பா.

நட்பைப்பற்றிச் சொல்லும் மற்றொரு அழகான பாட்டு குறிப்பிடத்தக்கது. அச்செய்யுளில் உள்ள உவமானம் படிப்போர் உள்ளத்திலே அப்படியே படிந்துவிடும்.

> நாய்க்கால் சிறுவிரல்போல் நன்கு அணியர் ஆயினும்
> ஈக்கால் துணையும் உதவாதார் நட்பு என்னாம்!
> சேய்த்தானும் சென்று கொளல்வேண்டும் செய்விளைக்கும்
> வாய்க்கால் அனையார் தொடர்பு.

நாயின் கால்களில் உள்ள சிறிய விரல்கள் இடைவெளியின்றி நெருங்கியிருக்கும். அதுபோல நன்றாக நெருங்கிப் பழகினாலும், ஈயின் சிறுகால் அளவுகூட உதவி செய்யாதவர்களின் நட்பினால் பயன் இல்லை. வயல்களிலே பாய்ந்து அவைகளிலே தானியங்களை விளையச் செய்கின்ற வாய்க்கால் போன்றவர்களின் நட்பையே தேடிக்கொள்ள வேண்டும். அவர்கள் தொலைதூரத்தில் இருந்தாலும் தேடிக் கொண்டுபோய் அவர்களுடைய நட்பைப் பெற வேண்டும்.

இச்செய்யுளிலே நெருங்கிப் பழகுவதற்கு, நாயின் கால் விரல்களும், சிறிய உதவிக்கு ஈயின்காலும் உவமானங்களாகக் காட்டப்பட்டன. பெருத்தமான உவமானங்கள்.

கல்வி கற்பதின் அவசியத்தை வலியுறுத்துவதற்காக, கற்காதவனைப்பற்றி இழித்துழைக்கும் செய்யுட்கள் எல்லாம் மிகச் சிறந்தவைகள். கல்லாதவனுக்குக் காட்டும் உவமானங்கள் படிப்போர்க்கு நகைப்பை ஊட்டுவன. அவற்றுள் ஒரு செய்யுள் கீழ் வருவது.

கல்லாது நீண்ட ஒருவன், உலகத்து
நல் அறிவாளர் இடைப்புக்கு,—மெல்ல
இருப்பினும் நாய் இருந்து அற்றே; இராஅது
உரைப்பினும் நாய்குரைத்து அற்று.

கல்வி கற்காமல் மரம்போல் நீண்டு வளர்ந்த ஒருவன் நல்ல அறிஞர்கள் நடுவிலே இருப்பதற்குத் தகுதி அற்றவன். அவன் நல்லறிஞர்களின் நடுவிலே புகுந்து மெல்ல உட்கார்ந் திருந்தாலும், ஒரு நாய் உட்கார்ந்திருப்பதுபோல ஆகும். சும்மா இருக்காமல் ஏதேனும் சொல்லத் தொடங்கி விடுவா னாயின், நாய் குரைத்தது போல ஆகிவிடும்.

இச்செய்யுள் மூடனை நாய்க்கு ஒப்பிட்டது. அவன் பேசுவதை நாய் குரைப்பதற்கு ஒப்பாக உரைத்தது. நாய் குரைப்பதிலும் பொருள் இருக்காது; வெறும் ஒலி தான் உண்டு. கல்லாதான் சொற்களிலும் பொருள் இராது; வெறும் ஓசைதான் நிரம்பியிருக்கும்.

நகைப்பை யூட்டும் மற்றொரு சிறந்த வெண்பா குறிப்பிடத்தக்கது. பலராலும் இழக்கத்தக்க மனிதர்கள் இன்னார் என்று சுட்டிக் காட்டுகின்றது அவ் வெண்பா. ஆழ்ந்த சிந்தனையும், அறிவும், பெருந்தன்மையுள்ள குணமும் உடையவர்கள் எப்பொழுதும் மற்றவர்களின் மதிப்புக்குரியவர்களா யிருப்பார்கள். தற்பெருமையும், வெகுளித் தன்மையும் உள்ளவர்கள் பிறர் பழிப்புக்குத்தான் உரியவர்களா யிருப்பார்கள். இது உலகில் நடக்கும் உண்மை நிகழ்ச்சி.

உறவினர்களிலே அதிகமாகப் பரிகசிப்பதற்கு உரிமை பெற்றவர்கள் மைத்துனர்கள்; மச்சான் முறையிலே உள்ளவர் கள் எவ்வளவு வேண்டுமானாலும் பரிகாசம் பண்ணலாம். தற்பெருமை யுள்ளவர்களுக்கு இத்தகைய மைத்துனர்கள் பெருகி விடுவார்களாம்.

கற்றனவும், கண் அகன்ற சாயலும், இற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப் பாடுஎய்தும்; தான் உரைப்பின்
மைத்துனர் பல்கி, மருந்தில் தணியாத
பித்தன், என்று எள்ளப் படும்.

ஒருவனுடைய கல்வியைப் பற்றியும், தாராள குணத்தைப் பற்றியும், அவனுடைய குடும்பப் பெருமையைப் பற்றியும், பக்கத்தில் உள்ளவர்கள் பாராட்டிப் பேச வேண்டும். அப் பொழுதுதான் அவனுக்குப் பெருமை உண்டு. இப்படியில்லா மல் தானே தன்னுடைய கல்வியைப்பற்றியும் தன்னுடைய தாராளத் தன்மையைப் பற்றியும், குடும்பப் பெருமையைப் பற்றியும் புகழ்ந்து பேசிக்கொண்டிருப்பானாயின் அவனுக்கு மைத்துனர்கள் பெருகி விடுவார்கள். 'அவனுக்குப் பைத் தியம் முற்றிவிட்டது; எவவளவு மருந்து கொடுத்தாலும் அவன் பைத்தியம் தணியாது' என்று கேலி பண்ணு வார்கள்.

தன்னைத்தானே புகழ்ந்து கொள்ளுகின்றவன் பைத்தியக்காரன்; அவன் பலர் நகைப்புக்குப் பாத்திரமாக இருப்பான்; என்ற உண்மையை இவ் வெண்பா எடுத்துக் காட்டிற்று.

தெரிந்த செய்திகள்; விளங்கக்கூடிய உவமானங்கள்; நகைச்சுவை தரும் பொருள்கள்; இவைகளைக் காட்டி உண்மைகளை உணர்த்துவதிலே நாலடிப் பாட்டுக்கள் சிறந்தவை. மேலே எடுத்துக் காட்டியவை போன்ற பல பாடல்கள் நாலடியிலே இருக்கின்றன. அவைகள் படித்துச் சுவைக்கத் தக்கவை. ஆகையால்தான் நாலடியாரைத் திருக் குறளுக்கு அடுத்த சிறந்த நூலாகப் போற்றுகின்றனர்; பாராட்டுகின்றனர்.

### தன்னம்பிக்கை

தன்னம்பிக்கை யில்லாதவர்கள் எந்தக் காரியத்திலும் வெற்றிபெற மாட்டார்கள். வெற்றி யளிக்கும் கருவி

தன்னம்பிக்கையே யாகும். 'நம்மால் என்ன செய்ய முடியும்? எல்லாம் ஆண்டவன் செயல். அவனன்றி அணுவும் அசை யாது. நாம் நினைப்பது ஒன்று; நடப்பது ஒன்று.' இவ்வாறு வேதாந்தம் பேசும் சில மனிதர்களைப் பார்க்கின்றோம். இப்படிச் சலிப்படைந்து பேசுகின்றவர்கள் 'நடப்பது நடக் கட்டும்' என்று சும்மா உட்கார்ந்திருப்பார்களாயின் அவர்கள் வாழ்க்கையே பாழாகும். அவர்கள் ஒரு காரியத்திலும் வெற்றி பெற மாட்டார்கள்.

தன்னம்பிக்கையும், அறிவும், முயற்சியுமே ஒரு மனித னுடைய வெற்றி நிறைந்த வாழ்வுக்குக் காரணம். இவை இன்மையே ஒரு மனிதனுடைய தோல்விக்கும் வாழ்வின் மைக்கும் காரணம். இக்கருத்தை ஒரு பாடல் எடுத்துக் காட்டுகின்றது.

நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும், தன்னை
நிலைகலக்கிக் கீழ்இடு வானும், நிலையினும்
மேன்மேல் உயர்த்து நிறுப்பானும், தன்னைத்
தலையாகச் செய்வானும் தான்

தன்னை நல்ல நிலையிலே வாழ வைத்துக் கொள்ளுகின்ற வனும் தானேதான். தன்னுடைய நிலைமையைக் கெடுத் துத் தன்னைக் கீழ் நிலையிலே தள்ளிக் கொள்ளுகின்ற வனும் தானேதான். தான் இருக்கும் நிலையைக் காட்டி னும் இன்னும் உயர்ந்த நிலையிலே தன்னை வாழ வைத் துக் கொள்ளுகின்றவனும் தானேதான். தன்னைத் தலைமைப் பதவியிலிருக்கும்படி முதன்மையாகச் செய்து கொள்ளுகின்றவனும் தானேதான்.

வாழ்க்கைக்கு அடிப்படை தன்னம்பிக்கைதான் என்பதை இச் செய்யுள் உணர்த்தியது. வணிகர்கள், அரசியல் வாதிகள், வேறு துறைகளில் ஈடுபட்டிருப்பவர்கள் அனை வர்க்கும் தன்னம்பிக்கையே வெற்றிப்பாதைக்கு வழிகாட்டும்

விளக்காகும். இவ் வுண்மையை நாலடிச்செய்யுள் நமக்கு அறிவிக்கின்றது.

### செல்வத்தின் பயன்

ஒரு மனிதன் தன்னுடைய நன்மைக்காக மட்டும் செல்வம் சேர்ப்பதை நாலடிப் பாட்டுக்கள் வெறுத்துரைக்கின்றன. உறவினர், ஊறினர், நாட்டினர் நன்மைக்காகவே பொருள் சோர்க்கவேண்டும்; என்று பல பாடல்களிலே கூறப்படுகின்றன.

> பகடு நடந்த கூழ் பல்லாரோடு உண்க.

ஏர் உழுது பெற்ற செல்வத்தைப் பலரோடும் பகிர்த்து உண்ண வேண்டும்.

> ஆற்றப், பெரும் பொருள் வைத்தீர் வழங்குமின்.

மிகவும் நிறைந்த செல்வத்தைச் சேர்த்து வைத்திருக்கின்றவர்களே! அவைகளை வறியர்களுக்கு கொடுங்கள்.

> தூய்த்துக் கழியான், துறவோர்க்கு ஒன்று ஈகலான்
> வைத்துக் கழியும் மடவோன்.

தானும் அனுபவித்துக் கழிக்கமாட்டான்; செல்வம் அற்ற வறியோர்க்கும் ஒன்றும் உதவமாட்டான்; பயனின்றிப் பொருளைச் சேர்த்து வைத்து விட்டு இறப்பான்; இவன் அறிவற்ற மடையன்.

இவ்வாறு செல்வத்தைப்பற்றிப் பல பாடல்களிலே கூறப்படுகின்றன. செல்வம் அனுபவிப்பதற்கே யன்றிச் சேர்த்து வைத்துப் பார்த்து மகிழ்வதற்காக அன்று என்பதை ஒரு பாட்டு தெளிவாகக் கூறுகின்றது. செல்வத்தைச் சேர்த்து வைத்துக்கொண்டு சும்மா பார்த்துக்கொண்டிருப்பவனும், செல்வம் இல்லாதவனும் சமமானவர்கள் என்று அச் செய்யுள் எடுத்து காட்டுகிறது.

> எனது எனது என்றிருக்கும் ஏழை பொருளை,
> எனது எனது என்றிருப்பன் யானும்,—தனதாயின்
> தானும் அதனை வழங்கான் பயன் துவ்வான்,
> யானும் அதனை அது.

அறிவில்லாதவன் தான் சேர்த்து வைத்திருக்கும் செல்வத்தை 'என்னுடையது, என்னுடையது' என்று நினைத்துக் கொண்டிருப்பான். அவனைப் போலவே யானும் அச் செல்வத்தை 'என்னுடையது, என்னுடையது' என்று எண்ணிக் கொண்டிருப்பேன். அது அவனுடைய செல்வமாயிருக்குமானால் அவன் அதை எடுத்து அனுபவிப்பான்; பிறருக்கும் கொடுப்பான். அப்படி அவன் தானும் அதனைப் பிறருக்கும் வழங்குவதில்லை; அதன் பயனை நுகர்தலும் இல்லை. யானும் அச் செல்வத்தை அவனைப் போலவே, பிறருக்குக் கொடுக்காமலும், அனுபவிக்காமலும் வைத்திருக்கின்றேன்.''

இச்செய்யுள், வழங்காமலும், அனுபவிக்காமலும் வைத்திருக்கின்றவனுடைய செல்வம் அவனுக்கு உரியது அன்று என்பதை விளக்கி உரைத்தது. இவை போன்ற பல செய்யுட்கள் செல்வப் பொருளை வீணாகச் சேர்த்து வைத்திருப்பதனால் பயனில்லை என்று கூறுகின்றன. வாழ்வதற்கும், வழங்குவதற்குந்தான் செல்வம் வேண்டும் என்று கூறுகின்றன.

### பெண்ணுரிமை

நாலடியார் காலத்திலே பெண்களுக்கு உரிமையிருந்ததில்லை. அவர்கள் ஆண்களுக்கு அடங்கி நடக்கும் அடிமைகளாகத்தான் கருதப்பட்டார்கள். ஆயினும் இல்லற வாழ்வு தழைக்கப் பெண்கள்தாம் காரணம் என்று கருதப்பட்டனர். ''ஆவதும் பெண்ணால் அழிவதும் பெண்ணால்'' என்ற கொள்கை தமிழகத்தில் நீண்டகாலமாக உண்டு. அன்பும், அறிவும், நற்பண்பும், திறமையும் உள்ள பெண்களால்தான் குடும்பங்கள் சிறப்படையும்; இவையற்ற பெண்கள் வாழும்

குடும்பத்திலே எந்த இன்பமும் இராது; அக் குடும்பமும் பாழாகும்.

> மாண்ட மனையாளை இல்லாதான் இல்லகம்
> காண்டற்கு அரியதுஓர் காடு.

சிறந்த குணங்கள் அமைந்த மனையாளைப் பெறாதவனுடைய வீடு பார்ப்பதற்கு பயரங்கரமான ஒரு காடாகும்.

இதனால் இல்வாழ்வு இனிது நடைபெற வேண்டுமானால் பெண்கள் நற்பண்புள்ளவர்களாயிருக்கவேண்டும் என்று கூறப்பட்டது. இல்வாழ்வுக்குத் தகுதியற்ற பெண்டிர்—கணவனுக்கும், குடும்பத்திற்கும் தீமை விளைக்கும் பெண்டிர் - எவர் என்பதை ஒரு பாட்டு விளக்கிக் கூறுகின்றது. விரும்பத்தகாத கொடுங்குணம் படைத்த பெண்ணை மனையாளாகக் கொண்டவன் என்றும் துன்புறுவான்.

> எறிஎன்று எதிர் நிற்பாள் கூற்றம்; சிறுகாலை
> அட்டில் புகாதாள் அரும்பிணி; - அட்டதனை
> உண்டி உதவாதாள் இல்வாழ்பேய்; இம்மூவர்
> கொண்டானைக் கொல்லும் படை.

அடி என்று சொல்லிக்கொண்டு கணவனை எதிர்த்து நிற்பவள் எமன்; விடியற்காலத்திலேயே சமையல் கட்டையடைந்து உணவுப் பொருள்களைச் சமைக்காதவள் ஒரு பெரிய நோய்; சமைத்த உணவைப் பசி நேரத்தில் பாரிமாறாதவள் வீட்டில் வாழும் பேய்; இக்குணமுள்ள பெண்கள் தம்மைக் கொண்ட கணவனைக் கொல்லும் ஆயுதம் ஆவர்.

கணவன் சொல்லுக்குக் கீழ்ப்படிவது; காலதாமதம் இன்றிச் சமையல் செய்வது; சமைத்ததை அன்புடன் பரிமாறுவது; இவை மனைவியின் சிறந்த கடமை என்று வற்புறுத்துகிறது இச் செய்யுள். கணவனுக்குப் பணிவிடை செய்யவேண்டியதே மனைவியின் கடமை என்பது பழந்தமிழ் நாட்டுப் பண்பு.

வீட்டிலிருந்துகொண்டு இல்லறத்தை நன்றாக நடத்த வேண்டுவதுதான் பெண்கள் கடமை. ஆயினும் அவர்களும் கல்வி கற்றிருக்கவேண்டும். ஆண்களைப் போலவே கல்வி கற்கும் உரிமை பெண்களுக்கும் உண்டு. இக்கொள்கையை நாலடியார் ஒப்புக்கொள்ளுகிறது.

குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டு அழகும்,
மஞ்சள் அழகும் அழகல்ல; நெஞ்சத்து
நல்லம் யாம், என்னும் நடுவுநிலைமையால்
கல்வி அழகே அழகு.

தலைமயிரின் அழகும், வளைந்து கொடுக்கும் துணியின் கரை யழகும், மஞ்சள் பூசிக்கொள்ளுவதனால் உண்டாகும் அழகும் அழகல்ல. உள்ளத்திலே, நாம் நல்ல வழியில் நடக்கின்றோம்; நடுவு நிலைமையில் வாழ்கின்றோம் என்னும் குற்றமற்ற நிலைமையை உண்டாக்குவதனால், கல்வியின் அழகுதான் சிறந்த அழகாகும்.

இச் செய்யுள் ஆண்களுக்கும் கல்வி வேண்டும்; பெண்களுக்கும் கல்வி வேண்டும் என்று வலியுறுத்துகின்றது. குஞ்சி - என்பது ஆண்களின் தலைமயிர்; உடுக்கும் ஆடையிலே கண்ணைக் கவரும் கரை அமைந்திருக்க வேண்டும் என்று ஆண்களும் விரும்புவர்; பெண்களும் விரும்புவர்; மஞ்சள் பூசிக்கொண்டு குளிப்பது பெண்கள் வழக்கம். ஆகையால் இது இருபாலார்க்கும் பொதுவான செய்யுள்.

### மானமுள்ள வாழ்வு

எவ்வளவு துன்பம் வந்தாலும் மானங்கெடாமல் வாழ வேண்டும். பசிப்பிணியால் சாவதா யிருந்தாலும் தன்னை இழிவாக மதிப்பவர்களின் இல்லத்திலே உணவருந்தக் கூடாது. இதுவே தமிழர்களின் சிறந்த பண்பாடு. இந்தப் பண்பாட்டை நாலடிப் பாடல்கள் எடுத்துக் காட்டுகின்றன.

"தன் உடம்பின்
ஊன் கெடினும் உண்ணார்கைத்து உண்ணற்க.

தன் உடம்பில் உள்ள சதை வற்றிப் போனாலும் — உடம்பு எலும்புந் தோலுமாக இளைத்துப் போனாலும், உண்ணத் தகாத பகைவர் கையிலிருந்து உணவு பெற்று உண்ணக் கூடாது."

பொற்கலத்துப் பெய்த புலி உகிர் வான்புழுக்கல்
அக்காரம், பாலோடு, அமரார் கைத்து உண்டலின்
உப்புஇலி புற்கை, உயிர்போல் கிளைஞர்மாட்டு,
எக்கலத்தானும் இனிது.

பொன் பாண்டத்திலே புலிநகம் போன்ற வெண்மையான சோறு, சர்க்கரை, பால் இவைகளைத் தம்மை மதியாதாரிடம் பெற்று உண்பதனால் இன்பம் இல்லை. இதைவிட உயிர்போன்ற உறவு பூண்டவரிடம், உப்பில்லாத கூழை மண்பாண்டத்திலே பெற்று உண்டாலும் இனிமையுண்டு.

நாள்வாய்ப் பெறினும் நள்ளாதார் இல்லத்து
வேளாண்மை வெங்கருனை வேம்பாகும்

நாள்தோறும் குறித்த நேரத்திலே கிடைப்பதாயினும், தன்னை விரும்பாதார் இல்லத்திலே அவர்கள் உதவும் பொரிக்கறியோடு கூடிய சோறு இனிமை தராது; உண்டால் வேம்பு போலவே கசக்கும்.

இவைகள் விரும்பாதார் - மதியாதார் - பகைவர் இல்லத்திலே உணவுண்பது தீமை என்பதை எடுத்துக் காட்டின. அவ்வாறு செய்வது மனிதத் தன்மையற்ற செயல்; மானங் கெட்ட நடத்தை என்பதையும் உணர்த்தின.

**சாதி வேற்றுமை**

நாலடியார் காலத்திலே தமிழ் நாட்டிலே சாதி வேற்றுமை நிலைத்திருந்தது. வருணாசிரம தருமக் கொள்கைகள் வேரூன்றி யிருந்தன. பிறப்பினால் உயர்வு தாழ்வு உண்டு என்ற கருத்துப் பரவி யிருந்தது.

தோணி இயக்குவான் தொல்லை வருணத்துக்
காணில் கடைப்பட்டான்

தோணி ஓட்டுகின்றவன், பழமையான நால்வகை வருணங்களிலே, ஆராய்ந்து பார்த்தால் கடைப்பட்ட வருணத்தைச் சேர்ந்தவன்.

தமிழகத்திலே பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர என்னும் நான்கு வருணங்களும் இருந்தன. கடைப்பட்ட சூத்திர வருணத்தைச் சேர்ந்தவர்களே தோணிகள் ஓட்டும் தொழில் செய்துவந்தனர். மேற்கண்ட வரிகள் இவ்வுண்மையைக் கூறின.

சான்றாண்மை, சாயல், ஒழுக்கம், இவைமூன்றும்
வான்தோய் குடிப்பிறந்தார்க்கு அல்லது—வான்தோயும்
மைதவழ் வெற்ப! படாஅ பெருஞ்செல்வம்
எய்தியக் கண்ணும் பிறர்க்கு.

வானை அளாவிய—மேகங்கள் தவழும் மலைகளை யுடைய பாண்டியனே! நிறைந்த நற்பண்புகள், அடக்கம், நல்லொழுக்கம், இவை மூன்றும் உயர்ந்த குடியிலே பிறந்தவர்களிடம் மட்டுமே காணப்படும். உயர்ந்த குடியிலே பிறக்காதவர்கள் செல்வத்தைப் பெற்றாலும், இக்குணங்களை பெறமாட்டார்கள்.

செல்லா விடத்தும் குடிப்பிறந்தார் செய்வன
செல்இடத்தும் செய்யார சிறியவர்

நல்ல குடியிலே பிறந்தவர்கள், தம் செல்வாக்கை யிழந்த வறுமைக்காலத்திலும் பிறர்க்குத் தம்மால் இயன்ற உதவியைச் செய்வார்கள். கீழ்ப்பட்ட குடியிலே பிறந்தவர்கள், செல்வாக்குள்ள—பணம் படைத்த காலத்திலும் பிறருக்கு உதவி செய்யமாட்டார்கள்.

இவைகள் குடிப்பிறப்பால் மக்கள் குணங்கள் வேறுபட்டிருக்கின்றன என்பதை உணர்த்தின. உயர்ந்த குடும்பத்

திலே பிறந்தவர்களிடம் உயர்ந்த குணங்கள் இருக்கும். இழிந்த குடியிலே பிறந்தவர்களிடம் தாழ்ந்த குணங்கள் காணப்படும். இவை முன்னோர் நம்பிக்கை.

ஆயினும் பிறப்பைக்கொண்டு மட்டும் ஒருவரை உயர்வாகவோ தாழ்வாகவோ எண்ணிவிடக் கூடாது. எக்குடியிலே பிறந்தோராயினும் கற்றறிந்தவர் சிறந்தவர். அவர்களைச் சிறந்தவராகப் பாராட்ட வேண்டும். அறிவும் ஒழுக்கமுமே மக்களுக்கு மதிப்பைத் தருவன; பிறப்பு மட்டும் அன்று. இச் சிறந்த கொள்கையையும் நாலடியார் எடுத்துரைக்கின்றது.

களர்நிலத்துப் பிறந்த உப்பினைச், சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்;
கடைநிலத்தோர் ஆயினும், கற்றறிந்தோரைத்
தலைநிலத்து வைக்கப்படும்.

களர் நிலத்திலே ஒன்று விளையாது: மட்டமான நிலம். ஆயினும் அந்த நிலத்திலே விளைந்த உப்பை அறிஞர்கள் ஒதுக்கிவிடமாட்டார்கள. நல்ல விளைநிலத்திலே பிறந்த நெல்லைக் காட்டிலும் சிறந்ததாகக் கொள்ளுவார்கள். அதைப்போலக் கடைப்பட்ட குடியிலே பிறந்தவராயினும், கற்றறிந்தோர் உயர்ந்த இடத்திலே பிறந்தவர் போல் வைத்துப் பாராட்டப் படுவார்கள்.

இச்செய்யுள் கல்வி கற்றவர்கள் உயர்ந்தவர்களாக மதிக்கப்படுவார்கள் என்பதை எடுத்துக்காட்டிற்று. மேற் காட்டியவைகளால் கல்வி, அறிவு, ஒழுக்கங்களால் பிறப்பினால் ஏற்படும் உயர்வு தாழ்வுகள் ஒழியும் என்பதை அறியலாம்.

### வடக்கும் தெற்கும்

வடநாடு புண்ணியபூமி; தென்னாடு பாவ பூமி என்று கொள்கை யுண்டு. வட நாட்டில் உள்ளவர்கள் புண்யம் செய்வார்கள்; சுவர்க்கம் பெறுவார்கள்; தென்னாட்டினர் வட

நாட்டிற்குச் சென்றால் ஒழுக்கத்திலே உயர்ந்து உத்தமராக மாறுவர். வடநாட்டினர் தென்னாட்டிற்கு வந்தால் ஒழுக்கங் கெடுவார்கள்; கீழ்மைக்குணம் அடைவார்கள். இத்தகைய நம்பிக்கை பண்டைக்காலத்திலிருந்தது.

இக்கொள்கையை நாலடியார் பாட்டு ஒன்று மறுத்துரைக்கின்றது. ''அவரவர்கள் தன்மைக் கேற்றபடியே நன்மை தீமை பெறுவார்கள்; அவர்கள் பெறும் நன்மை தீமைகளுக்கு அவ்ர்கள் வாழும் நாடு காரணம் அன்று'' என்று கூறுகின்றது அச்செய்யுள்.

எந்நிலத்து வித்துஇடினும் காஞ்சிரம்காழ் தெங்குஆகா
தென்னாட்டவரும் சுவர்க்கம் புகுலால்;
தன்ஆற்றான் ஆகும் மறுமை; வடதிசையும்
கொன் ஆளர் சாலப் பலர்.

எந்த நிலத்திலே விதையைக் கொண்டுபோய்ப் போட்டாலும் காஞ்சிரம் விதை தென்னை மரமாக முளைத்து விடாது. தென்னாட்டில் உள்ளவர்களும், நற் கருமங்களைச் செய்கின்றனர்; சுவர்க்கம் அடைகின்றனர். வடநாட்டிலும் வீண் பொழுது போக்குவோர் பலர் உண்டு. அவர்கள் நற்கதி பெறுவதில்லை; நரகத்தையே அடைகின்றனர். ஆதலால் ஒருவன் மறுமையிலே பெறும் நன்மைக்கு நாடு காரணம் அன்று; தன் ஒழுக்கமே—நடத்தையே காரணமாகும்.

இச்செயுள் வடநாடு புண்ணிய பூமி; தென்னாடு பாவ பூமி என்னும் கொள்கை தவறு என்பதை எடுத்துக் காட்டிற்று.

### திருக்குறள் கருத்துக்கள்

நாலடியார் பாடல்களிலே பல, திருக்குறளின் கருத்துக்களைக் விளக்கிக் கூறுகின்றன. திருக்குறளை நன்றாகக் கற்ற ஆசிரியர்களால் பாடப்பட்ட பாடல்களே நாலடிப் பாடல்கள் என்று எண்ணலாம்.

குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு.

கூடு தனித்திருக்கும்படி, அதில் உள்ள பறவை பறந்து போவது போன்றதாகும் உடம்புக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு என்பது திருக்குறள். இக்குறளின் கருத்து,

கேளாதே வந்து கிளைகளாய் இல்தோன்றி
வாளாதே போவரால் மாந்தர்கள்;—வாளாதே
சேக்கைமரன் ஒழியச் சேண்நீங்கு புள்போல
யாக்கை தமர்க்கொழிய நீத்து.

என்ற நாலடிப் பாட்டிலே காணப்படுகின்றது. சேக்கை—கூடு.

தவம்செய்வார் தம் கருமம் செய்வார் மற்று எல்லாம்
அவம் செயவார் ஆசையுள் பட்டு.

தவம் செய்பவரே தம்முடைய கடமையைச் செய்கின்றவர்; தவம் செய்யாதவர்கள் இவ்வுலக இன்ப ஆசையிலே அகப்பட்டுக்கொண்டு வீண் செயல்களைச் செய்கின்றவர் ஆவர். இத் திருக்குறளின் கருத்தை

நிலையாமை நோய்மூப்புச் சாக்காடு என்றெண்ணித்
தலைஆயார் தம்கருமம் செய்வார்

என்ற நாலடி வெண்பாவிலே காணலாம்;

பகை, பாவம், அச்சம், பழி யென நான்கும்
இகவாஆம் இல்இறப்பான் கண்

பிறன் மனையாளிடம் நெறிதவறிச் செல்கின்றவனிடம், பகை, பாவம், பயம். பழி என்னும் இந்நான்கு குற்றங்களும் நீங்காமல் நிலைத்திருக்கும் என்பது திருக்குறள்.

அறம், புகழ், கேண்மை, பெருமை இந்நான்கும்
பிறன் தாரம் நச்சுவார்ச் சேரா—பிறன்தாரம்
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவம் என்று
அச்சத்தோடு இந்நாற் பொருள்.

என்பது நாலடியார். இவை இரண்டும் ஒரே கருத்துடையன. இந்நாலடி வெண்பா மேலேகாட்டிய திருக்குறளுக்கும் பொருள் கூறுவது போல் அமைந்திருக்கிறது.

ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு.

சிறந்த செல்வத்தை மிகுதியாகச் சேர்த்து வைத்திருப்பவர் களுக்கு, மற்ற அறம், இன்பம் இரண்டும் எளிதிலே கிடைக் கும் பொருள்களாம். இது திருக்குறள்.

வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்
நடுவணது எய்த இருதலையும் எய்தும்;
நடுவணது எய்தா தான் எய்தும் வையத்து
அடுவது போலும் துயர்.

இது நாலடி வெண்பா. மேலே காட்டிய திருக்குறளும், இந்த நாலடியும் ஒரே பொருளைக் கூறுகின்றன.

உறங்குவது போலும் சாக்காடு, உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு

என்னும் திருக்குறளும்,

விழித்து இமைக்கும் மாத்திரை அன்றோ ஒருவன்
அழித்துப் பிறக்கும் பிறப்பு

என்ற நாலடியும் ஒத்திருக்கின்றன. கண்ணை மூடுவதைச் சாவுக்கும் கண்ணைத் திறப்பதைப் பிறப்புக்கும் உவமான மாகக் கூறியிருக்கின்றன.

தினைத்துணை நன்றிசெயுனும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரிவார்

என்பது திருக்குறள்.

தினை அனைத்தே ஆயினும் செய்த நன்று உண்டால்
பனை அனைத்தா உள்ளுவர் சான்றோர்.

என்பது நாலடியார். இவைகள் இரண்டும் ஒரே கருத்தைக் கொண்ட செய்யுட்கள்.

இவ்வாறு நாலடியாரிலே திருக்குறளின் கருத்துக்கள் பலவற்றைக் காணலாம். நாலடியாரைப் படிப்போர் அவை களைக் கண்டுணரலாம்.

**நம்பிக்கை, பழக்க வழக்கங்கள்**

நாலடியார் காலத்திலே தமிழகத்து மக்களிடம் குடி கொண்டிருந்த பல நம்பிக்கைகளையும், பழக்க வழக்கங்களை யும் இந் நூலிலே காணலாம்.

தர்க்கமும், சோதிடமும் பயனற்றவை, அவைகளிலே நம்பிக்கை வைப்பதால் பயன் இல்லை. தர்க்க நூலைப் படித்துக்கொண்டு பொழுது போக்குவதனால் எந்த நன்மை யையும் அடைந்துவிட முடியாது; சோதிடம் பார்த்துத் தம் வாழ்க்கையைப் பற்றித் தெரிந்துகொள்ள முடியாது. சோதிடம் பார்ப்பதால்—அதை நம்புவதால்—தம் வாழ்க்கை யிலே இன்ப துன்பங்களைத் தேடிக்கொள்ள முடியாது. தருக் கத்தையும், சோதிடத்தையும் நம்புகின்றவர்கள் பைத்தியக் காரர்கள்; அவர்களைக் காட்டிலும் அறிவற்றவர்கள் எவரும் இல்லை.

> சத்தமும் சோதிடமும் என்றாங்கு இவைபிதற்றும்
> பித்தரில் பேதையார் இல் (பா. 52)

என்பது மேலே கூறிய கொள்கையை வலியுறுத்துகின்றது.

பாம்பு மந்திரத்திற்குக் கட்டுப்படும் என்று நம்பினர். மந்திரித்த திருநீற்றை வீசினால் படமெடுத்தாடும் பாம்பு அடங்கிவிடுமாம். படத்தைச் சுருக்கிக் கொள்ளுமாம். 'இடுநீற்றால் பை அவிந்த நாகம்;' (பா. 66) முன்னே போட்ட திருநீற்றால் படம் அடங்கிய பாம்பு' என்பது இதை உணர்த்துகின்றது.

நாலடியார் காலத்திலே நல்ல நாள் பார்த்து அந் நாளிலே திருமணம் செய்யும் வழக்கம் இருந்தது. திருமணக் காலத்தில் பலரும் அறியும்படி வாத்தியங்கள் முழங்கும்.

> பல்லார் அறியப் பறையறைந்து நாள்கேட்டுக்
> கல்யாணம் செய்து கடிபுக்க மெல்இயல்,

பலரும் அறியும்படி பறையடித்து, நல்ல நாள் கேட்டு, கல்யாணம் புரிந்துகொண்டு மனைக்குள் புகுந்த மெல்லிய தன்மையுடையவள்.

பறையடிப்பதிலே மணப்பறை, பிணப்பறை என்று இரண்டு வகைப் பறைகள் உண்டு; மணம் செய்யும்போது அடிக்கும் பறை மணப்பறை; இறந்தவர்க்காக அடிக்கப்படும் பறை பிணப்பறை.

மன்றம் கறங்க மணப்பறை ஆயின
அன்றுஅவர்க்கு ஆங்கே பிணப்பறையாய்ப் பின்றை
ஒலித்தலும் உண்டாம்.

கல்யாண மண்டபம் முழுதும் ஒலிக்கும்படி மணப்பறையாக அடிக்கப்பட்ட பறை, அன்றே, அவருக்கு, அவ்விடத்திலே பிணப்பறையாக மாறி ஒலிக்கவும் கூடும்.

தீவினை செய்தவர்கள் தாம் செய்த தீவினைகளின் பயனை மீண்டும் பிறந்து அனுபவிப்பார்கள். இந்த நம்பிக்கை நாலடியார் படால்களில் காணப்படுகின்றது.

அக்கே போல் அங்கை ஒழிய விரல் அழுகித்
துக்கத் தொழுநோய் எழுபவே,—அக்கால்
அலவனைக் காதலித்துக் கால்முரித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்

சங்குமணியைப் போன்ற வெள்ளையான எலும்புடன் உள்ளங்கை மாத்திரம் இருக்க, ஏனைய விரல்கள் எல்லாம் அழுகித் துன்பத்தைத் தரும் தொழுநோயால் வருந்துவர். முன்பிறப்பிலே நண்டைக் காதலித்து அதன் காலை முரித்துத் தின்ற பழவினையின் கொடுமை வந்தால் இவ்வாறு துன்புறுவர். தொழுநோய்—குட்ட நோய். தொழு நோய்க்குக் காரணம் பழந்தீவினைதான் என்று உரைத்தது இச்செய்யுள்.

சீதேவி, மூதேவி, கலைமகள், இலக்குமி, இந்திராணி, சிவன், திருமால், கூற்றுவன் முதலிய தெய்வங்கள் நாலடியாரிலே காணப்படுகின்றன.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலே இன்றும் நாலடியார் ஒரு சிறந்த நூலாகக் காணப்படுகின்றது. இந்நூலிலே கூறப்படும், நீதிகளும், அறங்களும், அனைவர்க்கும் பொதுவானவை.

# 19. திருக்குறள்

திருக்குறளின் ஆசிரியர் திருவள்ளுவர்; பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலே தலை சிறந்து விளங்குவது திருக்குறள். இந்நூல் வரிசையால் முப்பால் என்ற பெயரால் திருக்குறள் குறிக்கப்பட்டிருக்கிறது; இந் நூல் வரிசையிலே முதலில் தோன்றியது திருக்குறள். பதினெண் கீழ்க்கணக்கில் உள்ள, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, நான்மணிக் கடிகை, திரிகடுகம், ஏலாதி, முதுமொழிக் காஞ்சி, பழமொழி, நாலடியார் ஆகியவைகள் எல்லாம் திருக்குறளுக்குப் பின் தோன்றிய நூல்களாகத்தான் இருக்க வேண்டும். திருக்குறளின் கருத்துக்கள் பல இந் நூல்களிலே காணப்படுகின்றன.

இன்று தமிழில் உள்ள நூல்களிலேயே திருக்குறள்தான் உலகப் புகழ்பெற்ற நூலாக விளங்குகின்றது. உலக மக்கள் அனைவரும் திருக்குறளைப் போற்றுகின்றனர். அதில் உள்ள உயர்ந்த கருத்துக்களைப் பாராட்டுகின்றனர். ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்தோன்றிய திருக்குறளில் உள்ள பல அறங்கள் இன்றைக்கும் பொருந்துவனவாயிருப்பது இதற்கொரு காரணம்.

அன்றியும் திருக்குறளின் பெருமைக்கு மற்றொரு சிறந்த காரணம் உண்டு. இந்நூலிலே கூறப்படும் கருத்துக்கள் உலக மக்கள் அனைவரும் ஒத்துக்கொள்ளக் கூடியவை. இந்நூல் குறிப்பிட்ட ஒரு மதத்தினர்க்கோ,

ஒரு இனத்தினர்க்கோ, ஒரு நாட்டினர்க்கோ, ஒரு மொழியினர்க்கோ என்று செய்யப்படவில்லை. மனித சமூகம் முழுவதற்கும்—உலக மக்கள் எல்லோருக்கும் பொதுவாகச் செய்யப்பட்டதாகும். இதனாலேயே இன்று திருக்குறள் உலகப் பொது நூல் என்று கொண்டாடும்படி சிறந்து விளங்குகின்றது.

தமிழிலே முதல் முதல் தோன்றிய நீதி நூல் திருக்குறள் தான். வட மொழியிலே ஸ்மிருதிகள் பல உண்டு. அவைகள் மக்கள் இன்னின்ன காரியங்களைச் செய்ய வேண்டும்; இன்னின்ன காரியங்களைச் செய்யக் கூடாது; என்று கட்டளையிடுகின்றன. அந்நூல்களிலே, இல்லறத்தான் கடமை, துறவிகளின் கடமை, அரசியல் அறங்கள் முதலியவைகள் கூறப்படுகின்றன. அவைபோன்ற நூல் தமிழிலே திருக்குறளுக்கு முன் ஒன்றேனும் இல்லை.

திருக்குறளை வட மொழியிலேயுள்ள ஸ்மிருதிகளுக்கு ஒப்பிடலாம். ஆனால் ஒருவகையிலே அவைகளை விட உயர்ந்து நிற்கின்றது திருக்குறள். ஸ்மிருதிகளில் கூறப்படும் நீதிகள் அனைத்தும் வருணாஸ்ரம தருமத்தை அடிப்படையாகக் கொண்டவை. சாதிக்கொரு நீதி கூறுவன. திருக்குறளோ மனித சமுதாயத்தை ஒன்றெனக் கருதி, மக்கள் அனைவர்க்கும் பொதுவான நீதிகளையே கூறுகின்றது. இதுதான் திருக்குறளுக்குள்ள தனிச் சிறப்பு.

திருக்குறளின் மாண்பைக் காட்ட அதற்கு அமைந்திருக்கும் பெயர்களே போதும். திருக்குறளுக்கு ஒன்பது பெயர்கள் அமைந்திருக்கின்றன. வேறு எந்த அற நூல்களுக்கும் இத்தனை பெயர்கள் இல்லை.

1. திருக்குறள். 2. உத்தரவேதம். 3. திருவள்ளுவர். 4. பொய்யாமொழி. 5. வாயுறை வாழ்த்து. 6. தெய்வ நூல். 7. பொதுமறை. 8. முப்பால். 9. தமிழ் மறை. இவைகளை திருக்குறளைக் குறிக்கும் ஒன்பது பெயர்கள்

சீரார் திருக்குறள், உத்தர
வேதம், திருவள்ளுவர்,
பேரார் பொய் யாமொழி,
வாயுறை வாழ்த்துப், பெருந் தெய்வநூல்,
ஊரார் பொதுமறை, முப்பால்,
தமிழ் மறை, ஒன்பதும் நல்
காராளர் கற்றுணர் செய்யுட்கு
நாமங்கள் கார்குழலே

இப்பழம் பாட்டினால் அவ்வொன்பது பெயர்களையும் காணலாம்.

## திருக்குறள் அமைப்பு

திருக்குறள், குறள் வெண்பாக்களால் அமைந்தது. இரண்டே அடிகளால் அமைந்து ஒருவகை வெண்பாவுக்குக் குறள் வெண்பா என்று பெயர். பெரிய செய்யுட்களைவிடச் சிறிய செய்யுட்கள் மக்கள் மனத்திலே அப்படியே ஒட்டிக் கொள்ளும். ஆதலால்தான், மக்கள் பின்பற்றி நடக்க வேண்டிய நல்லுரைகளை நவில வந்த வள்ளுவர், சிறிய குறள் வெண்பாக்களால் தமது நூலை இயற்றினார். இதுவே அவரது உயர்ந்த அறிவுக்கு ஒரு எடுத்துக் காட்டு.

திருக்குறளிலே ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள் வெண்பாக்கள் அமைந்திருக்கின்றன. இவைகள் பத்துப் பத்துப் பாடல்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. பத்துப் பாடல்கள் கொண்டது ஒரு அதிகாரம். அவைகள் நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்களாகக் காட்சி யளிக்கின்றன. ஒவ்வொரு அதிகாரத்திற்கும் தலைப் பெயர்கள் உண்டு; ''1. கடவுள் வாழ்த்து. 2. வான் சிறப்பு. 3. நீத்தார் பெருமை. 4. அறன் வலியுறுத்தல். 5. இல்வாழ்க்கை. 6. வாழ்க்கைத் துணைநலம். 7. மக்கட்பேறு. 8. அன்புடைமை'' என்று இவ்வாறு 133 அதிகாரங்களுக்கும் தலைப் பெயர்கள் உண்டு.

திருக்குறள் மூன்று பதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. இதனால்தான் இதற்கு முப்பால் என்று பெயர். முதற் பகுதி அறத்துப்பால். இதில் இல்லறம், துறவறம் இரண்டைப் பற்றியும் முப்பத்தெட்டு அதிகாரங்களில் கூறப்படுகின்றன.

இரண்டாவது பகுதி பொருட்பால். இதிலே, அரசாள் வோர்க்கு வேண்டிய தகுதிகள்; அமைச்சருக்கு வேண்டிய தகுதிகள்; அரசாங்கத்திற்கு வேண்டிய அங்கங்கள்; பொரு ளீட்ட வேண்டிய முறை; அரசாட்சியின் கடமை; குடி மக்களின் கடமை; ஆகிய அனைத்தும் வலியுறுத்தப்படு கின்றன. எழுபது அதிகாரங்களில் இச் செய்திகள் கூறப்படு கின்றன.

மூன்றாவது பகுதி காமத்துப்பால். இதிலே பண்டைத் தமிழர்களின் குடும்ப வாழ்க்கை முறையைப் பற்றிக் கூறப் படுகின்றது. ஒரு ஆணும், பெண்ணும் ஒருவரை ஒருவர் கண்டு காதல் கொள்வது; அவர்கள் உள்ளம் ஒன்றுபட்டுக் காதலனும், காதலியுமாய் மறைந்து வாழ்வது; பிறகு அவர்கள் எல்லோரும் காண மணம் புரிந்துகொண்டு இல்லறம் நடத்துவது. இதுவே பழந்தமிழர் வாழ்க்கை முறை. இப் பண்பாட்டையே, களவியல், கற்பியல் என்று இரண்டு பகுதியாகப் பிரித்துக் கூறுகின்றது. காமத்துப் பாலில் உள்ள அதிகாரங்கள் இருபத்து ஐந்து.

இவ்வாறு அமைந்துள்ள திருக்குறளிலே, வள்ளுவர் தம் காலத்திலிருந்த எல்லாப் பொருள்களைப்பற்றியும் விளக்கி யிருக்கின்றார். இவ்வுண்மையை,

> எல்லாப் பொருளும் இதன் பால் உள இதன் பால்
> இல்லாத எப்பொருளும் இல்லையால்

என்று ஒரு புலவர் பாராட்டிப் பாடியிருக்கின்றார்.

மற்றொரு புலவர் "ஆயிரத்து முந்நூற்று முப்பது குறட் பாக்களையும் படித்தால் போதும்; சிறந்த தமிழ்ப் புலவராகி

விடலாம். மற்றொருவரிடத்திலே வேறொரு நூலையும் பாடங் கேட்க வேண்டியதில்லை'' என்று திருக்குறளைப் போற்றி யிருக்கின்றார்.

திருக்குறளைப் போன்ற அதிகார அமைப்பும்; பால் அமைப்பும் கொண்ட நூல் திருக்குறளுக்கு முன் வேறு ஒன்றுமேயில்லை.

### திருவள்ளுவர்

திருக்குறளின் ஆசிரியர் திருவள்ளுவர். அவர் ஒரு மாபெரும் புலவர்; பல நூல்களையும் கற்றறிந்தவர்; உலகச் செய்திகள் பலவற்றையும் உணர்ந்தவர். அவர் காலத்தி லிருந்த சமுதாய நிலை; அரசியல் அமைப்பு; எல்லாவற்றை யும் நன்றாக அறிந்தவர். மனித சமுதாயம் நன்றாக வாழ வேண்டும் என்னும் அன்பும் கருணையும் உள்ளவர்; தனித் தனி ஆண் பெண்கள் அனைவரும், மனிதத் தன்மையுடன், ஒழுக்கங் குன்றாமல் உயர்ந்த நிலையிலே வாழவேண்டும் என்னும் கருத்துள்ளவர்.

திருவள்ளுவருடைய பிறப்பு வளர்ப்பு வரலாற்றைப் பற்றி இறுதியாக ஒன்றும் கூற முடியவில்லை.

யாளிதத்தன் என்னும் அந்தணன், ஒரு சண்டாளப் பெண்ணை மணந்து திருவள்ளுவர் முதலிய எழுவரைப் பெற்றான் என்பது ஒரு கதை. இது ஞானாமிர்தம் என்னும் நூலில் காணப்படுகின்றது.

பகவன் என்னும் அந்தணன், ஆதி என்னும் புலைச்சியை மணந்தான். ஏழு மக்களைப் பெற்றான். அவன் ஆதியுடன் யாத்திரை போகும்போது வழியிலேயே மக்களைப் பெற்றான். ஒவ்வொரு பிள்ளையையும் பிறந்த விடத்திலே அப்படி அப்படியே போட்டுவிட்டு ஆதியும், பகவனும் போய்விட்டனர். அப் பிள்ளைகளைப் பார்த்தவர்கள் எடுத்து வளர்த்தனர்,

இவ்வாறு பிறந்த பிள்ளையே வள்ளுவர். அவர் மயிலாப்பூரில் போடப்பட்டார்; ஒரு வள்ளுவன் அவரை எடுத்து வளர்த்தான். அதனால் வள்ளுவர் என்று பெயர் பெற்றார். இது ஒரு கதை. இதற்குக் கபிலர் அகவல் என்னும் பிற்காலத்துச் சிறு நூலே ஆதாரம்.

திருவள்ளுவர் மதுரையிலிருந்தவர் என்று திருவள்ளுவர் மாலையில் ஒரு செய்யுளில் காணப்படுகின்றது.

திருவள்ளுவர், வள்ளுவர் மரபைச் சேர்ந்தவர்தான். வள்ளுவர் மரபைச் சேர்ந்தவர் என்று இகழ்ந்துரைப்பவன் அறிவற்றவன்; அவர் அறிவாளி, ஒழுக்கத்தால் உயர்ந்தவர்; ஆதலால் அவரைப் போற்றுவதே அறிஞர் கடமை. என்ற கருத்து திருவள்ளுவ மாலைச் செய்யுள் ஒன்றிலே காணப் படுகின்றது.

இவ்வாறு திருவள்ளுவர் வரலாற்றைப் பற்றி முரண் பட்ட கருத்துக்கள் காணப்படுகின்றன. அவருடைய உண்மை வரலாற்றை அறிவதற்கு இடமில்லை.

அவர் பிறப்பு வளர்ப்பு எப்படியாயினும், அவர் தமிழ் நாட்டில் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகத் தெய்வப் புலவர் என்ற பெயர் பெற்று வாழ்கின்றார். திருவள்ளுவரை நான்முகன் என்று போற்றி யிருக்கின்றனர், அவரைப் பொய்யா மொழியார் என்று பாராட்டி யிருக்கின்றனர். திருக்குறளைத் தமிழ் வேதம் என்று கொண்டாடி வருகின்ற னர். திருக்குறளையும் பொய்யா மொழி என்று பாராட்டினர்; பாராட்டுகின்றனர்.

திருவள்ளுவர் தமிழ் நாட்டிலே பிறந்தவர்; சாதி மத பேதம் பாராட்டாதவர்; மனித சமுதாயத்தையும், உலகையும் ஒன்றாகக் கருதிய ஒரு உத்தமத் தமிழ்ப் பெரியார்; இதுதான் நாம் அவரைப் பற்றி அறியும் உண்மை வரலாறு.

**பல நூல்களின் சாரம்**

உயர்ந்த அறங்களை யெல்லாம் ஒன்று திரட்டி உரைக்கும் நூல் திருக்குறள். பண்டைத் தமிழ்ப் புலவர்கள் பலர் திருக்குறளின் மாண்மைப் பாராட்டிப் பாடியிருக்கின்ற னர். திருக்குறளின் பெருமையைத் தெரிந்து கொள்ளுவதற்கு அவர்கள் வாய் மொழிகளே போதுமானவை.

சாற்றிய பல்கலையும் தப்பா அருமறையும்
போற்றி உரைத்த பொருள்எல்லாம்—தோற்றவே
முப்பால் மொழிந்த முதற்பாவலர் ஒப்பார்
எப்பா வலரினும் இல்

பல சாத்திரங்களும், வேதங்களும் கூறியிருக்கின்ற பொருள் களை யெல்லாம், எல்லோரும் தெரிந்து கொள்ளும்படி மூன்று பகுதியாக வகுத்துக் கூறிய திருவள்ளுவர் முதற்பாவலர் ஆவார். அவரைப் போன்ற கவிஞர் வேறு எம் மொழிக் கவிஞர்களிலும் இல்லை.

(ஆசிரியர் நல்லந்துவனார்.)

செய்யா மொழிக்கும் திருவள்ளுவர் மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருள் ஒன்றே

வேதத்திற்கும், திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளுக்கும் பொருள் ஒன்றுதான். (வெள்ளி வீதியார்)

எப்பொருளும் யாரும் இயல்பின் அறிவுறச்
செம்பிய வள்ளுவர்தாம் செப்பவரும்—முப்பாற்குப்
பாரதம், சீராம கதை, மனுப் பண்டைமறை
நேர்வன; மற்றில்லை நிகர்.

எல்லாப் பொருள்களையும் எல்லோரும் அறிந்துகொள்ளும்படி சொல்லி யிருக்கின்ற திருவள்ளுவருடைய திருக்குறளுக்கு பாரதம், இராமாயணம், மநுதர்மம், வேதம் இவைகளையே ஒத்த நூல்களாகக் கூறலாம்; இவைகளைத் தவிர வேறு ஒன்றையும் திருக்குறளுக்குச் சமமாகக் கூறமுடியாது.

(பாரதம் பாடிய பெருந்தேவனார்)

வேத விழுப்பொருளை வெண்குறளால்: வள்ளுவனார்
ஓத வழுக்கற்றது உலகு

வேதத்திலே உள்ள உயர்ந்த பொருள்களை யெல்லாம், திருவள்ளுவர், திருக்குறளின் மூலம் சொல்லியிருப்பதனால் உலகத்தாரின் ஒழுக்கம் கெடாமல் காப்பாற்றப்பட்டது.

வேதப் பொருளை விரகால் விரித்து உலகோர்
ஓதத் தமிழால் உரை செய்தார்

வேதத்தில் உள்ள பொருள்களை உலகத்தார் தெரிந்து கொள்ளும்படி திறமையுடன் விரிவாகத் தமிழிலே எழுதினார் திருவள்ளுவர். (மதுரைப் பெருமருதனார்)

மேலே காட்டியவைகள் அனைத்தும் பழந்தமிழ்ப் பாடல்கள். திருக்குறளை ஆராய்ந்து கற்றறிந்த புலவர்களால் பாடப்பட்டவை. இவைகள் திருவள்ளுவ மாலை என்னும் நூலிலே காணப்படுகின்றன.

தேவர் குறளும் திருநான் மறை முடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒருவாசகம் என்று உணர்.

திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள்; வேதங்களின் முடிவுகளைக் கூறும் உபநிடதங்கள்; சம்பந்தர், அப்பர், சுந்தரர் இம்மூவரும் பாடிய தேவாரங்கள்; வேதாந்த சூத்திரம் என்று சொல்லப்படும் வியாச சூத்திரம்; திருக்கோவையார்; திருவாசகம்; திருமூலரால் பாடப்பட்ட திருமந்திரம் ஆகிய இவைகள் எல்லாம் ஒரே பொருளைப்பற்றிக் கூறும் நூல்கள் என்று; தெரிந்து கொள்ளுக.

இது அவ்வையார் பாடல். இப்பாடலுக்கு வேறு விதமாகவும் பொருள் கூறுவோர் உண்டு.

மேலே காட்டியவைகளிலிருந்து ஒரு உண்மையை நாம் காணலாம். திருவள்ளுவர் பல நூல்களையும் கற்றறிந்தவர்; வடமொழி நூல்களையும் கற்றறிந்தவர் என்பதுதான் அவ்வுண்மை,

வள்ளுவர் பல நூல்களையும் கற்றறிந்தவர். பல நூல்களின் கருத்துக்களை யெல்லாம் திரட்டியே திருக்குறளை இயற்றினார். இவ்வுண்மையை அவருடைய வாய் மொழிகளே காட்டுகின்றன.

ஒழுக்கத்து நீத்தார் பெருமை, விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு

நல்லொழுக்கத்திலே நிலைத்து நின்று, துறந்தவர்களின் பெருமையைச் சிறப்பாகப் புகழ்ந்துரைப்பதே நூல்களின் முடிவாகும்.

பகுத்துண்டு பல் உயிர் ஓம்புதல், நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.

பலருக்கும் பகுத்துக் கொடுத்துத் தானும் உண்டு, பல உயிர் களையும் கொல்லாமல் காப்பாற்றுவதே அறநூலோர் தொகுத்துக் கூறிய அறங்கள் அனைத்திலும் சிறந்த அறமாகும்.

மிகினும் குறையினும் நோய் செய்யும், நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று.

மருத்துவ நூலோரால் வாதம், பித்தம், சிலேத்துமம் என்று எண்ணப்பட்ட மூன்றும் தம் அளவில் அதிகமானாலும், குறைந்து போனாலும் நோயைத் தரும்.

இந்த மூன்று குறள்களுமே, வள்ளுவர் பல நூல்களையும் கற்றறிந்தவர் என்பதற்குச் சான்றாகும். திருவள்ளுவர் எந்த நூல்களையும் படிக்கவில்லை; எந்த நூல் பொருள்களையும் பின்பற்றவில்லை; எல்லாப்பொருள்களைப்பற்றியும் தானே முழுதுணர்ந்து திருக்குறளை இயற்றினார் என்று கூறு வோர்க்குச் சரியான விடை யளிக்கின்றன.

**பழந்தமிழ் முறை**

திருவள்ளுவர் தமது நூலைப்பழந்தமிழர் பண்பைப் பின் பற்றியே செய்திருக்கின்றார். முன்னோர் முறைக்கு மாறாக

நூலியற்றும் வழக்கம் பழங்காலத்தில் இல்லை. அறம், பொருள், இன்பம் மூன்றும் பொருந்தச் செய்யுள் இயற்றுவர்; இம்மூன்றைப் பற்றியும் நூலியற்றுவர்; இதுவே பழந்தமிழர் முறை.

திருவள்ளுவர் இந்த முறையைப் பின்பற்றியே திருக்குறளை முப்பாலாக இயற்றினார். அறத்துப் பால், பொருட்பால், காமத்துப் பால் என்று மூன்று பகுதியாகத் திருக்குறள் அமைந்திருக்கின்றது. இம்மூன்றும் அறம் பொருள் இன்பங்களைப் பற்றிக் கூறுவன.

பழந்தமிழ் நூல் முறையை அறியாதவர்கள், திருவள்ளுவர் காமத்துப்பாலை ஏன் பாடினார் என்று ஒரு ஐயத்தைக் கிளப்புவர். காமத்துப்பாலில் என்ன இருக்கின்றது? அறமா? அரசியலா? ஒன்றுமில்லையே; பேரறிஞரான வள்ளுவர் காமத்தைப் பற்றி இருபத்தைந்து அதிகாரங்களிலே கூறுகின்றார். இவற்றால் என்ன பயன்? இவவாறு கேட்போர் சிலர் உண்டு.

காமத்துப்பாலில் தமிழர்களின் உயர்ந்த பண்பாடு அமைந்து கிடக்கின்றது. ஆணும், பெண்ணும் அன்புடன் இணைந்து வாழ்வதால்தான் உலகம் நிலைத்து நிற்கின்றது; உலக மக்கள் வாழ்கின்றனர்; வளர்கின்றனர்; மக்களிடையிலே அன்பும், கட்டுப்பாடும், சமுதாய நீதிகளும் நிலைத்து வளர்ந்து வருகின்றன.

ஆண் பெண்களின் ஒன்றுப்பட்ட உண்மையான உறவினால்தான் தனித்தனிக் குடும்பங்கள் தோன்றின. தனித்தனி குடும்ப வாழ்வு மக்களிடையே நிலைத்த பிறகு தான் அறமும் அரசியலும் தோன்றின. மக்களுடைய குடும்ப வாழ்விலே இன்பமும், ஒழுக்கமும் வளர்வதற்கே, அறநெறியும், அரசியலும் வேண்டியிருந்தன. அறநெறியிலே நிற்பதற்கும், இன்பத்துடன் வாழ்வதற்கும் செல்வம் இன்றியமையா

தது. இத்தகைய செல்வத்தை ஈட்டுவதற்கும், உண்டாக்கு வதற்கும் துணைசெய்வது அரசியல் தான். அரசியல் இன்றேல் செல்வம் இல்லை; பொருள் இல்லை.

அறம், பொருள் அனைத்தும் மக்கள், இன்ப வாழ்வுக்குத் தாம் என்பதே தமிழர் கொள்கை. ஆதலால்தான் தமிழ் நூல்கள் அனைத்தும் அறம் பொருள் இன்பங்களைப் பற்றியே கூறுகின்றன. சங்க நூல்களிலே இன்பத்தைப்பற்றிக் கூறும் நூல்களிலே ஏராளம்; அகப்பொருளைப்பற்றிக் கூறும் செய்யுட்களே அதிகம்.

வள்ளுவரும், அறமும் பொருளும் இன்பத்தைப் பெறு வதற்கே என்ற கருத்தில்தான் திருக்குறளை இயற்றினார். அதனால்தான் இன்பத்தைப் பற்றிக் கூறும் காமத்துப்பாலை மூன்றுவது பகுதியாகக் கூறினார். இவ்வுண்மையையும், தமிழ் நூல் மரபையும் அறியாதவர்களே, வள்ளுவர் காமத்துப் பாலை ஏன் இயற்றினார் என்று கேட்பர். இவர்கள் கேள்வி தவறு; தமிழர் பண்பாட்டை அறியாமல் எழுந்தது என்று விட்டுவிட வேண்டும்.

**உலகப் பொது நூல்**

திருக்குறளிலே கூறப்படும் அறங்கள் உலகோர் அனை வருக்கும் பொதுவானவை. எல்லா மக்களும் ஒப்புக் கொள்ளக் கூடியவை. இவ்வுண்மையைக் காட்டும் சில குறட் பாடல் களை மட்டும் பார்ப்போம்.

> வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன், வான்உறையும்
> தெய்வத்துள் வைக்கப்படும்

இவ்வுலகில் இல்லறத்திலே இருந்து வாழவேண்டிய முறைப் படி வாழ்கின்றவன் சிறந்தவன்; அவன் வானுலகிலே உள்ள தேவர்களிலே ஒருவனாக வைத்து மதிக்கப் படுவான்.

> அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார்
> என்பும் உரியர் பிறர்க்கு

அன்பில்லாதவர்கள் எல்லாப் பொருள்களையும் தம்முடைய இன்பத்திற்கே உரியதாகக் கொள்ளுவார்கள்; அன்புள்ளவர் தமது எலும்பையும் பிறர் நன்மைக்கு உரிமை யாக்குவார்.

ஊருணி நீர்நிறைந்து அற்றே உலகுஅவாம்
பேர் அறிவாளன் திரு

உலகத்தார் தன்னை விரும்பும்படி நடந்து கொள்ளுகின்ற பெரிய அறிவுள்ளவனுடைய செல்வம், ஊராரால் உண்ணப் படும் குளத்திலே நீர் நிறைந்திருப்பது போலாகும்.

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்து அற்றால் செல்வம்
நயன் உடையான்கண் படின்.

நல்ல பண்புகளை உடையவனிடத்திலே செல்வம் சேர்ந் திருக்குமாயின், அது பயன் தரும் மரம் ஒன்று ஊர் நடுவிலே பழுத்திருப்பதுபோல ஆகும்.

மருந்து ஆகித் தப்பா மரத்துஅற்றால் செல்வம்
பெருந்தகையான்கண் படின்.

சிறந்த குணம் உள்ளவனிடம் செல்வம் தோன்றியிருக்கு மாயின், அது எல்லா உறுப்புக்களும் மருந்தாகி நின்று தவ றாமல் மக்களுக்குப் பயன்படும் மரம் போன்றதாகும்.

இல்லற வாழ்க்கை நடத்துவோன், இல்லறத்திலே செய்யவேண்டிய கடமைகளை யெல்லாம் தவறாமல் செய்ய வேண்டும்; அவன் எல்லோரிடமும் அன்பு காட்ட வேண்டும்; அவனுடைய செல்வம் ஊருணிபோல்—நடுவூரில் பழுத்திருக் கும் மரம்போல்—எல்லா உறுப்புக்களும் மருந்துக்குப் பயன் படும் மரம்போல்—அனைவருக்கும் பயன்பட வேண்டும். இவ்வுண்மைகளையே மேற்காட்டிய குறட்பாக்கள் கூறின. இல்லறத்தார்க்கு உரைத்த இவ்வறங்களை ஏற்றுக் கொள்ளா தவர்கள் யார்?

உற்றநோய்நோன்றல், உயிர்க்கு உறுகண்செய்யாமை,
அற்றே தவத்திற்கு உரு.

தமக்கு வந்த துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளுதல், மற்ற உயிர்களுக்குத் துன்பம் செய்யாமை; அவ்வளவே தவத்தின் உருவமாகும்.

தவமும் தவம் உடையார்க்கு ஆகும்; அவம்அதனை
அஃது இலார் மேற்கொள் வது.

உண்மையான தவநெறியில் வாழ்வோர்க்கே தவக்கோலம் தகுந்ததாகும். நவநெறியைப் பின்பற்றாதவர் தவக்கோலம் பூண்பதால் பயன் இல்லை.

மழித்தலும் நீட்டலும் வேண்டா, உலகம்
பழித்தது ஒழித்து விடின்.

உயர்ந்தவர்களால் வெறுக்கப்பட்ட தீயொழுக்கங்களை விட்டுவிட்டால், தலையை மழுங்கச் சிதைத்துக் கொள்ளுவதும், தலைமயிரைச் சடையாக்கி நீட்டி வளர்த்துக் கொள்ளுவதும் ஆகிய வெளி வேடங்கள் வேண்டாம்.

தம்முடைய துன்பத்தைத் தாங்கிக் கொள்வது; ஏனைய உயிர்களுக்குத் துன்பம் செய்யாமை; உண்மையான தவம்; வெளி வேடங்கொண்டு மக்களை ஏமாற்றாமல் உண்மை ஒழுக்கமுடன் வாழ்வது; இவைகளே துறவிகளுக்கு வேண்டிய ஒழுக்கங்கள்; என்று மேற்காட்டிய குறள்கள் உரைத்தன. இவைகளை மறுக்கும் அறிஞர் ஒருவரும் இல்லை.

முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறை என்று வைக்கப்படும்.

நீதிமுறை செய்து குடிமக்களைக் காப்பாற்றும் மன்னவன், மக்களுக்குக் கடவுள் என்று சிறப்பாக வைக்கப்படுவான்.

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக் கீழ்த் தங்கும் உலகு.

காது வெறுக்கும்படி, மக்களால் குறை கூறப்படும் சொற்களையும் பொறுத்துக் கொண்டிருக்கும் வேந்தனுடைய குடைநிழலில்தான் உலகம் நிலைத்திருக்கும். குறைகூறுவோர்

மீது கடுமையான அடக்குமுறையை ஏவி விடுகின்ற மன்னவன் ஆட்சி நிலைக்காது.

குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு.

குடிகளின் கருத்தை ஆதரித்து நின்று. செங்கோல் செலுத்தும் பெரிய நாட்டின் மன்னனுடைய அடியை உலகம் ஆதரித்து நிற்கும்.

இவைகள் தனிப்பட்ட அரசனுக்குக் கூறப்பட்ட அறங்கள். வள்ளுவர் காலத்திலே குடிமக்கள் அரசாங்கம் இல்லை. மன்னர்களின் தனி அதிகார ஆட்சிதான் நிலவி யிருந்தது. ஆதலால் அரசனுக்கு அறவுரைகள் கூறியிருக் கின்றார்.

அரசன் மக்களிடம் நீதி முறை தவறாமல் நடந்து கொள்ள வேண்டும்; குடிகள் கூறும் குறைகளைக் கண்டு சீறிவிழக் கூடாது;பொறுமையோடு கேட்டு, அக்குறைகளைப் போக்க வேண்டும்; குடிகளின் கருத்தைத் தழுவி ஆட்சி நடத்த வேண்டும்; இக் கருத்துக்களையே மேலே காட்டிய குறள்கள் வலியுறுத்தின. இக் கருத்துக்கள் குடி அரசுக்கும் ஏற்றவை. எல்லா நாட்டு அறிஞர்களும் ஒத்துக்கொள்ளக் கூடியவை. இவற்றைத் தவறு என்று மறுக்கும் அரசியல் அறிஞர்கள் ஒருவரும் இல்லை.

எப் பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப் பொருள் காண்பது அறிவு.

எப்பொருளை யார் யார் சொல்லக் கேட்டாலும் அப் பொருளை அப்படியே ஒப்புக்கொள்ளாமல் அதன் உண்மைப் பொருளை ஆராய்ந்து, உண்மையானால் ஒப்புக்கொள்ள வேண்டும்; பொய்மையானால் தள்ளிவிட வேண்டும்; இது தான் சிறந்த அறிவாகும்.

எண்பொருள வாகச் செலச் சொல்லித் தான் பிறர்வாய்
நுண்பொருள் காண்பது அறிவு.

தான் உரைப்பனவற்றை, எளிதாகக் கேட்போர் உள்ளத்திலே பதியும்படி உரைத்து, பிறர் வாயிலிருந்து வரும் அரிய பொருளைத் தான் தெரிந்து கொள்ளுவதே அறிவுடைமை யாகும்.

எவ்வது உறைவது உலகம், உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு.

உலகம் எவ்வாறு நடைபெறுகின்றதோ அவ்வாறு உலகத் தோடு ஒன்றுபட்டு வாழ்வதே அறிவுஞடமையாகும்.

ஒவ்வொரு தனிப்பட்ட மனிதரும் இவ்வாறு சிறந்த அறிவுடன் விளங்குவார்களானால் ஒருவரை ஒருவர் ஏமாற்ற முடியாது; மக்களை மக்கள் எந்தத் துறையிலும் அடிமைப் படுத்தி ஆள முடியாது. அறிவுடைய மக்கள் ஏமாறமாட் டார்கள்; ஏமாற்றவும் மாட்டார்கள். அறிவைப்பற்றி வள்ளுவர் கூறியிருக்கும் கருத்து உலக மக்கள் எல்லோரா லும் ஏற்றுக்கொள்ளத்தக்கது.

தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்லது அமைச்சு.

செய்வதற்குரிய காரியத்தைத் தேர்ந்தெடுத்தல், அக்காரியம் வெற்றி பெறுவதற்கான வழிகளை ஆராய்ந்து செய்தல், ஒன்றைப்பற்றி இன்றைக்கொன்று, நாளைக்கொன்று என்று பேசாமல், இன்னதுதான் என்று முடிவாகத் துணிந்து கூறுதல் ஆகிய இவற்றில் வல்லவனே அமைச்சனாவான்.

இது அமைச்சர்க்கு வேண்டிய தகுதியைப் பற்றிக் கூறியது.

நட்டார்க்கு நல்லசெயலின் விரைந்ததே
ஒட்டாரை ஒட்டிக் கொளல்.

நண்பர்க்கு உதவி செய்வதைவிட எதிரிகளோடு சேராதவர் களைத் தம்முடன் சேர்த்துக்கொள்ளுவது விரைந்து செய்ய வேண்டிய காரியமாகும். இது சிறந்த அரசியல் தந்திர மாகும். ஆளுவோருக்கு உரைத்தது.

உறுபசியும், ஓவாப்பிணியும் செறுபகையும்
சேராது இயல்வது நாடு.

மிகுந்த பசியும், நீங்காத நோயும், அழிக்கின்ற பகையும் தன்னிடம் சேராமல் காத்துக்கொண்டு வாழும் நாடே சிறந்த நாடாகும்.

பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்து அலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு.

பல கருத்துள்ள கூட்டங்களும், உறவாடிக் கெடுக்கும் பகையும், ஆளுவோனைத் துன்புறுத்திக் கொல்லும் சிற்றரசர்களும் இல்லாத நாடே சிறந்த நாடாகும்.

பிணியின்மை, செல்வம், விளைவு, இன்பம், ஏமம்
அணிஎன்ப நாட்டிற்குஇவ் ஐந்து.

மக்கள் நோயில்லாமல் வாழ்வது, வேண்டிய செல்வப் பொருள், நல்ல உற்பத்தி, எல்லோரும் இன்புற்று வாழ்தல், சரியான பாதுகாப்பு இவ்வைந்தும் நிறைந்திருப்பதே ஒரு நாட்டிற்கு அழகாகும்.

ஒரு நல்ல நாடு எப்படி இருக்கவேண்டும் என்பதை இக் குறள்கள் விளக்கியிருக்கின்றன. செல்வமும், அமைதியும் குடிகொண்ட நாட்டு மக்கள்தான் இன்பமாக வாழ்வார்கள் என்ற கருத்தை இக் குறள்களிலே காணலாம்.

வெண்மை எனப்படுவது யாதுஎனின்; ஒண்மை
உடையம்யாம் என்னும் செருக்கு.

அறியாமை என்று அழைக்கப்படுவது யாதென்றால், ''நாமே சிறந்த அறிவுடையோம்'' என்று தங்மைத் தாமே பெரிதாக எண்ணிக்கொள்ளும் செருக்காகும்.

ஏவவும் செய்கலான் ; தான்தேறான் ; அவ்வுயிர்
போஓம் அளவும் ஓர் நோய்.

பிறர் சொல்வதையும் கேட்டுச் செய்யமாட்டான்; தானே அறிந்தும் செய்யமாட்டான்; அவ்வுயிர் ஒழியும் வரையிலும் இவ்வுலகிற்கு ஓர் நோயாகும்.

சொற்புத்தியும், சுயபுத்தியும் இல்லாதவனை மனிதன் என்று குறிப்பிடாமல் அவ்வுயிர் என்று அஃறிணையாகக் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

இவைகள் அறிவற்றவன் யாவன் என்பதைக் குறித்துரைக்கும் குறள்கள். இவ்வுண்மையை உலகினர் அனைவரும் ஏற்றுக்கொள்ளுகின்றனர்.

செல்லாமை உண்டேல் எனக்குரை ; மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை.

பிரிந்து செல்லாமல் இருப்பதானால், அதைப்பற்றி என்னிடம் சொல். பிரிந்து போய் விரைந்து வருகிறேன் என்று சொல்வாயானால், நீ வரும் வரையிலும் யார் உயிரோடு வாழ்ந்திருப்பார்களோ அவர்களிடம் அதைப்பற்றிச் சொல்.

இக்குறள் கற்புள்ள ஒரு பெண் தன் காதலனிடம் கொண்டிருக்கும் அன்பைக் காட்டும் குறள். ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்தால் உயிர் வாழ முடியாது என்ற முதிர்ந்த அன்புள்ளவர்கள்தான் சிறந்த காதலர்கள்; இல்லறத்திலே இன்பம் நுகர்வார்கள்; இல்லறத்தையும் நல்லறமாக இனிது நடத்துவார்கள். இக் கருத்தைக் கொண்டதே மேலே காட்டிய குறள்.

மேலே காட்டிய அறங்கள் அனைத்தும் உலகத்தார் ஒப்புக்கொள்ளும் பொது நீதிகள். எந்நாட்டினரும், எம் மதத்தினரும், எவ்வினத்தினரும், எம் மொழியினரும் ஏற்றுக் கொள்ளும் வகையிலே இவ்வறங்கள் அமைந்திருக்கின்றன. இத்தகைய பொது நீதிகள் நிரம்பியிருப்பதனால்தான் திருக்குறள் உலகப் பொது நூல் என்று பாராட்டப் படுகின்றது; திருவள்ளுவர் உலகப் புலவர் என்று போற்றப் படுகிறார்.

## வள்ளுவர் காலத் தமிழ் நாடு

திருவள்ளுவர் காலத்திலே தமிழ் மக்களிடம் கடவுள் நம்பிக்கை குடிகொண்டிருந்தது. உருவ வணக்கமும் இருந்தது. சாதி வேற்றுமைகள் இருந்தன. தமிழ் நாட்டில் வேத வேள்விகள் நடைபெற்றன. மறுபிறப்பு, நல்வினை,

தீவினை, ஊழ்வினை, சுவர்க்கம், நரகம், மோட்சம் முதலியவைகளிலே மக்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர்.

திருக்குறளின் முதல் அதிகாரம் கடவுள் வாழ்த்து, கடவுள் வாழ்த்தில் உள்ள பத்துக் குறள்களும் கடவுளை வணங்க வேண்டியது மக்கள் கடமை என்று வலியுறுத்துகின்றன.

அகரம் முதல எழுத்தெல்லாம்,. ஆதி
பகவன் முதற்றே உலகு.

எழுத்துக்கள் எல்லாம் அ என்ற எழுத்தைத் தலைமையாகக் கொண்டிருக்கின்றன. அதுபோல உலகம் முதல்வனாகிய கடவுளைத் தலைமையாகக் கொண்டிருக்கின்றது.

என்பது முதற் குறள். இது உலகம் கடவுள் படைப்பால் தோன்றியது; கடவுள் சக்தியாலேயே உலகம் இயங்கி வருகின்றது; என்ற கருத்தைக் கொண்டதாகும்.

இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகு இயற்றி யான்.

இவ்வுலகைப் படைத்த கடவுள், பிச்சை யெடுத்தாவது உயிர் வாழவேண்டும் என்று விரும்பி உயிர்களைப் படைத்திருப்பானாயின், அவனும் அவ் வுயிர்களையும் போலவே அலைந்து அழிக.

இக்குறளும் இவ்வுலகைப் படைத்தவன் கடவுள்தான் என்ற கருத்தை வலியுறுத்துகின்றது.

சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.

மழை பெய்யாவிட்டால் இவ்வுலகிலே தெய்வங்களுக்கும் திருவிழாவும் தினப்பூசையும் நடைபெறாது.

குறிப்பிட்ட சில நாட்களில் கொண்டாடுவது திருவிழா. இதற்கே சிறப்பு என்று பெயர். நாள்தோறும் நடைபெறுவது பூசனை. திருவிழாவை நைமித்திகம் என்றும், பூசனையை நித்தியம் என்றும் கூறுவர்,

வள்ளுவர் காலத்தில் தமிழகத்தில் உருவ வணக்கம் இருந்தது என்பதற்கு இக்குறள் ஒன்றே போதுமான சான்றாகும்.

மறப்பினும் ஒத்துக் கொளல் ஆகும், பார்ப்பான்
பிறப் பொழுக்கம் குன்றக் கெடும்.

வேதத்தை மறந்தாலும் மீண்டும் கற்றுக்கொள்ளலாம்; வேதம் கற்பவன் தன் பிறப்பிற்குரிய ஒழுக்கத்திலே தவறு வானாயின், அவன் குடிப் பெருமை அழியும்.

வள்ளுனர் காலத்திலே அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நால்வகைப்பிரிவுகளும், இன்னும் பல பிரிவுகளும் தமிழர் சமுதாயத்தில் இருந்தன. பிறப்பினால் உயர்வு தாழ்வு வேற்றுமைகளும் இருந்தன. இவ்வுண்மையை இக்குறளால் காணலாம்.

அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்.

அந்தணருடைய வேதத்திற்கும் அறத்திற்கும் அடிப்படை யாகி நின்று உலகத்தைக் காப்பாற்றுவது அரசனது செங்கோல்தான்.

ஆபயன் குன்றும்; அறு தொழிலோர் நூல் மறப்பர்;
காவலன் காவான் எனின்.

அரசன் நீதி முறைப்படி நாட்டைக்காப்பாற்றாவிட்டால் பசுக் களின் பயன் குன்றும்; அந்தணர்கள் அறநூலை மறந்து விடுவர்.

தமிழகத்தில் வேதங்களும், வேள்விகளும், வழங்கி வந்தன; அந்தணர்கள் வாழ்ந்து வந்தனர்; வேள்விகளையும், வேதியர்களையும் காப்பாற்ற வேண்டியது அரசாட்சியின் கடமை; இக் கருத்தை இவ்விரண்டு குறள்களும் கூறின.

அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர் செகுத்து உண்ணாமை நன்று

நெருப்பில்நெய் முதலிய அவிகளைச் சொரித்து ஆயிரம் யாகம் செய்வதைக் காட்டிலும் ஒரு பிராணியின் உயிரைக் கொன்று தின்னாமலிருத்தல் சிறந்தது.

இக்குறளை எடுத்துக்காட்டித் திருவள்ளுவர் யாகத்தைக் கண்டிக்கிறார் என்று கூறுவோர் உண்டு. புலால உண்ணா மையின் சிறப்பைக் கூற வந்ததே இக்குறள் யாகம் தீமை யானது; அதைச் செய்யக்கூடாது என்று இக்குறள் சொல்ல வில்லை. யாகத்தால் வரும் புண்ணியத்தைவிடப் புலால் உண்ணாமையால் வரும் புண்ணியமே சிறந்தது என்றுதான் இக்குறள் உரைக்கின்றது. ஆதலால் இது வேதவேள்வியைக் கண்டிக்கும் குறளாகாது.

> கற்று ஈண்டு மெய்ப் பொருள் கண்டார் தலைப்படுவர்
> மற்று ஈண்டு வாரா நெறி.

கற்க வேண்டய நூல்களைக் கற்று இவ்வுலகிலே உண்மைப் பொருள்களை உணர்ந்தவர் மீண்டும் இவ்வுலகிலே வந்து பிறக்காத நெறியை உணர்வர்.

மறு பிறப்பு உண்டென்பதைத் திருக்குறள் ஒப்புக்கொள்ளு கிறது; இதற்கு இக் குறளே போதுமானதாகும்.

> அறுத்தாறு இது என வேண்டா சிவிகை
> பொறுத்தானோடு ஊர்நதான் இடை.

அறத்தின் பயன் இதுவென்று வாயால் சொல்ல வேண்டாம். பல்லக்கில் ஏறி இருப்பவனோடு, அதைத் தூக்கிச் செல்கின்ற வன் இடையே உள்ள வேற்றுமையால் தெரிந்து கொள்ளலாம்.

இப்பிறப்பிலே நன்மை செய்தவன், வரும் பிறப்பிலே நன்மை யடைவான்; இப் பிறப்பிலே தீவினை செய்தவன் வரும் பிறப்பிலே தீமை யடைவான்; சென்ற பிறப்பிலே அறம் புரிந்தவர்களே இப் பிறப்பிலே இன்புற்று வாழ்கின்றனர்; சென்ற பிறப்பிலே பாவம் செய்தவர்கள் தாம் இப் பிறப்பிலே துன்புற்று வரழ்கின்றனர். இக் கொள்கையையே மேலே

காட்டிய குறள் வலியுறுத்திற்று. நல்வினை, தீவினை என்னும் இருவினைகளின் பயனையும் எடுத்துக் காட்டிய குறள் இது வாகும்.

ஊழில் பெருவலி யாஉள மற்று ஒன்று
சூழினும் தான்முந்துறும்.

ஊழ்வினையை விட மிகுந்த வலிமை யுள்ளவை வேறு எவை யுண்டு? அதன் வலிமையை அழிக்க வேறு வழியை எண்ணி னாலும், அவ்வழியிலும் அவ் ஊழ்வினையே முன் வந்து நிற்கும்.

'எல்லாம் முன்னைய ஊழ்வினையின்படிதான் நடை பெறும்; நம்மால் ஒன்றையும் மாற்ற முடியாது; இக் கருத்தை வலியுறுத்தியது இக்குறள்.

தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான், என்று ஆங்கு
ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை

பிதிரர், தேவர், விருந்தினர், சுற்றத்தார், தான் என்ற ஐவகையிடத்தாரையும் அறநெறி பிழையாமல் காப்பாற்றுவது இல் வாழ்வோன் கடமையாகும்.

பிதிர்க்கள் தென்றிசையில் வாழ்பவர்கள்; இல்லறத்தில் உள்ளவர்கள் செய்யும் சிரார்த்தங்களின மூலமே அவர்கள் நன்மை யடைவார்கள். இக்கருத்தை இக் குறளால் காணலாம்.

அடக்கம் அமரர்உள் உய்க்கும், அடங்காமை
ஆர் இருள் உய்த்து விடும்

அடக்கம் ஒருவனை இன்பந் தரும் தேவர் உலகத்தில் சேர்க்கும்; அடங்காமை தும்பந்தரும் நிறைந்த இருட்டாகிய நரகத்தில் சேர்த்துவிடும்.

தேவர் உலகம்-சுவர்க்கம்; ஆர் இருள்-நரகம்; சுவர்க்கம், நரகம் என்பவை இவ்வுலகத்திற்கு அப்பாற்பட்டவை; தனி உலகங்கள்; இக் கருத்தை அறிவிக்கும் குறள் இது.

யான் எனது என்னும் செருக்கு அறுப்பான்,
வானோர்க்கு உயர்ந்த உலகம்புகும்

யான் என்னும் அகப்பற்றையும், எனது என்னும் புறப்பற்றை யும் ஒழிப்பவன் தேவர்களாலும் அடைய முடியாத உயர்ந்த் வீட்டுலகத்தை அடைவான்.

தேவலோகத்தைவிட சுவர்க்கத்தைவிட உயர்ந்தது மோட்ச லோகம். அது அழியாதது. ஆசையற்றவனே அந்த மோட்சத்தை அடையமுடியும். இக் கருத்து இக்குறளில் அடங்கியிருக்கின்றது.

இவ்வாறு, கடவுள், உருவ வழிபாடு, சாதிவேற்றுமை, வேத வேள்விகள், அந்தணர், மறுபிறப்பு, நல்வினை, தீவினை, ஊழ்வினை, சுவர்க்க நரகம் மோட்சம் முதலியவை களை ஒப்புக்கொள்ளும் குறள் வெண்பாக்கள் பல உள்ளன. திருக்குறளைப் படிப்போர் அவைகளைக் காணலாம்.

இந்திரன், திருமால், கூற்றுவன், சீதேவி, மூதேவி, வானோர் முதலிய தெய்வங்கள் திருக்குறளிலே காணப்படு கின்றன. பேய் பிசாசுகளும் காணப்படுகின்றன.

### முன்னேற்றத்திற்கு வழி

வள்ளுவர் காலத்தில் தமிழ் நாட்டில் சாதிகள் இருந்தன; பிறப்பினால் உயர்வு தாழ்வு உண்டு என்ற நம்பிக்கை இருந்தது. ஆயினும் வள்ளுவர் பிறப்பினால் உயர்வு தாழ்வு உண்டு என்னும் கொள்கையை ஒப்புக் கொள்ளவில்லை.

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் ; சிறப்பு ஒவ்வா
செய்தொழில் வேற்றுமையால்

எல்லா மக்களுக்கும் பிறப்பு ஒரு தன்மையாகும்; பிறப்பிலே வேற்றுமையில்லை. ஆனால் அவரவர்கள் செய்யும் தொழில் வேற்றுமைகளால் சிறப்பின் தன்மை ஒத்திராது; வெவ்வேறாக இருக்கும்.

இக்குறள் மக்களுக்குள் பிறப்பால் உயர்வு தாழ்வில்லை; அவரவர்கள் செய்யும் தொழிலால்தான் உயர்வு தாழ்வுகள் ஏற்படுகின்றன என்று கூறிற்று. மக்கள் அனைவரும் பிறப் பிலே ஒரு தன்மையுள்ளவர்கள் தாம் என்ற உண்மையைக் கூறிற்று.

ஒழுக்கம் உடைமை குடிமை ; இழுக்கம்
இழிந்த பிறப்பாய்விடும்.

ஒழுக்கம் உடைமையே சிறந்த குடிப்பிறப்பின் தன்மையாகும். ஒழுக்கமற்ற செயல் இழிந்த குடிப்பிறப்பின் தன்மையாகி விடும்.

ஒருவன் உயர்ந்த குடியிலே பிறந்தவன் ஆயினும் ஒழுக்கமற்றவனாயின் அவன் தாழ்ந்த குடியினன் ஆகி விடுவான்; ஒருவன் தாழ்ந்த குடியிலே பிறந்தவனாயினும் நல்லொழுக்கம் உடையவனாக இருந்தால் அவன் உயர்ந்த குடியில் பிறந்தவனாகிவிடுவான். இக்கருத்தை இக்குறளில் காணலாம். ஒழுக்கத்தினால்தான் உயர்ந்த குடி, தாழ்ந்த குடி என்ற பெருமை சிறுமைகள் ஏற்படுகின்றன. ஒழுக்க முடையவன் உயர்ந்தவன்; ஒழுக்கமற்றவன் தாழ்ந்தவன்; பிறப்பினால் உயர்வு தாழ்வு பாராட்டுவதால் பயனில்லை. இதுவே வள்ளுவர் கருத்தாகும்.

ஊழில் பெருவலி யாஉள மற்றொன்று
சூழினும் தான் முந்துறும்

என்று ஊழ்வினையின் வலிமையைக் கூறிய வள்ளுவர், அதை மாற்றுவதற்கும் வழி கூறுகின்றார்.

ஊழையும் உப்பக்கம் காண்பர் ; உலைவஇன்றித்
தாழாது உஞற்று பவர்.

எந்தக் காரியத்திலும் சோர்வில்லாமல், காலந் தாழ்த்தாமல் முயற்சி செய்கின்றவர்கள், ஊழ்வினையையும் புறமிட்டு ஓடும்படி செய்வார்கள்.

இதனால் ஊழ்வினையை விரட்டியடிக்க வழி கூறினார். முயற்சியினால் ஊழ்வினையை விரட்டியடிக்க முடியும் என்பதே வள்ளுவர் கருத்து. ''ஆள்வினை உடைமை'' என்னும் அதிகாரத்தில் உள்ளது இக்குறள். ''தலைவிதி என்று எண்ணிக்கொண்டு சோம்பித் திரியாதே; ஊழ்வினையை நினைத்துக்கொண்டு உறங்கிக் கிடக்காதே; முயற்சி செய்! இடைவிடாமல் உழைப்பாய்! சோர்வடையாதே! வெற்றி பெறுவாய்'' இக்கருத்தையே அவ்வதிகாரத்தில் உள்ள பத்துக் குறள்களும் கூறுகின்றன.

யாதானும் நாடாமால்; ஊராமால்; என்ஒருவன்
சாம்துணையும் கல்லாத ஆறு.

கல்வி கற்றவனுக்கு எந்நாடும் தன்னாடு; எவ்வூரும் தன்னூர். இவ்வாறாயின் ஒருவன்தான் சாகும் அளவும் கல்வி கற்காமல் காலங்கடத்துவது ஏன்?

உலக மக்கள் அனைவரும் கல்வி கற்றிருப்பார்களாயின் அவர்கள் ஒன்றுபட்டு வாழ முடியும். கற்றவர்கள் சாதி மத வேற்றுமைகளைப் பாராட்டமாட்டார்கள். மொழி, இனம், நிறம், நாடு என்ற வேற்றுமைகளையும் பொருட்படுத்த மாட்டார்கள்; மனிதத்தன்மை ஒன்றையே பாராட்டி ஒற்றுமை யுடன் வாழ்வார்கள். ஆதலால் உலக ஒற்றுமை தழைத் தோங்க அனைவரும் கல்வி கற்கவேண்டும். இக்கருத்தை எடுத்துரைத்தது இக்குறள்.

இவ்வாறு மக்கள் முன்னேறுவதற்கான உயர்ந்த கருத் துக்களை வள்ளுவர் கூறியிருக்கின்றார். பலவாறு பிரிவு பட்டுக் கிடக்கும் மனித சமூகம் அன்புடன் ஒன்றுபட்டு வாழ் வதற்கான உயர்ந்த கருத்துக்கள் பல வள்ளுவர் வாய்மொழி யிலே காணப்படுகின்றன.

**வள்ளுவர் காலம்**

வள்ளுவர் காலத்தைப் பற்றி--திருக்குறள் தோன்றிய காலத்தைப பற்றி—பல திறப்பட்ட கருத்துக்கள் நிலவு கின்றன. இன்றுள்ள தமிழ் நூல்களில் எல்லாம் காலத்தால் முற்பட்டது திருக்குறள் என்போர் உண்டு. பத்துப் பாட்டு எட்டுத்தொகை போன்ற சங்க இலக்கியங்கள் எல்லாம் திருக் குறளுக்குப் பின்னே தோன்றியவை என்போர் உண்டு. இவர்கள் கூறுவது உண்மைதானா என்பதை நாம் ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

இறையனார் அகப்பொருள் முதலிய தமிழ் நூல்களில் முச்சங்க வரலாறுகள் கூறப்படுகின்றன. அவற்றுள் முதற் சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் இருந்த காலங்களில் இயற்றப்பட்ட நூல்கள் இன்னின்னவை என்று சொல்லப்படு கின்றன; அக்காலத்தில், வழங்கி யிருந்த நூல்கள் இவை இவை யென்றும் சொல்லப்படுகின்றன. திருக்குறள் சங்க கால நூலாகவோ, அதற்கு முற்பட்ட நூலாகவோ இருந்தால் சங்க நூல்களின் வரிசையிலே இச் சிறந்த நூலின் பெயரைச் சொல்லாமல் விட்டிருக்கமாட்டார்கள். ஆதலால் கடைச்சங்க

காலத்துக்குப் பின்னர்தான் திருக்குறள் தோன்றி யிருக்க வேண்டும்.

சங்ககால நூல்களிலே காணப்படும் கொள்கைகளிலே பல, திருக்குறளிலே ஒப்புக்கொள்ளப்படவில்லை; சங்க காலத்து மக்களைவிடத் திருக்குறள் காலத்து மக்கள் ஆத்மீகத் துறையிலே சிறந்து விளங்கினர். ஆதலால் சங்ககாலத் தமிழர் பழக்க வழக்கங்கள் சிலவற்றை வள்ளுவர் கண்டித்துக் கூறுகின்றார். அவைகளைக் கூடா ஒழுக்கம் என்றும் சொல்லியிருக்கின்றார்.

சங்க இலக்கியங்களிலே புலால் உண்ணுவதைப் பற்றிக் கண்டிக்கப்படவில்லை. மதுபானமும் விலக்கப்படவில்லை. சங்க காலத்துத் தமிழர்கள் பெரும்பாலும் புலால் உணவைப் போற்றி உண்டவர்கள். வள்ளல்கள் எல்லாம் மாமிசம் உண்டவர்கள்; மதுவருந்தியவர்கள்; கபிலர், ஔவையார் போன்ற புலவர் பெருமக்கள் எல்லோரும், புலாலும் மதுவுங் அருந்தினார்கள். புலாலும் மதுவும் சிறந்த உணவுப் பொருளாகக் கருதப்பட்டன. வள்ளல்களும், வசதியுள்ள செல்வர்களும். தம்மிடம் வந்த விருந்தினர்க்குப் புலால் உணவும், மதுவும் கொடுத்து மகிழ்ச்சியூட்டுவார்கள். இந் நிகழ்ச்சிகளைப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய சங்க இலக்கியங்களிலே காணலாம்.

புலால் மறுத்தல், கள்ளுண்ணாமை, கொல்லாமை, ஆகிய ஒழுக்கங்கள் சங்க நூல்களில் வலியுறுத்தப்படவில்லை. இவ்வொழுக்கங்கள் திருக்குறளிலே வலியுறுத்திக் கூறப்படு கின்றன. புலால் மறுத்தல் என்பது ஒரு தனி அதிகாரம்; கொல்லாமை என்பது ஒரு தனி அதிகாரம்; கள்ளுண்ணாமை என்பது ஒரு தனி அதிகாரம்.

சங்ககாலத்து நூல்களிலே பலதார மணம் மறுக்கப்பட வில்லை. ஆண்கள் விலைமகளிரை நாடித் திரிவதையும் கண்டிக்கவில்லை. மணம் புரிந்துகொண்ட பெண்கள்தாம் ஒருவனைப்பற்றி ஓரகத்தில் இருக்க வேண்டும்; ஆண்கள் எப்படி வேண்டுமானாலும் வாழலாம் என்ற வழக்கத்தைக் கூறுகின்றன.

திருக்குறள், ஏக தார மணமே சிறந்தது என்ற கருத்தை வெளியிடுகின்றது. 'வாழ்க்கைத் துணை நலம்' என்ற அதிகாரத்தைப் படிப்போர் இவ்வுண்மையைக் காணலாம்.

ஆண்கள் விலைமகளிரை நாடித்திரிவதைத் திருக்குறள் கண்டிக்கின்றது. 'வரைவின் மகளிர்' என்ற அதிகாரத்தைப் படிப்போர் இவ்வுண்மையைக் காணலாம்.

பெண்களுக்குக் கற்பு வேண்டும் என்பது போலவே ஆண்களுக்கும் கற்பு வேண்டும் என்னும் கருத்தும் திருக் குறளில் காணப்படுகின்றது. இதனைப் பிறன்இல் விழை யாமை என்னும் அதிகாரத்தால் அறியலாம்.

மேலே காட்டிய காரணங்களை ஆராய்ந்தால் திருக்குறள் சங்க இலக்கியங்களுக்குப் பின்னே தோன்றியதாகத்தான் இருக்க முடியும். சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய காவியங்களுக்கு முன்னும், பத்துப் பாட்டு எட்டுத் தொகை முதலிய சங்க இலக்கியங்களுக்குப் பின்னும் உள்ள இடைக்காலத்தில் தான் திருக்குறள் பிறந்திருக்க வேண்டும்; திருவள்ளுவர் வாழ்ந்திருக்கவேண்டும்.

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்று தொகை நூல்களை வரிசையாக வைத்து வழங்கு கின்றனர். இவ்வரிசையிலும் பதினெண் கீழ்க்கணக்கு என்று தொகை நூல்களை வரிசையாக வைத்து வழங்குகின்றனர். இவ்வரிசையிலும் பதினெண் கீழ்க்கணக்கு மூன்றாவதாக— சங்க நூல்களுக்குப்பின் தோன்றியதாக-வழங்கப்படுகின்றன. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலே ஒன்றுதான் திருக்குறள். ஆதலால் இவ்வழக்கும், திருக்குறள் சங்க இலக்கியங்களுக்குப் பின்னே தோன்றியது என்ற கருத்தையே வலியுறுத்து கின்றது.

காலத்தால் முற்பட்டது என்பதால் மட்டும் ஒரு நூலுக்குப் பெருமை வந்துவிடாது, காலத்தால் பிற்பட்டது என்பதால் ஒரு நூலின் பெருமை குறைந்துவிடாது. நூலின் சிறப்புக் கருதியே மக்களால் அந் நூல கொண்டாடப்படும். திருக்குறளுக்கு இணையான நூல் எம்மொழியினும் இல்லை. எந்நாட்டினும் இல்லை. ஆதலால் அந்நூல் உலகமக்களால் போற்றப்படுகின்றது.

திருக்குறள் சங்க இலக்கியங்களுக்குப்பின் பிறந்த நூல் என்பதனால், அந்நூலின் மாண்பை யாரும் குறைத்து விட முடியாது. இவ்வுண்மையை உணர்ந்தவர்கள், வள்ளுவர் காலத்தைச் சங்க இலக்கியங்களுக்கு முன் வைத்துக் கூறுவதில் காலங் கடத்திக் கொண்டிருக்க மாட்டார்கள்.

வயிரமும் பொன்னும், ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னே நிலத்திலிருந்து எடுக்கப்பட்டால் என்ன? நேற்றோ அல்லது அதற்கு முன்தினமோ நிலத்திலிருந்து புதிதாக எடுக்கப்பட்டால்தான் என்ன? வயிரம் வயிரந்தான்; தங்கம் தங்கந்தான். ஆதலால் திருக்குறள் எக்காலத்திலே தோன்றிய நூலாயினும் அதற்கு ஒப்பான நூலும் இல்லை; அதைவிட உயர்ந்த நூலும் இல்லை; இது உண்மை.

**உலகம் போற்றும் உத்தமர்**

உலக மக்கள் அனைவர்க்கும் பொது நுலாக விளங்கும் திருக்குறளை ஒரு சிலர் சாதிச்சிறைக்குள் அடைக்க விரும்பு கின்றனர்; சமயச் சிறைக்குள் அடைக்க முன் வருகின்றனர்; மொழி வெறுப்புக்கும், இன வெறுப்புக்குங் கூட இதைக் கருவியாகக் கொள்ளுகின்றனர்.

திருவள்ளுவர் நாத்திகர்; அவர் ஆரிய நாகரித்தை வெறுப்பவர்; திராவிட நாகரித்தைப் போற்றுகின்றவர்; திருக்குறளே தமிழர் சமய நூல்; என்று கூறுகின்றனர்.

இவர்கள் திருக்குறளில் உள்ள சில வெண்பாக்கள் தங்கள் கருத்திற்கு முரணாயிருப்பதைக் கண்டு திகைத் கின்றனர். அச்செய்யுட்களுக்குத் தங்கள் மனம் போனவாறு பொருள் பண்ணுகின்றனர். பழந்தமிழர் நாகரித்துக்கும், பண்பாட்டுக்கும் முரணாகப் பொருள் பண்ணுகின்றனர்.

இவர்கள், 'திருக்குறள்தான் தமிழர் சமயநூல்; திருவள்ளுவர் கூறுவது தமிழர் பண்பாடு; தமிழர் நாகரிகம்; என்று உண்மையாக நம்புகின்றவர்களாயிந்தால், யாரையும் வெறுக்க மாட்டார்கள்; எந்த மொழியையும் தூற்ற மாட்டார்கள். திருக்குறளின் உள்ள கருத்துகளை எல்லா மதத்தினரும் போற்றுகின்றனர். எல்லா இனத்தினரும் ஒப்புக் கொள்ளுகின்றனர். வடமொழி நூல்களும், ஏனைய

மொழி நூல்களும் ஒப்புக் கொள்ளுகின்றன. இவ் வுண்மையை மறந்துவிட்டு, தமக்குப் பிடிக்காத இனத்தினரையும், மொழி யினரையும் திருக்குறளின் பெயரால் எதிர்ப்பதிலே பொருளில்லை.

திருக்குறளையும், திருவள்ளுவரையும். இனவெறுப்புக் கும், மொழி வெறுப்புக்கும் பயன்படுத்துவோர் திருக்குறளுக் குப் பெருமை தருகின்றவர்கள் அல்லர்; திருவள்ளுவரைப் போற்றுகின்றவர்கள் அல்லர். திருக்குறளுக்கும், திருவள்ளுவர்க்கும் மாசு தேடுகின்றவர்களே ஆவார்கள். திருக்குறளுக்கும், திருவள்ளுவர்க்கும் பெருமை தருவதாக நினைத்துக்கொண்டு இவர்கள் செய்யும் காரியங்கள் தவறான வை; தமிழுக்கும், தமிழர்க்கும் இழுக்குத் தரும் செயல் களாகும்.

திருவள்ளுவர் கூறுவதுதான் தமிழர் பண்பாடு; திருக் குறள்தான் தமிழர் சமயநூல் என்பதிலே தவறில்லை. இது உண்மைதான்; மறுக்கமுடியாத கொள்கை. இக் கொள்கை யை உறுதியாகப் பின்பற்றுவோர் உலகமக்களுடன் ஒன்று பட்டு வாழந்தான் முயற்சிப்பார்கள். மக்கள் சமுதாயத்திலே வெறுப்பையும், கலகத்தையும் கிளப்பிவிட முயற்சிக்க மாட்டார்கள். திருக்குறளை நன்றாக நடுநிலையிலிருந்து படிப்போர் இந்த முடிவுக்குத்தான் வருவார்கள்.

திருவள்ளுவர் மனித சமுதாயத்திற்குப் பொதுவான நீதி களையே கூறுகின்றார்; உலக மக்கள் அனைவரும் ஒப்புக் கொள்ளக்கூடிய அறங்களையே உரைக்கின்றார்; அவர் இன்ன இனத்தினர்க்கு, இன்ன மதத்தினர்க்கு இன்ன நீதி என்று பிரித்துக் கூறவில்லை. இந்த உண்மையைத் திருக்குறளைப் படித்தோர்-படிப்போர், எல்லோரும் ஒப்புக் கொள்ளுகின்றனர். இதையும் திருக்குறளைப் படிப்போர் உள்ளத்திலே கொள்ளுவார்களாயின், திருவள்ளுவர் உலக மக்கள் எல்லோருக்கும் பொதுவானவர்; திருவள்ளுவர் உலகம் போற்றும் உத்தமர்; திருக்குறள் உலக மக்களுக் கெல்லாம் பொதுநூல்; என்றுதான் உறுதியாக எண்ணு வார்கள்.

---



## மணிமேகலை காட்டும் மனித வாழ்வு

''வாழ்க்கை நிலையாமை'' என்னும் தலையாய உண்மையைக் காட்டி, துறவு மேற்கொண்ட ஒரு பெண்மணியின் அறவாழ்க்கைச் சித்தரிக்கும் நூலே மணிமேகலை. அமுதசுரபி கொண்டு பசிப் பிணியைப் போக்குவதையே அறப்பணியாகச் செய்து வந்தாள் மணிமேகலை.

மூல நூலில் கூறப்படும் செய்திகள் அனைத்தும் அடங்குமாறு இருபத்தியாறு தலைப்புகளில் தனித்தனி கட்டுரைகளைக் கொண்டு நூலைத் தொகுத்திருப்பதும், தற்கால வாசகர் எளிதில் ஏற்கும் வகை யில் விஷயங்களை வகுத்திருப்பதும் பாராட்டத்தக்கன.

தருக்கங்கள் நிறைந்து தமிழ் இனிமை மிகுந்து காணும் இந்த நூலின் சிறப்பை உள்ளது உள்ளபடி எடுத்துக் காட்டுவதில் ஆசிரியர் வெற்றி பெற்றிருக்கிறார்.

'பாரத நாட்டுப் பண்பாடு' என்ற தலைப்பில் உள்ளவை பிரிவினைப் பித்தர்களைத் தெளிவிக்கும். ஆசிரியரின் தொகுப்புத் திறனும் இனிய எளிய தமிழும் நூலைச் சிறப்பிக்கின்றன. தமிழர் புகழ்ந்து ஆதரிக்கத்தக்க நூல்!

— *தினமணி*

---


**திருமதி சிவகாமி சிதம்பரனார்**

இலக்கிய நிலையம்

19, சவுராஷ்டிரா நகர், 7-வது தெரு

சென்னை - 600 094

*தொலைபேசி : 42 15 25*